# நாதக் கனல்

(சிறுகதைத் தொகுப்பு)

''பீஷ்மன்''



புதுவயல் பதிப்பகம்

சென்னை-600 088

முதற் பதிப்பு 1987


விலை ரூ. 17.50

புதுவயல் பதிப்பகம்
9-2வது தெரு, சௌத் செக்டர், புதுக்காலனி,
ஆதம்பாக்கம், சென்னை-600 088

நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்
137, ஜானிஜான்கான் தெரு,
சென்னை-600 014
தொலைபேசி 82731.

# அஞ்சலி

தமையனாக மட்டும் இல்லாமல் தந்தைப் பாசத்துடன் என் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்து இன்று அமரராகிவிட்ட என் அண்ணன் திரு என். எஸ். கிருஷ்ணனுக்கும், நான் பத்திரிகைகளில் எழுதத் தொடங்கிய நாளிலிருந்து என் முதல் ரசிகையாயிருந்து என்னை ஊக்குவித்து இன்று வானுலகிலிருந்து ஆசிதரும் என் 'மன்னி' திருமதி கே. ஜானகிக்கும் இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

## ஆசிமலர்!

கவிஞரும் எழுத்தாளருமான 'பீஷ்மன்' எழுதியுள்ள நாதக் கனல் எனும் சிறுகதைத் தொகுப்பு வெளிவருவதை அறிந்து மகிழ்கிறேன்.

இதுபோல இன்னும் பல கதைத் தொகுப்பு மலர்களைத் தமிழ்த்தாயின் திருவடிகளில் 'பீஷ்மன்' படைத்து மகிழ இறைவன் அருள்புரிய வேண்டுகிறேன்.

பீஷ்மனுக்கு என் அன்பும் ஆசியும் பாராட்டுதல்களும்

சி. சுப்பிரமணியம்

10-12-87

(முன்னாள் பாரத நீதி அமைச்சர்)

ரிவர்வியூ,
கோட்டூர்புரம்,
சென்னை-600 085.

# தோரண வாயில்

சிறுகதை இருபதாம் நூற்றாண்டில் தோன்றித் தமிழில் அற்புதமாக வளர்ந்து விட்ட ஒரு இலக்கிய வடிவம். உலகச் சிறுகதைகளுடன் ஒப்பு நோக்கக் கூடிய பல சிறுகதைகளைப் படைத்துள்ள பெருமை நம் தமிழுக்கு உண்டு. சிறுகதை ஒரு வட்டத்துக்குள்ளே சுழலவேண்டும். அதிகமான பாத்திரங் கள்—நாடகம் போல—நாவல் போல—இருத்தலாகாது. அந்தப் பாத்திரங்களிலும் ஏதாவது ஒரு—மிஞ்சிப்போனால் இரண்டு பாத்திரங்கள் மீதுதான் எழுத்தாளன் தன் திறமை முழுதையும் உபயோகித்து வாசகர் மனத்தில் அவர்களை நிலைநிறுத்த வேண்டும். சம்பவங்கள் அதிகம் கூடாது. கதையின் உயிராக ஒரு சம்பவம் அமைய வேண்டும். அதுவும் கதையின் இறுதியில் அமைவது சிறப்பு.

சிறுகதை படிக்கும் வாசகன், தமிழ் படிக்கும் மாணவ னல்ல. எழுத்தாளன் தமிழாசிரியனுமல்ல. அதனால் நடை இயல்பாக இருக்க வேண்டும். கண்முன் காட்சி நடப்பது போன்ற உணர்வு வாசகனுக்கு ஏற்பட வேண்டும். அதேசமயம் மொழிமீது பற்றும் எழுத்தாளனுக்கு வேண்டும். வேண்டுமென்றே ஆங்கிலச் சொற்களை—மணிப்ரவாள நடையைப் புகுத்துவது தவறு. படிக்கத் தூண்டுவதாக நடை அமைய வேண்டும். சிறுகதையைத் தொய்வின்றி, படிக்கிறோமே என்ற ஆயாசமுமின்றி வாசகனைப் படிக்கச் செய்தாலே ஓரளவு வெற்றிதான். படிக்கும் போதே வாசகன் கதையுடன் ஒன்றிப் போய், கதை முடிந்து விட்டதே என்று ஏங்குவானானால் எழுத்தாளனுக்கு அது சிறந்த வெற்றி. இதனிலும் மேலாக நாம் படிக்கிற கதையில் வரும் பாத்திரங்கள், நம்மோடு வாழ்கிறார்கள். அவர்களை நாம்

எங்கோ பார்த்திருக்கிறோம், கவனிக்கத் தவறி விட்டோம் என்ற உணர்வு வாசகனுக்கு ஏற்படுமானால் அந்தச் சிறுகதை வெற்றியின் உயர்ந்த படிகளில் உள்ளதாகும்.

படித்து முடித்தபிறகும், பல நாட்கள் அந்தச் சிறுகதை பற்றியே நினைக்கச் செய்யும், எத்தனை காலம் கடந்தும் நினைக்கும் போதெல்லாம், நெஞ்சில் நீங்காத இடம் பெறும் சிறுகதைகள் உண்டு. சிறுகதைகளில் வரும் சில சொற்கள் கூட உண்டு. இவை சிரஞ்சீவிச் சிறுகதைகள்.

சிறுகதைகள் பற்றிய இத்தனை கணிப்புக்களுடன்தான் நான் நண்பர் நா. சி. வரதராஜன், பீஷ்மனின் 'நாதக்கனல்' சிறுகதைத் தொகுப்பைப் படிக்கத் தொடங்கினேன். ஒரு இரண்டு மணி நேரம் அவரது சிறுகதைக் களத்தில், அவரது பாத்திரங்களுடன், நானும் ஒரு பாத்திரமாய் அவர்களைத் தொடர்ந்தேன். நல்லதொரு சிறுகதைத் தொகுப்பைப் படித்த நிறைவு எனக்குக் கிடைத்தது. அதை உங்களுடன் வார்த்தைகளால் பகிர்ந்து கொள்கிறேன்.

**நாதக் கனல்** முதல் கதை. முத்தான கதையும்கூட. கோண்டு பாகவதரிடம் சங்கீதம் கற்கிறான் கண்ணன். நல்ல உழைப்பாளி. ரமணி என்ற சிறு பெண்ணும் அதே பாகவதரிடம் பாட்டுக் கற்க வருகிறாள். அவள் கருவிலே திருவுடையவள். நல்ல கற்பூரம் போல, அவளுக்குச் சங்கீதம் பற்றிக் கொள்கிறது. போட்டி மனப்பான்மை—ஒரு தாழ்வுணர்ச்சியை கண்ணனுக்குத் தந்து விடுகிறது. அவன் பித்தனாகவே மாறி ஒரு தாடிவாலாவுடன் ஊர் ஊராக அலைகிறான். இதுதான் கதை. இதை எப்படியெல்லாம் அழகுபடுத்தி இருக்கிறார்?

கவிஞரல்லவா! ஒரு கவிதையைப் படிப்பது போன்ற உணர்வையே ஏற்படுத்துகின்றன ஆரம்ப வரிகள்! "அவனுக்குள் உறங்கிக் கிடந்த தன்னிலனவு மெல்லச் சிலிர்த்தெழுந்தது. ஒளிக்கரையிட்ட மேகப்புடவைகள்

வானில் பறந்தன: அரைச் சந்திரனின் மங்கலொளி மேகத் திரையின் வழியே ஊடுருவி ஊமை நிலவாகப் பூமியைக் கவிந்திருந்தது.'

பாகவதர் தனது இரு சீடர்களையும் எப்படி எடை போடுகிறார்!

'பேஷ்! நல்ல சாதகம் செய்திருக்கிறாய். சங்கீத இலக்கணம் அப்படியே பேசுகிறது'—இது கண்ணனைப் பற்றி.

'ஆனால் ஒரு விஷயம் கண்ணா! எவ்வளவு சாதகம் செய்துங்கூட உன்னால் ஒரு வரம்புக்குள்தான் சுற்றிவர முடிகிறது. ரமணி அதிருஷ்டசாலி. பிறவியிலேயே என்ன மனோதர்மம்! அநாயாசமான கற்பனை! சுயமான ராகவிஸ் தாரம்!'

அர்ப்பணித்த சொற்களில் வயதான ஒருபெரியவரை— கிழவரையும்—அவரது மனைவியான கிழவியையும் சந்திக் கிறோம். வெளியில் அடிக்கொருதரம் சண்டையிடும் அந்த தம்பதிகளிடம் இருந்த பிணைப்பு, பாசம், இவற்றோடு, பரிவுடன் பழகிய முதல் மனைவி உமாவை இழந்து ஒரு வருடம் முடிவதற்குள் வேறொரு திருமணம் செய்து கொண்டு கொஞ்சங்கூட மனச்சஞ்சலம் இல்லாமல் அப்பாவைப் பார்க்கவரும் 'தியாகு'வையும் அக்கதையில் நாம் சந்திக்கிறோம்.

'பீடமும் படிகளும்' நாட்டு நடப்பை அப்படியே படம் பிடித்துக் காட்டும் கதை. தேர்தலில் தன் தலைவர் வெல்ல வேண்டும் என்பதற்காக உயிரைக் கொடுத்து உழைக்கிறான் நாச்சிமுத்து. எதிர்க்கட்சிக் குண்டர் தலைவன் ஆறுமுகத் துடன் அவன் மோதல், தேர்தல் கூட்டத்தில், கழுதைகளை விரட்டிக் குழப்பம் விளைத்தது, இவை தத்ரூபமாக வர்ணிக்கப் படுகின்றன. சோடாபுட்டியால்மண்டை இழிந்து மருத்துவ

மனையில் படுத்திருக்கும்போது, வென்று விட்ட தன் தலைவர் ஆளும் கட்சியாகி விட்ட எதிர்க்கட்சியில் சேர்ந்து விட்டார் என்று தெரிகிறது நாச்சிமுத்துவுக்கு. தலைவரைப் பாராட்ட வாங்கிய மாலையை 'அந்த ஐயா இப்ப நம்ம ஐயா இல்லை' என்று மனைவியிடம் கூறி குளத்தங்கரைப் பிள்ளையாருக்குப் போட்டு விட்டுப் போகலாம் வா' என்று அழைப்பதுடன் கதை நிறைவு பெறுகிறது—கதை மட்டுமா? உள்ளமும் தான்!

**திருஷ்டி:-** அற்புதமான சிற்பக் கலைஞன், நாட்டிய வாணியான தன் காதலியையே உயிர்ச் சிற்பமாக்குகிறான் ரசிகர்களின் திருஷ்டியே அவள் உயிருக்கு எமனாகி விடுகிறது

**பழுத்த இலை:-** தன் திரண்ட சொத்துக்கு தன்னுடன் பிரேமையுடன் பழகிய தாசி ரஞ்சிதத்தின் மகன், இல்லை, தனக்குப் பிறந்த தன் மகன்தான் வாரிசு என்று சொல்லிக் கொண்டு, 'சம்பிரதாயமாவது மண்ணாங்கட்டியாவது' என்று பல ஆண்டுகள் பிரிவுக்குப் பின் அவளது வீட்டுக்கு கம்பீர மாக நடைபோடும் 'பழுத்த இலையை' கதை படம் பிடித்துக் காட்டுகிறது. சீர்திருத்தம் செய்கிறேன் என்று தம்பட்ட மடிக்காத கதை!

**நம்பிக்கையின் மறுபுறம் :** வனஜாவின்கணவன் அவளிடம் உயிரையே வைத்திருந்தான். சுற்றுலாவுக்குச் சென்ற அவன் திரும்பி வரவில்லை. ஒரு மாதத்தில் வரவேண்டியவன் ஐந்தாண்டுகள் ஆகியும் வரவில்லை. ஆனால் அவன் வருவான்! வருவான் என்ற நம்பிக்கையிலேயே வாழ்ந்து வந்தாள் அவள். அவள் குங்குமம் இட்டுக் கொள்வதைத் தான் எப்படி வருணிக்கிறார் ஆசிரியர்! 'ஹி கம்ஸ், கம்ஸ் எவர் கம்ஸ்' என்ற கீதாஞ்சலி வரிகள் இக்கதையில் மட்டுமா? நம் இதயத்திலும் எதிரொலிக்கின்றன. இக்கதையில் வரும் வனஜாவின் அண்ணன் மறக்க முடியாத பாத்திரம்.

**மூத்த பையன்** : கோயிற்பூசை செய்யும் சபேசய்யர் கட்டிய சிறிய கோவிலில் உள்ள முருகன் தான் அவரது முதற் குழந்தை. அந்த மூத்த பையனிடம் அவருக்கிருந்த பாசத்தை பிணிப்பை கதை என்னமாய்க் கூறுகிறது. முருகன்—கடவுள்—தெய்வம்—பக்தி பேசக்கூடாது. அவன் சபேசய்யரின் மூத்த மகன்—மகனேதான்!

**நெஞ்சும் நினைவும்** : எழுத்தாளர் மார்க்கண்டேயன் இக்கதையில் அறிமுகமாகிறார். பரிமளம் அவர் வாழ்வில்-இலக்கிய வாழ்விலும் தான் மணம் சேர்க்கிறாள். அவரது எழுத்தும் சதைப்பற்றுள்ளதாக ஆனபிறகு யதார்த்தம் என்று சொல்லிக் கொண்டு ஆண் பெண் உறவை அசிங்கப்படுத்த இலக்கியப் போர்வை போர்த்துக் கொள்ளும்போது உலகம் 'ஒஹோ' வென்று அவரைப் புகழ்ந்தாலும், மனைவி சீறு கிறாள்.

"வீட்டை வருணிப்பதென்றால்
சாக்கடையை வருணிப்பார்களா?
பெண்ணையும் பெண்மையையும் பற்றி இப்படியா, எழுதுவது?"

இதுபோதும்......இத்தகைய எழுத்து வியாபாரிகளுக்கு

**அன்பெனும் பெருவெள்ளம்** : ஆடு மேய்க்கும் தங்கத்துக்கும், சிராமனுக்கும் (குரங்கென்றால் அவளுக்குக் கோபம் வந்து விடும்!) ஏற்படும் நட்பு—பாசமாக—பந்தமாக மாறுவது. தங்கத்தின் திருமணம் காரணமாக அந்தப் பிணிப்புக்கு வரும் சோதனை, பேச முடியாத அனுமாரை—சிராமனை மறக்க முடியாத பாத்திரமாக்கி இருக்கிறார் பீஷ்மன்.

**நியூஸ் முதல் ஜனகணமன வரை** : கொஞ்சம் ஜிலுஜிலுப் பான கதை. டைப்ரைட்டிங் மாணவி சுமி, உண்மையாகவே காதலன் என்று நம்பிய அவன்,கல்யாணம் வெறும் நியூசென்ஸ்

சுமி... எனக்கு ஒருநல்ல பிரண்ட் நீ'' என்று ஏர்கண்டிஷன் தியேட்டரில் படம் பார்த்து முடிந்தபின் கூறும்போதுதான் அவனது சுயரூபம் அவளுக்குத் தெரிகிறது. இணையாக வந்தவள். நான் போய்க் கொள்கிறேன் என்று வீட்டுக்கு நடக்கிறாள் தனியாக.

**ராமுடு :** சமையல் எடுபிடி ஆள். சென்னை வந்த இடத்தில் பழைய நண்பன் பாலு. பணக்காரனாக காரும் பங்களாவுமாக இருப்பதைப் பார்க்கிறான். ராமுடு அவனது கல்யாணத்துக்கு விடாப்பிடியாக அழைத்துப் போகிறார்கள். கவனிக்கப்படாமல் இருந்த அவன் எல்லோர் கவனத்துக்கும் உள்ளாகிறான், ஒரு நிகழ்ச்சியால் 'அப்பாவி'யான ராமுடுவின் பாத்திரப் படைப்பு இக்கதையில் சிறப்பானது.

**பூர்வாசிரமம் :** சுதாகர் மனைவி இழந்தவன். இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ளச் சுலபமாய்ச் சம்மதிக்காத அவன் வசந்தியை—அவள் மணவாழ்வு அரும்பும்போதே கருகியது—கைப்பிடிக்கிறான். இவர்கள் மணவாழ்வில் முதல் மனைவியுடன் ஒப்பிட்டுப் பேசும்போது வசந்தி துணுக்குறு கிறாள். இது எத்தனை இயல்பானது என்பதை அவள் உணருகிறாள் பின்பு. வலுவில்லாத அஸ்திவாரத்தில் எழுந்த கட்டிடம், ஒப்பனையால்—அழகு பெறுகிறது.

**அன்பின் பரிசு :** தனது அழகுக் குழந்தை பருவமங்கை யானால் எப்படி இருப்பாள்என்று மனைவியின் தூண்டுதலால் ஓவியம் வரைகிறான் கலைஞன். அந்தக் குழந்தை—குழந்தை யாகவே உலகை விட்டுப் போய் விடுகிறது. வயதான பின்னர் கிழவராக எதிர்வீட்டுப் பெண்ணிடம் தன் ஓவியத்திலுள்ள அத்தனை அழகையும்—அப்படியே பார்க்கிறார் கலைஞர். கிழவர் அந்தப் பெண்ணிடம் தந்தைப் பாசத்தைக் கொட்டு கிறார். அபவாதம் தான் அன்புக்குப் பரிசாகக் கிடைக்கிறது, நெஞ்சை நெகிழ்விக்கும் முடிவு.

**ஜோடிப் பறவைகள் :** வேப்ப மரத்தின் தாழ்ந்த கிளை யொன்றில் இருக்கும் காக்கை ஜோடியைக் கதையின் ஆரம்பத்தில் அறிமுகப்படுத்தி தண்டபாணி—செண்பகம் காதல் கதையைக் கூறுகிறார் ஆசிரியர். இக்கதையில் வரும் டாக்டர் கதைக்குள்ளும் இருக்கிறார். வெளியில் நின்று நம்முடனும் பேசுகிறார்.

கவிதையோ, கதையோ, பேச்சோ, வெறும் உரையாடலோ, எதுவாக இருந்தாலும் அதில் உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இறங்குபவர் நண்பர் 'பீஷ்மன்'. மேல் பூச்சுக்காக எதையும் அவர் செய்வதில்லை. சொல்வதில்லை.

நாற்பது ஆண்டுகளாகச் சிறுகதை உலகில் இருந்து வருபவர் அவர். கதைகள் வெளிவந்த ஆண்டும் தரப்பட் டிருப்பதால்! சிறுகதைப் போக்குகள் எப்படி மாறி வந்திருக் கின்றன வென்பதையும் இத்தொகுப்பில் நாம் காண முடிகிறது.

நல்ல நடையால், பாத்திரப்படைப்பால், இயல்பான உரையாடல்களால் தமிழகத்தில் வெளிவந்துள்ள நல்ல சிறுகதைத் தொகுப்புக்களில் இது ஒன்று, என்ற சிறப்பை இந்நூல் பெறும் என்பதில் எனக்குச் சிறிதளவும் ஐயம் இல்லை.

**இரா. சுராஜ்**
தலைவர்
பாரதி கலைக்கழகம்

சைதாப்பேட்டை, சென்னை
10-12-87

# பன்னீர்த் தெளிப்பு—1

எண்ணுவதெல்லாமே
    இலக்கியமாய், அவ்வயலில்
நண்ணுவ தெல்லாமே
    நலம் எனுமாய்ப்—பண்ணுவந்த
பாட்டும் கதையும்
    படைப்பான், வரதனெனும்
வீட்டுமன் சொல்லே
    விருந்து.

நாதக் கனலாம் ஓர்
    நல்ல சிறுகதைநூல்
போதக் கனல் பீஷ்மன்
    பூத்தளித்தான்—வேதக்
கனலாய்அந் நூல்தான்
    கதைத் தமிழ்க்குச் செல்வம்
எனலாய்க் கிடைத்த
    எழில்!

—சந்தக் கவிமாமணி தமிழழகன்

# நாதக் கனலுக்குள் நந்தனார் ஆகேனோ!

கவியரசர் இளந்தேவன்

காட்டுக் கனலுக்குள்
காணாத தகிப்பையெலாம்
பாட்டுக் கனலுக்குள்
பரவவிடும் பாவாணன்
கூட்டுக் கனலுக்குள்
குளிர்காயும் ஆன்மாவை
ஏட்டுக் கனலுக்குள்
எழுப்புவதைக் காணீரோ!

'பால்' பிடித்த பாதகர்கள்
பரவவிடும் நோய்ப் புழுவால்
சீழ் பிடித்த மானுடத்துச்
சீக்குக்குத் தான்நொந்து,
வாள்பிடித்த பீஷ்மன் எனும்
வைத்தியனால் இலக்கியத்தைக்
கோள்பிடித்த தோஷமெலாம்
குலையுமெனக் கூறீரோ!

பத்தோடு ஒருநான்கைப்
படைத்தளித்த என்பாட்டன்
வித்தோடு பைதூக்கி
விளைநிலத்தைத் தேடுகிறான்!
எத்தாலும் திருந்தாத
என் நாட்டு இலக்கியமே
கற்றாழை தனைவிடுத்துக்
கழிநியென ஆகாயோ!

கட்டைவிரல் தொண்டாலும்
காதலுறத் தழுவுகிற
சுட்டு விரல் தொண்டாலும்
சுடர் எழுத்துத் தோன்றுவதால்
இட்டமுடன் மோதிரங்கள்
இரண்டினுக்கும் இடநினைத்தால்
மற்றவிரல் மூன்றினுக்கும்
மனஸ்தாபம் வாராதோ!

ஐயன் விரலுக்கேன்
ஆணிப்பொன் மோதிரங்கள்!
வையம் துளைத்து,
வாரிதியைக் கொட்டிவிட்டுப்
பெய்யும் கதிர்பூசிப்
பிறைநிலவை மேல்பதித்துச்
செய்யும் ஒரு மோதிரத்தைச்
செய்தளிக்க மாட்டேனோ!

வேதக் கனல்போலே
வெளிச்சத்தைத் தரும் பீஷ்மன்
மேதைக் கனல்கொண்டு
மேல் சமைத்த கதை படித்தால்
கீதக் கனல் வளர்த்துக்
கிறுகிறுக்கும் இளந்தேவன்
நாதக் கனலுக்குள்
நந்தனார் ஆகானோ!

என்றும் கனிகொடுக்கும்
இயற்றமிழின் கற்பகமாய்
அன்று படைத்தவற்றை
அச்சேற்றிச் செல்லப்பர்
இன்று வழங்குகிறார்!
இம்முயற்சி பொன்கொழிக்க
நின்று தமிழ்வளர்க்கும்
நெஞ்சத்தால் வாழ்த்தேனோ!

ஓம்

நமசிவாய வாழ்க!

வாழிய செந்தமிழ். வாழ்க நற்றமிழர்.

# நிறைகுடம்

## (சௌந்தரா கைலாசம்)

இலக்கியம் என்பது எழிலும் மணமும் இணைந்த ஒரு பெரிய பூஞ்சோலை!

அங்கு காப்பியங்கள் மணம் பரப்பும்! கட்டுரைகள் ஒளி படைக்கும் நாடகங்கள் நலங்குவிக்கும்! நற்கதைகள் பொற் புதிர்க்கும்.

இவை அனைத்துமே பாரத மண்ணில் பண்டு தொட்டே பயிராகி வருகின்ற நறுமலர்கள் தாம்!

இராமாயணமும் மகாபாரதமும் இந்த நறுமலர்கள் பூத்துக் குலுங்கிப் பொலிகின்ற பூஞ்சோலைகளே!

இவற்றில் நாம் காவியத்தைச் சுவைக்கிறோம்! கவிதை களை ரசிக்கிறோம்! நாடகத்தைப் பார்க்கிறோம்! நல்ல நல்ல கதைகளைப் படித்து மகிழ்கிறோம்!

கதைக்குள் கதையாகக் காப்பியங்கள் சொல்கின்ற கதைகளுக்குக் கணக்கே இல்லை!

செந்தமிழ்ச் சங்க நூல்களும் சிறந்த கதைகளைக் கூறுகின்றன!

பிற்காலத்தில் வீரமாமுனிவர், சந்தியாகோ சந்திர வரணம் பிள்ளை, வீராசாமி செட்டியார், செல்வக் கேசவராயர் ஆகியோரும் கதைகள் சொன்னார்கள்.

ஆனால் இந்தக் கதைகள் எல்லாம் சிறுகதை என்னும் வட்டத்துக்குள் அடங்குவதில்லை!

இவற்றின் உயிரோட்டமாக நீதி போதனை இருக்கும்; அல்லது சில குறிப்பிட்ட நோக்கங்கள் இழையோடி இருக்கும்.

சிறுகதைகள் அப்படியல்ல.

மலைக்கோயிலில் உள்ள ஒரு சிறு சாளரத்தின் வழியே பார்த்தால் ஒரு திசையைத்தான் பார்க்கலாம். ஆனால் அந்தப் பார்வை பரந்து விரிந்து பார்க்கக் கூடியதாக இருக்கும்.

அந்தச் சாளரத்தைப் போன்ற ஓர் அளவுக்குட்பட்ட சிறு நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு மனித வாழ்க்கையின் ஒரு பக்கத்தைத் தெளிவாகப் பார்க்கச் செய்வது தான் சிறு கதை.

அருமையான இன்னிசை என்னவிதமான அநுபவத்தைத் தருகிறதோ, அழகுமிக்க நாட்டியம் என்னவிதமான இன்பத்தைத் தருகிறதோ, அற்புதமான ஓவியம் என்ன விதமான உணர்வைத் தருகின்றதோ, அந்த அநுபவத்தை, அந்த இன்பத்தை, அந்த உணர்வைச் சிறுகதைகளும் தர வேண்டும் என்பது மேனாட்டறிஞர்களின் எதிர்பார்ப்பு.

இந்த எதிர்பார்ப்பின் அடிப்படையிலே தான் அவர்கள் சிறு கதைகளுக்கு இலக்கணம் வகுத்தனர்.

மேற்கத்திய மொழிப் பயிற்சியின் காரணமாக நம் நாட்டிலும் அப்படிப்பட்ட கதைகளை எழுத வேண்டும் என்ற ஆர்வம் தோன்றி வளர்ந்தது.

இருபதாம் நூற்றாண்டு அதற்கு உரமிட்டுப் பயிர் செய்து மரமாக வளர்த்திருக்கிறது.

தமிழ் மண்ணிலே சிறு கதைப் பயிருக்கு முதலிலே நீர் பாய்ச்சியவர் தேசபக்தர் வ.வே.சு. ஐயர் அவர்கள்.

'மங்கையர்க்கரசியின் காதல்' நமக்கு அவர் பறித்தளித்த முதற்கனி.

அதன்பின் கிடைத்த கனிகள் பற்பல! பல மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் சிறுகதைப் பயிரைக் கண்ணுங் கருத்துமாகப் போற்றிப் பாதுகாத்தனர்– பாதுகாத்து வருகின்றனர்.

ஒரு மரத்திலிருந்து கனி உதிர்கிறது. அதன் வித்துக்கள் காற்றினாலோ, நீரினாலோ, விலங்குகளினாலோ, பறவை களினாலோ, அல்லது மனிதர்களாலோ பல இடங்களுக்குப் பரவுகின்றன.

அவற்றுள் ஒன்று நன்கு பண்பட்ட நிலத்தில் விழுமே யானால் செழித்து வளர்ந்து பயனளிக்கிறது. தரிசு நிலத்திலே விழுந்து விட்டால் பயனற்றதாகி விடுகிறது.

இதுபோலவே, உலகில் நொடிக்கு நொடி நிகழ்கின்ற நிகழ்ச்சிகளின் அடிப்படையில் எழுகின்ற கருப் பொருள்களில் ஏதேனும் ஒன்று பக்குவப்பட்ட யாருடைய இதய பூமியிலாவது எவ்வகையிலாயினும் விழுந்து விடும் போது அற்புதமான கவிதையாகவோ கதையாகவோ உருப் பெறுகிறது.

நன்கு பண்பட்ட நெஞ்ச நிலத்தின் சொந்தக்காரர் நம் 'பீஷ்மன்!'

வாழ்க்கை நாடகத்தின் பற்பலவிதமான நிகழ்ச்சிகளை நோக்கரிய நோக்கோடும், நுணுக்கரிய நுண்ணுணர்வோடும் கண்டு தன் இதய பூமியில் பதித்துக் கொண்டு பயிர் செய்து பழம் பறித்து, நமக்குப் படைத்திருக்கும் இவரை எப்படிப் பாராட்டுவது என்று அறியாமல் திகைக்கிறேன்.

கவிதை போன்றது சிறுகதை என்பார்கள். பீஷ்மன் ஒரு பிறவிக் கவிஞர்! ஆதலால் அவருடைய ஒவ்வொரு கதையும் உணர்ச்சி மிக்க கவிதையாகவே உயர்ந்து நிற்கிறது.

இத்தொகுப்பில் பதினான்கு கதைகளும் அற்புதமான கதைக்கரு, அழகான தமிழ் நடை, ராக பேதமில்லாத முடிவு அமைந்தவையாக மிளிர்கின்றன.

அனைத்துக்கும் மேலாக 'பீஷ்மன்' ஒரு உணர்வுமிக்க சிறந்த ரசிகர்! எனவே மனித மனத்தின் ஆழத்தை நன்றாகப் புரிந்து கொண்டு அவரால் எளிதில் கதை சொல்ல முடிகிறது.

அவர் சொல்லியுள்ள கதைகள் எனக்குள் ஏற்படுத்திய பாதிப்பை நீங்களும் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? சிலவற்றைக் கூறுகிறேன்.

ரமணியின் நாதக்கனலால் கண்ணனின் ஆழ மனத்துக்குள் எழுந்த அவலச் சிரிப்பு என்னை என்னவோ செய்துவிட்டதே! தோல்வியின் பரிசே சிரிப்புத்தானோ என்று எண்ண வைத்துவிட்டதே!

தன்னிடமிருந்த சொற்களை எல்லாம் தன் அன்பு மனைவிக்கே அர்ப்பணித்து வெறுமையாகிவிட்ட அந்தக் கிழவர் என்றன் மனத்திரையிலே வரையப்பட்ட மாறாத சித்திரமாகவல்லவா காட்சிதருகிறார்!

படிகளை உதைத்துத் தள்ளிவிட்டுப் பீடத்தில் ஏறி உட்கார்ந்து கொண்ட நல்லசாமியை எண்ணி நாச்சிமுத்து மட்டுமா?—நானும்தான் வேதனைப் பட்டேன்—வேதனைப் படுகிறேன்.

பாலிகைக்கும் சஞ்சயனுக்கும் திருஷ்டி சுற்றிப்போட வேண்டும் என்னும் ஆசை கொப்பளிக்க நான் மாமல்லபுரம் போகத் துடிக்கிறேன்!

லட்சியவாதியைப் போலத் தம் பாதை வழியே நிறைந்த மனத்துடன் நடந்து கொண்டிருந்த அவரின்—அந்தப் பழுத்த இலையின்—ஏக்கமும், ஏக்கம் தெளிந்த உறுதியும் எல்லாருக்கும் வந்து விடுமா என்ன என்று எண்ணிப் பார்க்கிறேன.

''அந்தக் கடிதம் மட்டும் வராமல் இருந்திருந்தால் 'ஹி கம்ஸ், கம்ஸ், எவர் கம்ஸ்' என்பதைத் தன் அண்ணன் படிக்க, தங்கை வனஜா கேட்டுக் கொண்டே இருந் திருப்பாளே—அவளுடைய நம்பிக்கையின் மறுபுறம் வெறுமை யாகப் போயிருக்காதே—பாழாய்ப் போன கடிதம் ஏன் வந்து தொலைத்தது.'' என்று ஆதங்கப்படுகிறேன்.

இப்படி ஒவ்வொரு கதையும் ஒவ்வொருவிதமாக என்னை உணரவைத்து விட்டது—உள்ளத்தைத் தொட்டு விட்டது.

பொதுவாகச் சொன்னால், எடுத்த புத்தகத்தைக் கீழே வைக்க முடியவில்லை.—அதிலிருந்து என் இதயத்தைக் கழட்டிக் கொள்ள இயலவில்லை!

பெருமை தருகின்ற சிறுகதைகளைத் தந்திருக்கும் 'பீஷ்மன்' மேன்மேலும் சிறுகதைகள் எழுதி—காப்பியங்கள் படைத்துத் தமிழன்னைக்கு அணி சேர்க்கும்படி இறைவன் அருள் பாலிப்பான்.

வாழ்க 'பீஷ்மன்'—வளர்க அவரின் தமிழ்த் தொண்டு என்று நிறைகுடம் ஏந்தி நிறைந்த மனத்துடன் வாழ்த்துகிறேன்.

இன்னொன்று, சிறந்த சிறுகதைகளைத் தொகுத்து அழகுடன் புத்தகமாக வெளிக் கொணர்தல் மிக்க கடின மானது. அதைச் செய்திருக்கும் புதுவயல் பதிப்பகத்தாருக்கு என் பாராட்டுகள்.

நாதன் தாள் வாழ்க!

வாழிய பாரத மணித்திரு நாடு.
வந்தே மாதரம்: வந்தே மாதரம்!

# அரங்கம்

ஒரு தங்கச் சிலைக்கு அணி மணிகள் பூட்டி அலங்காரம் செய்தால் எப்படியிருக்கும்?

ஒரு சிறு கதை போல இருக்கும்!

ஒரு கருப் பொருளுக்கு, கற்பனை அணிகளைப் பூட்டி மொழியால் அலங்கரிப்பது தான் சிறுகதை.

இலக்கியம் தொடங்கிய காலத்திலேயே கதைகள் எழுந்தன என்றாலும், அவையெல்லாம் 'சிறுகதை' இலக்கணத்துக்குள், வருவதாகக் கருதப்படுவதில்லை பல கருப்பொருள்களைத் தாங்கி நீதியையோ அல்லது வேறொரு நோக்கத்தையோ வலியுறுத்துவதற்காகச் சொல்லப் பட்டவை, மனித வாழ்க்கையை—மன ஆழத்தை—அதன் உணர்வுகளைத் தெரிவிப்பன அல்ல.

ஆனால் சிறுகதையின் முக்கியமான இலக்கணமே மனிதனின் ஆழமான உணர்ச்சியை வடிவமைப்பது தான்.

இத்துறையிலே வெற்றி பெற்றுள்ள, குறிப்பிடத்தக்க, சிறந்த தமிழ் எழுத்தாளர்களுள் திரு. 'பீஷ்ம'னும் ஒருவர்.

'பீஷ்மன்' கதாசிரியர் மட்டுமல்ல: கவிஞருமாவார்!

அவர் எழுதியுள்ள சிறு கதையைப் படித்தால் அழகான கவிதையைப் படித்துணர்ந்த மனநிறைவு கிடைக்கும்.

அவருடைய பதினான்கு சிறுகதைகளை இத்தொகுப்பில் தந்திருக்கிறோம்.

இந்த அரிய வாய்ப்பினை அளித்த திரு. 'பீஷ்ம'னுக்கு எங்கள் மனப்பூர்வமான நன்றி.

ஆசிமலர் தூவியுள்ள அறிஞர் முன்னாள் பாரத நிதி அமைச்சர் உயர்திரு **சி. சுப்பிரமணியம்** அவர்களுக்கும், தோரண வாயில் அமைத்துள்ள பாரதி கலைக் கழகத் தலைவர் திரு. **சுராஜ்** அவர்களுக்கும் நிறைகுடத்துடன் வாழ்த்தியுள்ள தமிழ்ச் சான்றோர்—**கவியரசி சௌந்தரா கைலாசம் அம்மையார்** அவர்களுக்கும், பன்னீர் தெளித்த கவிமாமணிகள் **தமிழழகன்**, இளந்தேவன் ஆகியோருக்கும் என் அன்பு கலந்த நன்றி.

அழகாக அச்சிட்டுதவிய 'நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்' உரிமையாளர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் மேலட்டை ஓவியம் வரைந்து தந்த திரு. குமார் அவர்களுக்கும் பெரிதும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இப்புத்தகம் எங்கள் முதல் முயற்சி. வாசகப் பெருமக்கள் எங்களை வாழ்த்தியருளி ஆதரிக்க வேண்டுமெனப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

தமிழன்பர்களே!

அழகுமிக்க அரங்கத்துக்கு வாருங்கள்.

அற்புதமான சிறுகதைகளைப் படியுங்கள்.

ஆதம்பாக்கம்
10-12-87

புதுவயல் பதிப்பகத்தார்

# கட்டியம்!

1948 இலிருந்து இன்று வரை நான் எழுதியிருக்கும் பல சிறுகதைகளிலிருந்து 14 சிறுகதைகளைத் தேர்ந்தெடுத்து இத்தொகுப்பில் வெளியிட்டிருக்கிறேன். இக் கதைகளில் வரும் பெயர்கள் தாம் கற்பனையே தவிர, கதைகள் எல்லாமே கற்பனை என நான் கூறமாட்டேன். என் வாழ்வில், நான் பழகிய அல்லது சந்தித்தவர்கள் தாம் இக் கதைகளில் வருகிறார்கள். நான் அநுபவித்த அல்லது யாரோ அநுபவித்து என்னிடம சொன்ன நிகழ்ச்சிகள் தாம் இக் கதைகளுக்கு அடிப்படையாக இருக்கின்றன.

இலக்கியத்தின் நோக்கம் மனித நேயமாக, இன்னும் சொல்லப் போனால், ஆன்ம நேயமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறவன் நான். இக்கதைகள் இந்த நேய உணர்வைப் படிப்பவர்களிடம் ஏற்படுத்தினால் அதுதான் என் வெற்றி.

இக்கதைகளைத் தங்கள் பத்திரிகைகளில் வெளியிட்டு உதவிய பத்திரிகை ஆசிரியர்களையும், என் எழுத்துக்கு ஆதரவு தந்த என் சக எழுத்தாள நண்பர்களையும், வாசகர் களையும் நான் என்றும் நினைத்து நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன்.

என்னுடைய கதைகளைப் படித்துப் பார்த்து, பதினான்கு கதைகளைத் தேர்ந்தெடுத்து, தொகுப்பாக்கி உதவிய நண்பர். எழுத்தாளர் பூரம் சத்தியமூர்த்தி அவர் களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும்.

கவிதை வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் ஈடு இணை யற்ற தொண்டு புரியும் சைதை பாரதி கலைக் கழகத்தின்

ஆண்டு விழாவில் இந்நூல் வெளியிடப்படுகிறது. பாரதி கலைக் கழகம் எங்கள் கழகம் என்று என்னைப் போன்ற எத்தனையோ கவிஞர்கள் பெருமைப்படும் கழகம் அது.

முன்னாள் பாரத நிதி அமைச்சர் **உயர்திரு சி. சுப்பிரமணியம்** அவர்கள் இந்நூலுக்கு ஆசி வழங்கியுள்ளார்கள். கிடைத்தற்கரிய பேறாக இதைக் கருதி அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் தோரண வாயிலைத் திறந்து வைத்து ஒரு ஆய்வுரையே நிகழ்த்தும் எங்கள் தலைவர் **திரு. இரா. சுராஜ்** அவர்களுக்கும கவிதைப் பன்னீர் தெளிக்கும் **சந்தக் கவிமாமணி தமிழழகனுக்கும் கவிமாமணி—கவியரசர் இளந்தேவனுக்கும்** தனித்தனியே நான் நன்றி சொல்லவேண்டும். அன்பு சொட்டும் அவர்தம் சொற்களுக்கு வேறு என்ன கைம்மாறு செய்ய முடியும் என்னால்?

நிறை குடம் ஏந்தி வந்து நெஞ்சார்ந்த அன்புடன் முன்னுரை வழங்கியிருக்கும் இலக்கிய அன்னை **திருமதி சௌந்தரா கைலாசம்** அவர்களுக்கு எப்படி நன்றி சொல்வது என்று தெரியாமல் தவிக்கிறேன். அவர்கள் அன்புக்குத் தலை வணங்குகிறேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக, தன் முதல் புத்தகமாக என் சிறுகதைத் தொகுப்பை வெளியிட முன் வந்திருக்கும் நண்பர் கவிமாமணி **புதுவயல் ந. செல்லப்பன்** அவர்களுக்கும் இதை அழகுற அச்சிட்டு உதவிய நாவல் 'ஆர்ட்ஸ்' அச்சக உரிமையாளர் கவிஞர் திரு நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

காட்சிகள் ஆரம்பமாகின்றன. திரை உயர்ந்து விட்டது. சிறுகதைக் காட்சிகளைத் துய்க்க உங்களை அழைக்கிறேன். உங்கள் இதயம் தொட்ட இடங்களை எனக்குக் கூறுங்கள்.

51/2 ஆபீஸ் வெங்கடாசலம் தெரு
**திருவல்லிக்கேணி, சென்னை-5.**

அன்புடன்,
**பீஷ்மன்**

# காட்சிகள்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | நாதக்கனல் | 1 |
| 2. | அர்ப்பணித்த சொற்கள் | 21 |
| 3. | பீடமும் படிகளும் | 32 |
| 4. | திருஷ்டி | 48 |
| 5. | பழுத்த இலை | 60 |
| 6. | நம்பிக்கையின் மறுபுறம் | 72 |
| 7. | மூத்த பையன் | 88 |
| 8. | நெஞ்சும் நினைவும் | 104 |
| 9. | அன்பெனும் பெருவெள்ளம் | 119 |
| 10. | நியூஸ் முதல் ஜனகணமன வரை | 132 |
| 11. | ராமுடு | 147 |
| 12. | பூர்வாசிரமம் | 159 |
| 13. | அன்பின் பரிசு | 173 |
| 14. | ஜோடிப் பறவைகள் | 187 |

# நாதக் கனல்

அவனுள் உறங்கிக் கிடந்த தன்னினைவு மெல்லச் சிலிர்த்தெழுந்தது. அவன் கண்ணைத் திறக்க முயன்றான். இமைகள் வலித்தன.

வெறித்து எதிரே பார்த்தான் அவன். புகை நிறத்திலே மெல்லிய ஒளிக்கரையிட்ட மேகப் புடவைகள் வானில் பறந்தன. அரைச் சந்திரனின் மங்கலொளி மேகத்திரையின் வழியே ஊடுருவி ஊமை நிலவாகப் பூமியைக் கவிந்திருந்தது.

அவன் அதையெல்லாம் கவனிக்கவில்லை. பார்த்தான். அவன் உணர்வில் அவை பதியவில்லை. அவனுக்கு உணர்வு இருந்தது. அந்த உணர்வுக்கு உயிர் இருந்ததோ, இல்லையோ,

அக்கம் பக்கத்திலே, யார் யாரோ போய்வரும் அடியோசை கேட்டது. மரக்கிளைகள் அசையும் சப்தத்தினோடு ஏதோ ஓர் இசை ஒலியையும் காற்றுச் சுமந்து வந்தது. அவன் சுவாசித்த காற்றின் வழியே அவனுள் புகுந்த அந்த ஒலி இருதய வீணையை லேசாகத் தொட்டது.

பனிதோய்ந்து, படிந்துகிடந்த புல் தரையில் தான் அவன் படுத்திருந்தான். எழுந்திருக்க முயன்றபோது ஒவ்வொரு புல்லும் கூரிய ஊசிபோலத் தன் உடலில் தைத்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது. முழுக் குடியனைப்போல, மெள்ளத் தள்ளாடிக் கொண்டே கையைத்

தரையில் ஊன்றி, எழுந்து உட்கார்ந்தான். நூலாய் இழைந்த அவன் உடலால் கல்லாய்க் கனத்த தலையைத் தாங்க முடியவில்லை. ஆயினும் வேறு வழி?

"ஹ.. ஹ'. ஹ.." என்று ஏதோ முனகினான்.

அந்த முனகலில்கூடச் சுரத்து இல்லை. பக்கத்திலே கலீர்ச் சிரிப்புக் கேட்டது. அவன் திரும்பிப் பார்க்கவில்லை.

இளம் காதல் ஜோடியொன்று ஒய்யார நடை நடந்து அவனைக் கடந்து சென்றது. அவர்கள் வரும்போதே போதை தரும் வாசனை கமகமத்தது. அவன் நாசிக்கு அது ஏதோ நெடி போலத்தான் தோன்றியது.

அவனருகே வந்ததும் அவர்கள் அவனை விநோதமாகப் பார்த்தனர்.

அவன் அவர்களைப் பார்க்கவே இல்லை. விநாடிகள் விரைந்தன.

அங்கும் இங்குமாய் நின்றுகொண்டிருந்த மின்சார விளக்குகள் உயிர் பெற்றன. அந்தப் பிரதேசத்தில் திடீரென ஒளி உதித்தது. உக்கிரமற்ற அந்த ஒளியில்கூட அவன் கண்கள் கூசின.

வெளியே வெறுமையில் நிலைத்த அவன் பார்வை குனிந்தது.

ஒட்டிப்போய், முதுகெலும்பைத் தொட்டு விடும் நிலையில் அவன் வயிறு சுருங்கிக் கிடந்தது. பேய்ச் சிரிப்புச் சிரிக்க வேண்டும் போல இருந்தது அவனுக்கு. வாயை விகாரமாகத் திறந்து சிரிப்பதுபோல வைத்துக்கொண்டான். ஒலி எழும்பவில்லை. சிரிக்கக் கூட வலு இல்லை. எத்தனை நாள் பட்டினியோ?

சிரமப்பட்டு, தன் தலையைத் திருப்பி நாற்புறமும் பார்த்தான் அவன். எந்த விதமான லட்சியத்திற்கும் அந்தப் பார்வையில் இடமில்லை. ஆயினும் அவன் பார்த்தான். சற்றுத் தொலைவிலே, கருகருத்த தாடியும் மீசையும் கொண்ட நடுத்தரமான உருவம் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அவனருகே வந்ததும் அந்தத் தாடிக் காரன் தன் தலையைக் குனிந்து, எதையோ தீவிரமாகத் தேடும் பார்வையை அவன் மீது பதிய வைத்தான்.

''என்னா தம்பி, எளுந்திரு எளுந்திரு. இப்படியே குந்திக் கிட்டிருந்தா, உன் வவுறு உன்னையே விளுங்கி ஏப்பம் விட்டுடப் போறது! எளுந்திரு.''

தாடிக்காரன் உரிமையுடன் அவனை உலுக்கி எழுப்பி நிறுத்தினான்.

அவன் சிரித்தான். எப்போதும்போல, வெறி பிடித்த, பொருளற்ற, அசிங்கமான அந்த அவலச் சிரிப்புத்தான்.

'' ஹி.. ஹி.. ஹி..''

சிரிக்கும்பொழுது, வற்றிய அவன் உதடுகள் விரிந்து, கண்கள் உள் குழிந்து,கன்னத்தில் சுருக்கங்கள் விழுந்த அந்த அவலட்சணத்தைக் தாடிக்காரனால் சகிக்க முடியவில்லை.

''இந்தக் கோணங்கிச் சிரிப்பை என்னிக்குத்தான் நிறுத்தப். போறியோ? சரி. பேசாமே நட!''

தாடிவாலாவின் பேச்சிலே ஏதோ மந்திரசக்தி இருந்திருக்க வேண்டும். திறமுள்ள பிடாரனின் மகுடிக்குக் கட்டுப்படும் பாம்பு போல, அவன் தாடிக்காரனைப் பின் தொடர்ந்தான்.

அந்த இடம் அழகான ஓர் 'பார்க்'. சிலுசிலுக்கும் தென்றல் தரும் சிங்காரப் பூந்தோட்டம். அங்கும் இங்கு

மாய்க் கிடந்த சிமெண்டுப் பெஞ்சுகளிலும் புல் மெத்தை யிலும் மக்கள் உட்கார்ந்தும் படுத்தும் பொழுதைச் சுவைக்க முயன்றனர்.

ஒவ்வொருவர் முன்பும் போய், "சாமி' ரெண்டு நாளாப் பட்டினிங்க! அடியெடுக்க முடியலை. கண் தொறந்து இந்த ஏளெங்களைப் பாருங்க, சாமி!" என்று முறையிடுவான் தாடிக்காரன்.

நடிக்கத் தெரியாத புது நடிகனைப்போல, தாடிக் காரனின் பின்னே நகர்ந்தான் அவன். தாடிக்காரன். நின்றால் அவன் நின்றான். நகர்ந்தால் அவனும் நகர்ந்தான் வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூட அவன் சொல்லவில்லை சொல்வது என்றால் ...? மனித உணர்வை அமுக்கும் பைசாச மோனம் அவன் நெஞ்சிலே மேரு மலையாக வளர்ந்து கிடக்கிறதே!

அவர்கள் அந்தப் பார்க்கினுள்ளே மூன்று முறை வட்ட மிட்டுவிட்டனர். பார்க்கின் ஒரு மூலையில் அகலக்கை விரித்து ஆகாயத்தைத் துழாவி நின்ற ஆலமரத்தடிக்கு வந்ததும் தாடிவாலா நின்றான். அவனும் நின்றான்.

கையில் சேர்ந்திருந்த காசைக் கணக்கிட்டுப் பார்த்தான் தாடிவாலா. அவன் முகத்திலே ஒரு தெம்பு படர்ந்தது.

"இங்கேயே இரு. நான் போயி எதுனாச்சும் கொண்டு வர்ரேன்."

கருந்தாடி மனிதன் காலை வீசி நடந்து சென்றான். பணம் கிடைத்த தெம்பில் அவன் நடையில் ஒரு மெருகு கலந்திருந்தது.

இங்கே, மரத்தடியில் இவன் மறுபடியும் பிரமையில் ஆழ்ந்தவன்போல உட்கார்ந்து விட்டான். ஆலமரத்தின்

கிளைகள் அளித்த இடைவெளி வழியாக நிலவு வழிந்து அங்கேயே திட்டுத் திட்டாகத் தேங்கியிருந்தது. அவன் எதையும் உணராவிட்டாலும் அவனுள் கிளர்ந்த பசி தன்னை உணர்ந்துதான் இருந்தது. அது, தன் சர்வ வல்லமையை நிரூபிக்க எண்ணியோ, என்னவோ அவனை மறுபடியும் மயக்கித் தள்ளியது. பூதாகாரமான அந்த ஆல மரத்தடியில் சுருண்டு கிடந்தான்.

* * *

அவனுக்குப் பதினைந்து வயசு நிறைந்த பொழுதுதான் அவன் கோண்டு பாகவதரிடம் சங்கீதம் பயில வந்தான்.

மஞ்சள்வெயில் மங்கிவரும் அந்திப்பொழுது.

ஓசைப் படாமல், மாடிப் படிகளை மெதுவாகக் கடந்து பாகவதர் உட்கார்ந்து வீணை வாசித்துக் கொண்டிருந்த ஹாலின் நிலையோரம் வந்து நின்றான் அவன். வராந் தாவின் ஜன்னல் வழியாக மாருதம் தவழ்ந்து வந்து அவன் மீதுஉராய்ந்தது. உள்ளேயிருந்து வீணாநாத வடிவில் மலய மாருதம் ஆடி நடந்து வந்து அவன் இருதயத்தில் குளுகுளுப் பைக் கிளறி விட்டது.

அறையின் உள்ளே பாயின்மீது ஏகாக்கிர சிந்தையில் யாழுடன் உறவாடும் பாகவதரை, பக்தியோடு உள்ளம் கனியப் பார்த்தான் அவன். 'யாழில் அவர் கை வாசிக்கிறதா அல்லது அதன் வழி அவர் இதயமே பாடுகிறதா? ஆகா, என்ன கம்பீரம், என்ன குழைவு!' அவன் தன்னை மறந்து தான் நின்றான். 'ஓசைப்படுத்தினால் அந்த நாதத்திற்குத் தடை விழுந்துவிடுமோ' என்ற அச்சத்தால் அவன் உள்ளே அடியெடுத்து வைக்கவில்லை. நாதம் இழைந்தது.

ஒரே கணம். ராகத்திலே ஒரு சிறு நெளிவு! கோண்டு பாகவதருக்கே உரிய டங்காரம்!

மலயமாருதத்தை, அதன் விரிவை, நெருக்கிச் சுருக்கி, முழுமை பழுதுபடாமல் அந்த ஒரு நெளிவிலே, அந்த ஒரு கணத்திலே வீணையின் நரம்புகளில் தெறித்து விடுத்தார் பாகவதர்.

அவனால் அந்த ரஸத்தை இருதயம் விட்டு அநுபவிக்காமல் இருக்க முடியவில்லை.

"ஆஹா... அற்புதம் . . !"

கண்களில் ஜனித்த ஆச்சரியம் ஒளியாய் விளைந்தது. இருதயத்தின் வியப்பு ஒலியாய்க் குதித்தது.

வாசிப்பை நிறுத்தாமலேயே, பார்வையால் அவனை உள்ளே வந்து உட்காரும்படி சைகை காட்டினார் பாகவதர். அவன் கைகூப்பி, சிரம் தாழ்த்தி மரியாதை செலுத்திவிட்டு உள்ளே புகுந்து எதிரே போய் உட்கார்ந்தான்.

அவர் வாசித்து முடித்தார். அவன் இன்னும் கேட்டு முடிக்கவில்லை.

"என்ன விசேஷம் கண்ணா? ஒரு வாரமாக ஆளையே காணோமே!"

தூங்கிக்கொண்டிருப்பவன் காதில் தர்ப்பைப் புல்லை விட்டுக் குடைந்தால் அவனுக்கு ஏற்படும் உணர்வுடன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு அவரைப் பார்த்தான் அவன்.

"குறிச்சியிலே மாமா பிள்ளைக்கு உபநயனம். ஒரு வாரமாக . . "

"சரிதான்." வீணையைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டு உறையை இழுத்து மூடி அதை நகர்த்தி வைத்தார்.

மேல் துண்டை எடுத்து, முகத்தைத் துடைத்தவாறே, ''காலேஜ் திறக்கப் போகிறதுபோல் இருக்கிறதே! எந்தக் காலேஜிற்காவது அப்ளிகேஷன் போட்டிருக்கயா? இட நெருக்கடிதான் ரொம்பக் கஷ்டமா இருக்கும் போலிருக்கே!' என்றார் அவர்,

''நான் மேலே படிக்கிறதாயில்லை, மாமா''.

''ஏன் கண்ணா? நல்ல மார்க்கு வாங்கி யிருக்காய்' வயசும் அதிகம் ஆகலை. மேலே படிச்சால் உதவியா யிருக்குமே!''

விரல்களை வெறுமே நெறித்தவாறு, தலையைக் கீழே குனிந்து பேசாது உட்கார்ந்திருந்தான் கண்ணன். அவன் பார்வையில் நிலைத்த ஒருமை அவன் சிந்தனையின் ஓட்டத்தை உணர்த்தியது.

''என்ன யோசனை அப்படி? உம்.''

''ஒண்ணு , . மி . . ல். . லே.'' அதற்கு மேல் தொடர முடியவில்லை அவனால்.

''சொல்லேன்!'' என்றார் பாகவதர்.

''மாமா தயவுதான் என்னை முன்னுக்குக் கொண்டு வரணும்!'' தன் மனத்தில் இருப்பதைப் பரிபக்குவமாக எப்படிச் சொல்லுவது என்று தெரியாமல் அவன் திணறினான்.

''மாமா தயவுதான் எப்பவும் இருக்கே. மாமாவினாலே வேறு என்ன செய்ய முடியும்? சங்கீதம் கற்றுத் தரலாம். அவ் வளவுதான்.''

''அந்த ஆசீர்வாதம் போருமே! அதைக் கேட்கத்தானே இப்போ நான் வந்தேன்?''

கோண்டு பாகவதர் அவனை - அவன் கண்களில் தெறித்த ஆவலை - பேச்சிலே பொறித்த ஆசையை, அளந்து பார்த்தார்.

"அதற்கென்ன, ஆரம்பித்தால் போகிறது." வழக்கமான பிரயோகந்தான் இது.

"அதற்கில்லை. உங்கள் கடாக்ஷம் பரிபூரணமாக. ."

"என் கடாக்ஷம் இருக்கட்டும். அவள் கடாக்ஷம் வேண்டும் அப்பா; அன்னை கடாக்ஷம் வேண்டும்."

இப்படித்தான் அவன் அந்த உலகில் புகுந்தான்.

கோண்டு பாகவதர் யாருக்குமே சிட்சை சொல்லிக் கொடுக்க அத்தனை லகுவாக இணங்கிவிட மாட்டார். கண்ணனிடம் அவருக்கு நல்ல நம்பிக்கை இருந்தது. அவனது சங்கீத அபிமானத்திலும், ராக ஞானத்திலும் அவருக்குத் திடமான நம்பிக்கை உண்டு. ஆகவே தான், அவனுக்குக் கோண்டு பாகவதரின் சிஷ்யனாகும் பாக்கியம் அவ்வளவு சுலபமாக அமைந்தது. சிட்சைக்கு என்று குறிப்பிட்ட நேரம் ஒன்றும் இல்லை. கண்ணன் நாள் முழுதுமே பாகவதர் வீட்டிலேதான் இருந்தான். சாப்பிடும் சமயத்தில் மட்டும் வீட்டுக்குப் போய்வருவான். அவ்வளவுதான். அதுகூடச் சில நாட்களில் பாகவதர் வீட்டிலேயே நடந்துவிடும்.

சிஷ்யனாக ஆனதிலிருந்தே பாகவதருக்குப் பணியாள், மகன், சகபாடி எல்லாமே அவன்தான். பாகவதரின் வேஷ்டி துவைப்பது முதல், கச்சேரிகளில் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து தம்புரா மீட்டுவதுவரை அவன் தான் எல்லாக் காரியங்களையும் கவனித்து வந்தான். தம் கச்சேரி எங்கே நடந்தாலும் கண்ணனையும் கூட அழைத்துச் செல்வார் பாகவதர். கச்சேரி முடிந்து வீடு திரும்பும்போது, "ஏன் கண்ணா, இன்றைக்குத் தோடியைக் கொஞ்சம்

விஸ்தாரமாகவே ஆலாபனம் பண்ணினேனே! வழிபிடி பட்டதா?'' என்று இந்த மாதிரி ஏதாவது கேட்பார். அவன் தனக்கு எழும் சந்தேகங்களைச் சூடு ஆறாமல் அங்கேயே கேட்டுத் தீர்த்துக்கொள்வான்.

ஒரு நாள் மாலை மணி நாலரை இருக்கும். கிணற்றங் கரையில் பாகவதரின் வேஷ்டிகளைத் துவைத்துக்கொண் டிருந்தான் கண்ணன். நெற்றியிலே வேர்வை கொப்புளங் களாக வெடித்திருந்தது. காற்றிலே அவன் கிராப்புத் தலை கலைந்து, சுருண்ட மயிர்கள் முன் நெற்றியிலே புரண்டு விளை யாடின. அலுப்போ சலிப்போ தெரியாமல் அவன் தன் வேலையிலேயே குறியாக இருந்தான். அவன் வாய் மட்டும் ஏதோ பாட்டை முணு முணுத்துக்கொண்டிருந்தது.

''கண்ணா!......கண்ணா!''

உள்ளேயிருந்து பாகவதரின் குரல் உச்ச ஸ்தாயியில் பிறந்து காற்றில் மிதந்து வந்தது.

கையில் இருந்த வேஷ்டியை அப்படியே துவைக்கும் கல்லின் மீது போட்டுவிட்டு உள்ளே ஓடினான் அவன்.

அங்கே, கோண்டு பாகவதருக்கு எதிரில் விநயத்துடன், பதினாலு பதினைந்து வயசுப் பெண்ணும் ஒரு வயசான அம் மாளும் உட்கார்ந்திருந்தனர். மேல் வேஷ்டிகூட இல்லாமல் திறந்த மார்புடன் அவர்கள் எதிரே போவதற்கு அவனுக்கு என்னவோ போலிருந்தது. ஆயினும், குரு கூப்பிட்டிருக் கிறாரே; போகாமல் இருக்க முடியுமா?

அருகில் அவன் வந்ததுமே, ''நான் சித்தெ முன்னாடி சொல்லிண்டு இருந்தேனே, அது இவன்தான்'' என்று கண்ணனை வந்திருந்தவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார் கோண்டு. அவர்களுக்கு வணக்கம் செலுத்தி விட்டு, தன்னை எதற்காகக் கூப்பிட்டார் அவர் என்று கேட் பதைப் போலப் பாகவதரைப் பார்த்தான் அவன்.

"ஏனம்மா ரமணி, இது வரை உருப்படியாக இரண்டு கீர்த்தனைகளாவது ஆகியிருக்கும்; இல்லையா?"

பாகவதர், கண்ணனின் கேள்விக்குப் பதில் கூறாமலேயே வந்திருந்த பெண்ணிடம் பேச்சுத் தொடுத்தார்.

"ஏதோ ஏழெட்டுக் கீர்த்தனைகள்கூட ஆகியிருக்கு!"

அந்தப் பெண் தன் கைநகத்தால் தரையைக் கீறிக் கொண்டே பேசினாள். கண்ணனின் இளமையுள்ளம் பேச்சின் சுவாரஸ்யத்தை ஒருகணம் மறந்து, ரமணியின் சௌந்தர்யத்தில் ஈடுபட்டது.

"அப்படியானால், கண்ணனுடன் சேர்ந்தே நீயும் கற்றுக் கொள்ளலாம். போட்டியிருந்தால் தானே சாதனைகளும் எழும்?" என்று பாகவதர் பேசியது காதில் விழுந்த பொழுது தான் அவன் மறுபடியும் இந்த உலகத்திற்கு வந்தான்.

ரமணி கோண்டு பாகவதரின் சிஷ்யையாக ஆனதில் அவனுக்கு மகிழ்ச்சியோ வெறுப்போ அப்பொழுது இருக்க வில்லை.

சங்கீதத்துக்கு லாகவமான குரல் ரமணிக்கு இயற்கை யாக அமைந்திருந்தது. சுயமான மனோதர்மமும், கற்பனை விலாசமும் இன்னும் அவளது சங்கீதாப்பியாசத்துக்கு அநு சரணையாக உதவின. அதிசப்படி சாதகத்தின் அவசியமில் லாமலே, அவள் பாகவதர் கற்றுக் கொடுப்பவற்றை அந்தக் கணத்திலேயே அவரே பிரமித்துப் போய்விடும்படி பாடி விடுவாள்.

ரமணியைவிட, கண்ணனுக்குச் சங்கீதம் கற்றுக் கொள்வதில் ஆசை அதிகம். சங்கீதத்தின் உயிர்நாடியைஎட் டிப் பிடித்து வென்று விடும் தீவிரம் அவன் ஆவலில் எதிர்த்து நின்றது அதற்குரிய திறன்தான் நிறைவாக இல்லை.

ஒரு நாள்—

பாகவதர் வீட்டு மாடி ஹாலில் மாட்டியிருந்த கடிகாரம் அப்பொழுதுதான் நாலுமணி அடித்து ஓய்ந்திருந்தது.

தரையில் விரித்திருந்த கம்பளத்தின்மேல், ரமணியும் கண்ணனும் பாகவதர் வரவை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தனர். பாட்டு நோட்டின் பக்கங்களை வெறுமே புரட்டிக் கொண்டிருந்தாள் ரமணி. அவன், சுருதிப் பெட்டியை மெதுவாக இசைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். உள்ளத்தினுள்ளே ஓடிக்கொண்டிருந்த ஏதோ ஒரு பாட்டின் வாசகங்களை அவன் உதடு மெதுவாக முனகியது.

"என்ன, இன்னிக்கும் தோடியைப் பிடிக்கலாமா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்த பாகவதர் கையிலிருந்த விசிறி மட்டையைக் கீழே வைத்துவிட்டு, கண்ணனிடமிருந்து சுருதிப் பெட்டியை வாங்கிப் பக்கத்தில் வைத்துக்கொண்டார். இடுப்பில் செருகியிருந்த பொடி டப்பியை எடுத்து ஒரு சிமிட்டா உறிஞ்சிவிட்டுச் சுருதிப் பெட்டியைத் திறந்தார்.

"உம். ரெண்டு பேரும் சேர்ந்தே பாடுங்கோ."

"பிரு...ந் . தா...வ...ன...லோ...லா!"

அறையின் மோனத்தைக் கிழித்துக் கொண்டு, கனமும் மெலிவும், கம்பீரமும் குழைவும் கலந்து நெளிந்த நாத அலைகள் அறையில் சுற்றிப் படர்ந்தன. வலது பாதம் தாளம் போட, சுருதிப் பெட்டியை இசைத்தவாறே தலையைப் பலமாக ஆட்டி, தம் சிஷ்யக் குழந்தைகள் இசைக்கும் சங்கீதத்தில் தம்மை இழந்துகொண்டிருந்தார் கோண்டு.

சங்கதிகள் விதம் விதமாய், அலை அலையாய்த் தொடர்ந்து பெருகின. கோண்டு, மகிழ்ச்சியின் செம்மை

ஜொலிக்க, ராகத்தின் நெளிவுக்குப் பாவம் பிடிப்பவர் போல முகத்தைத ஆட்டிக் கொண்டிருந்தார். அவள் குரலும், அவன் குரலும் ஒன்றுக்கு ஒன்று அண்டை கொடுத்ததுபோல அத்தனை உறவுடன் இணைந்து இழைந்தன.

பல்லவி, அநுபல்லவி ஆயின. இப்பொழுதுதான் சரணத்தைப் பிடித்திருந்தார்கள்.

தோடியின் விஸ்தாரம் அவர்களின் மனோதர்மத்தின் பரப்பிலே கவிந்து ஒன்றியது.

"ராமதாஸ...தாஸ.. த்யாகராஜ .."

சரணத்தின் இரண்டாம் பாதத்திலே, பாட்டோடு பாட்டாகக் கலந்துபோன ரமணியின் மனோதர்மம் விரிந்து பெருகியது. சங்கதிகள் அணி அணியாய் உதிர்ந்தன. பாகவதர் கற்றுக்கொடுத்த வரம்பையும் தாண்டி, தோடியின் விஸ்தாரமான நாத வெளியிலே அவள் கற்பனை பறந்தது.

கண்ணன் திணறிப் போய்விட்டான். அவனால் அவளது மனோதர்மம் எட்டும் சிகரத்தின் உயரத்திற்குப் போக முடிய வில்லை,

அவள் குரல் குழைந்தது, உயர்ந்தது, சுருண்டது, நெளிந்தது, மின்னலின் கண்ணைப் பறிக்கும் ஒளியைப்போல, இருதயத்தை உலுப்பும் அசைவுகளைச் சங்கதிகள் மூலம் கணத்துக்குக் கணம் எடுத்துத் தெறித்தது.

கோண்டு பாகவதரே அயர்ந்து போய்விட்டார். பாடு வதை நிறுத்தும்படி ஒரு விரலினால் கண்ணனுக்குச் சைகை காட்டினார். வெட்க மென்னும் மாமுகில் பேரிடியுடன் அவன் முகத்தில் இறங்கியது. அவன் மௌனமாகத் தலை குனிந்துகொண்டான்.

இங்கே நடப்பது ஒன்றையுமே கவனியாமல் இசை வெளியில் மிதந்தாள். ரமணி. அமைதியான குளத்து

நீரில், கல்லெறிந்த இடத்தினின்றும் கிளம்பும் அலைகள் விரிந்து, பெருகி, உருவற்று நீரோடு நீராக முடிவில் கரைந்து விடுவதைப் போன்று நாத அலைகள் கீர்த்தனை முடிவில் அடங்கி, படிப்படியாய் ஒடுங்கின.

ரமணியும் பூவுலகிற்கு இறங்கி வந்தாள்.

"சபாஷ்! ஜோர்! பலே!" தம் இருதயத்தில் எழுந்த மகிழ்ச்சியை முழுதும் அந்த மூன்று வார்த்தைகளிலேயும் பதித்து வைத்தார் பாகவதர்.

ரமணியின் முகத்தில் பெருமிதம் புன்னகையாய்க் கிளர்ந்தது.

அவள் முகத்தின் அப்பொழுதைய அழகு கண்ணனுக்கு அருவருப்பைத்தான் கொடுத்தது. வெறுப்பும் வேதனையும் கொப்புளிக்கும் கண்களால் அவளைப் பார்த்தான் அவன்.

பாகவதர் அவன் முகபாவத்தைப் புரிந்து கொண்டு விட்டார்.

"கீர்த்தனையை நீயும் நன்றாய்ச் சாதகம் பண்ணித் தான் இருக்கிறாய், கண்ணா வெறும் சாதகம் மட்டும் இருந்தால் போதாது. மனோதர்மமும் கற்பனையும் இடத்திற்குத் தகுந்தபடி உதவி செய்தால்தான் சங்கீதம் உருவாகும்."

இதற்கு என்ன செய்வது என்று அவனுக்குப் புரியத்தான் இல்லை. பாகவதர் எளிதாகச் சொல்லிவிட்டார். "மனோதர் மம், கற்பனை .!" அவன் ஆசை நாத வெளியின் எல்லைக் கோட்டை எட்டி விடத்தான் எண்ணியது. ஏன்? துடி துடித்தது. ஆனால், இந்த இரண்டு இறக்கைகளின் உதவியில்லாமல் அவன் எங்கே பறப்பது? பறவைக் குஞ்சுக்கு இருப்பதைப்போல ரமணி பிறக்கும்போதே இந்த இரண்டு இறக்கைகளும் அவளுக்கு அமைந்துவிட்டனவா? அவனால் மேலே யோசிக்க முடியவில்லை.

பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

"அதற்காகச் சாதகம் செய்வதை நிறுத்திவிடாதே, கண்ணா. எவ்வளவுக்கு எவ்வளவு சாதகம் செய்கிறாயோ, அவ்வளவுக்கு அவ்வளவு உன் மனோதர்மம் விருத்தியடையும். குரல் நீ சொன்னபடி கேட்கும். அதுவும், அதிகாலையில் செய்யும் சாதகந்தான்......" பாகவதர் சொல்லிக்கொண்டே போனார்.

கண்ணன் வேறு எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அவன் பார்வை ரமணியின் பக்கம் சென்றது.

தன்னிலிருந்து கிளம்பி, தன்னுள்ளேயே அடங்கிப்போன நாத அலைகளின் தடத்தைத் தொடர்பவள்போல, அவள் எதனுள்ளோ மூழ்கிக் கிடந்தாள்.

மாடிப்படிகளில் அடியோசை கேட்டது. பாகவதரைப் பேட்டி காண யார் யாரோ வந்திருந்தனர்.

அன்று சிட்சை முடிந்து வீட்டுக்குப் போகும்போது, கண்ணனின் மனத்தில் புரியாத கலக்கம் புகைபோலக் குமைந்து கிடந்தது. ரமணியை நினைத்துக்கொண்டான். சங்கீதம் அவள் முன் சலாம் போட்டு நிற்பது போலத் தோன்றியது அவனுக்கு. எஜமானின் ஏவலுக்குக் காத்து நிற்கும் நன்றியுள்ள சேவகன்போல அவன் எத்தனை பக்தி சிரத்தையுடன் அந்த சங்கீதத்தை வழி படுகிறான்! ஒரு வேளை, பக்தனைச் சோதிக்கும் பரமனைப்போலச் சங்கீதமும் அவனைச் சோதிக்கிறதோ? அவன் சிந்தனை அசட்டுப் பிசட்டென்று எப்படியோ உருண்டது.

நடுவிலே, குருவின் உபதேசம் நினைவுக்கு வந்தது.

"சாதகம் செய்வதை மட்டும் விட்டு விடாதே!"

அவனா விட்டுவிடுபவன்? சங்கீதத்தின் இருதய ஆழத்தைத் தொட்டுவிட, தன் இருதயத்தையே அர்ப்பணம் செய்யவும் அவன் தயார்தான், ஆனால், அது கிட்டவேண் டாமா?

இந்த நினைவுச் சுழல்களில் சிக்கித் திணறிய அவனால் அன்றிரவு நிம்மதியாகத் தூங்கக்கூட முடியவில்லை! ஒரு மணிக்குத்தான் லேசாகக் கண் அயர்ந்தான்.

யாரோ தட்டி எழுப்பியதைப் போலத் தானாகவே தூக்கம் காலை நான்கு மணிக்குக் கலைந்துவிட்டது.

'அதிகாலையில் செய்யும் சாதகந்தான்...!" குருவின் உபதேசம் நினைவில் கிளர்ந்தது.

புதியதொரு தெம்பு வந்தவனைப்போல எழுந்து சென்று கொட்டுகின்ற மார்கழிப் பனியில் கிணற்றடிக்குச் சென்று பல்தேய்த்து முகம் கழுவினான். இருள் இன்னும் கலைய வில்லை. பனி வேறு புகையாய் அடர்ந்திருந்தது.

வெடவெடக்கும் உடம்பைக் கையினால் தேய்த்துச் சூடேற்றிக்கொண்டே உள்ளே வந்தான். சுருதிப்பெட்டியை எடுத்துவைத்துக் கொண்டு ஸரளி வரிசை அகார சாதகம் துவங்கிவிட்டான். அகாரம் அலைஅலையாக, நாத உருப் போர்த்து, காலை அமைதியையும் பனிப்படலத்தையும் கிழித்துக்கொண்டு வெளியில் புகுந்தது.

இப்படி எத்தனையோ நாட்கள்!

அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. ரமணியின் குரல் பேசுவதுபோல, அவளது மனோதர்மம் நாத விண்முகட்டை எட்டுவதுபோல, அவன் ஆசைதான் எல்லை கடந்து பெருகி வளர்ந்தது. உயிரைத் திருணமாக மதித்து, சிந்தனைகளை ஒருமுகப்படுத்தி அகரசாதகம் செய்தான். சாதனை ஏனோ சம்பூர்ணமாக எழவில்லை.

ஊரிலே பெரிய கோவிலில் ஸ்ரீராமநவமி உற்சவம் கொண்டாடினார்கள். நாள் தோறும் நல்ல சங்கீதக் கச்சேரிகள். கோண்டு பாகவதர் கச்சேரி செய்யவேண்டிய நாள் வந்தது.

ஒரு வாரமாக எங்கெங்கோ கச்சேரிகளுக்காக அலைந்து திரிந்ததனால் அன்று காலையிலிருந்தே அவருக்கு உடம்பு சரியாக இல்லை. மத்தியான்னம் குளிரும் கடுப்பு வலியுமாக ஜுரமே வந்துவிட்டது. கம்பளியொன்றை எடுத்து இழுத்துப் போர்த்துக்கொண்டு படுத்துவிட்டார் அவர்.

சற்றுத் தள்ளிச் சுவரோரமாகக் கண்ணன் வீணையைத் துடைத்துக்கொண்டிருந்தான்.

''க.. ண்...... ணா!''

''என்ன அண்ணா!'' சிஷ்யனாக ஆன தினத்திலிருந்து அவன் குருவை அழைக்கும் உறவு முறை இதுதான்.

''ரமணியை நான் வரச்சொன்னேனென்று கையோடு கூட்டிக்கொண்டு வாயேன்.'' தன் புருவத்தை உயர்த்தி, கேள்விக் குறியை முகத்தில் மாட்டிக்கொண்டு அருகே வந்து நின்றான் கண்ணன்.

''அப்படின்னா, இன்னிக்குக் கச்சேரிக்குப் போக முடியாதா, அண்ணா?''

''நல்ல ஜுரம் அடிக்கிறதுடா! நான் எப்படிப் போறது? அதுக்குத்தான் ரமணியை அழைச்சிண்டு வான்னு சொன்னேன்.''

அவனுக்கு விஷயம் புரிந்துபோய்விட்டது. இருதய வீணையின் தந்திகள் எல்லாமாக ஏககாலத்தில் சேர்ந்து அசைந்து எழுப்பிய இனம் புரியாத ஓசைக் கடலில் அவன் மூழ்கித் திணறினான். ஏக்கம் முகத்தில் தேக்கமிட்டது. தலையைக் குனிந்து மெளனமாக நடந்தான்.

அன்றிரவு, கோவில் வாசல் பந்தலினின்றும் எழுந்த ரமணியின் நாதவெள்ளம் ஒலிபரப்பி வழியாக அமுத வெள்ளமாக ஊரிலே பரந்தது. தம்மை மறந்து, மக்கள் அதை அள்ளிப் பருகி ஆனந்தமுறும் அந்த நேரத்திலே..

வேதனை அலைகளாக நாத அலைகள் உருவெடுத்துச் சுழன்று சுழன்று கண்ணனைச் சிக்க வைத்தன. பாகவதர் வீட்டு மாடியில் அவருக்கு அருகில் அவன் உட்கார்ந்திருந் தான். நாதம் காற்றில் சுருண்டது.

"என்னால்கூட இத்தனை அற்புதமாகப் பாட முடி யாது!" பாகவதர் தாம் முணு முணுத்தார்.

வெளியே வான் முகட்டில் எழுந்த மின்னல், தன் முழு வலுவுடன் கண்ணனின் இருதயத்தில் சுரீரென ஊடுருவிப் பாய்ந்தது. அவன் ஒன்றும் பேசவில்லை. நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டான். வேதனையின் வலுவையும் மீறி ஏதோ ஒரு தீவிரம் அவனுள்ளே உருவாகிக்கொண்டிருந்தது.

ரமணி வருவதற்கு முன்னதாகவே பாகவதரின் சிஷ்யனாக ஆகியிருந்தான் அவன். அப்படியிருந்தும் இன்று அவள் அவனை முந்திக்கொண்டு விட்டாள். கலைத்தேர்வில் முதற் பரிசு வாங்கிவிட்டாள். இனிமேல் இது விஷயத்தில் குருவால் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை. சொந்த முயற்சிதான் அவனை முன்னுக்குக் கொணர வேண்டும். ஆசை, வழி தெரியாத இருளில் அவனை வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றது.

எத்தனை விதச் சாதகங்கள்! அவன் தாங்கக்கூடிய அளவையும் மீறிய சாதனைகள்!

குளிரோ, மழையோ எதுவாக இருந்தாலும் சரி. அதி காலையில் எழுந்துவிடுவான். கிணற்றடியில் இருக்கும் பெரிய தொட்டி நிறையத் தண்ணீர் நிரப்புவான். கழுத்து

வரை நனைய அதில் இறங்கி நின்றுகொண்டு அகார சாதகம் செய்வான். யாரோ சொன்னார்களாம், அப்படிச் சாதகம் செய்தால் குரல் பண்படும் என்று. உடனே பிடித்துக்கொண்டு விட்டான். தன் லட்சிய வெற்றிக்காக அவன் தான் எது செய்யவும் தயாராய் இருந்தானே!

காலை, மாலை, இரவு! கால வரம்பற்று அவன் சாதகம் தொடர்ந்தது. ஒரு காலத்தில் குருவின் வீடே கதி என்றிருந்த கண்ணன், இப்போது தன் வீடே, தன் சாதகமே கதி என்று ஆகிவிட்டான்.

எப்போதாவது ஏக்கம் தேங்கிய முகத்துடன் கோண்டு வைப் பார்க்கப் போவான். அவ்வளவுதான்.

தன் சாதனையில் அவனுக்கு ஒரு நாள் நம்பிக்கை பிறக் கத்தான் செய்தது. லட்சியத்தை எட்டிப் பிடித்துவிட்டோம் என்று அவன் மனத்துக்கு ஒரு நாள் தோன்றி விட்டது. சாதனைகளைக் குருவிற்குக் காட்ட ஓடி நடந்தான்.

“என்ன கண்ணா, இளைத்துத் துரும்பாகப் போய்விட் டாயே!'' என்றுதான் அவனை வரவேற்றார் கோண்டு. அவன் தன்னை அப்பொழுதுதான் நன்றாகப் பார்த்துக் கொண்டான். அவன் கண்களுக்கே அதிர்ச்சி கண்டது! அப்படி இளைத்துப் போயிருந்தான்.

“சாதகமெல்லாம் எப்படியிருக்கு?'' குரு கேட்டார்.

“ஏதோ நானும் தினம் சாதகம் செய்யத்தான் செய் கிறேன். இப்பொழுது நல்ல முன்னேற்றம் இருக்கும். நீங்களே பாருங்களேன்.'' அவன் இசையில் புகுந்தான்.

சங்கீத இலக்கணம் அவன் பாட்டில் நிறைவாக இருந்தது. தன் மதிப்புக்குரிய சாதனைகளையெல்லாம் எதிரே கொட்டிக் குவித்து விட்டு, “எப்படி!'' என்று கேட்பதைப் போல ஏக்கத்துடன் பார்த்தான்.

''பேஷ்! நல்ல சாதகம் செய்திருக்கிறாய். சங்கீத இலக்கணம் அப்படியே பேசுகிறது.''

''கிருதார்த்தன்'' என்றான் கண்ணன் மகிழ்ச்சிபொங்க.

''ஆனால் ஒரு விஷயம், கண்ணா. எவ்வளவு சாதகம் செய்துங்கூட உன்னால் ஒரு வரம்புக்குள் தான் சுற்றி வர முடிகிறது. ரமணி அதிருஷ்டசாலி. பிறவியிலேயே என்ன மனோதர்மம்! அநாயாசமான கற்பனை! சுயமான ராக விஸ்தாரம்!''

கோபுரத்தின் உச்சியிலிருந்து தலை குப்புறக் கீழே விழுந்தான் அவன். எதிரேயுள்ள குரு முதல் வானவெளி வரை எல்லாம் அவன் முன் சுழன்றது.

அவன் லட்சியம் இன்னும் ஈடேறவில்லையோ? அவனால் இதைச் சகிக்க முடியவில்லை.

ஏதோ சொல்ல வாயைத் திறந்தான். பேசக் குரல் கிடைக்கவில்லை. மௌனமாக எழுந்து வெளியே வந்து விட்டான்.

இருள் கனமாக வெளியே அடர்ந்து கொண்டிருந்தது. எந்த விதமான லட்சியமும் இல்லாமல் தெருவில் இறங்கி இருளில் புகுந்தான். நடந்துகொண்டேயிருந்தான். கால்கள் கெஞ்சி, கண் இருண்டு, சுய நினைவு அற்று மூர்ச்சையாகிக் கீழே விழும்வரை நடந்தான்.

அதன் பின்—

காலம் ஓடிற்று.

நாடோடியாகத் திரிந்த ஏதோ ஒரு பிச்சைக்காரனின், அந்தத் தாடிக்காரனின் இரக்கம் அவனுக்குக் கிடைத்தது. அவன் அதை ஒன்றையும் உணரவில்லை. அவன் உணர்வே மரத்துப் போய்விட்டது. ஆயினும் அவனுக்கு உயிர் இருந்தது. அவனும் வாழாமல் வாழ்ந்தான்.

* * *

ரேடியோவில் செய்தி முடிந்து அடுத்த நிகழ்ச்சி ஆரம்ப மாகியது. காற்றின் வழியே 'பிருந்தாவன லோலா!' என்ற கீர்த்தனை பறந்து வந்தது.

மரத்துப் போயிருந்த அவனுடைய உணர்வும் தன்னினைவும் புனர்ஜன்மம் பெற்றவைபோல சிலிர்த்துக் கொண்டு எழுந்தன.

"ஹூம் ....."என்று ஏதோ கூவிக் கொண்டே வெறி பிடித்த பார்வையுடன் தரையில் கையை ஊன்றி எழுந்திருக்க முயன்றான் அவன். பைசாச மோனத்தை ஒதுக்கிக்கொண்டு அவனுள் ஒன்றிக் கிடந்த பூர்விக நினைவு கூர்மழுங்கிய ஈட்டி முனைபோல எட்டிப் பார்த்தது.

தரையை உதைத்துக்கொண்டு எழுந்தான். கால்கள் தள்ளாடின. கண் இருண்டது. தலை சுழன்றது. இவற்றை மீறி ஏதோ ஒரு வெறி அவனுள் பூதாகாரமாகப் பெருகியது.

தனக்குப் பழக்கமான குரல், தனக்கு அறிமுகமான கீதம் எங்கிருந்தோ தன்னை அழைப்பதை அவன் உணர்ந்தான். தள்ளாடித் தடுமாறி எழுந்து ஓடினான் அவன்.

தாடிக்காரன் கையில் பலகாரக் கட்டுடன் திரும்பி வந்த பொழுது ஆலமரத்தடிக்குச்சற்றுத் தூரத்திலே அலங்கோல மாக அவன் விழுந்து கிடந்தான்.

"அட பாவி!" என்று அலறிய தாடிக்காரனின் கையிலிருந்த பலகாரக் கட்டு கீழே விழுந்து சிதறியது.

"இதுவரை ஸ்ரீமதி ரமணி அவர்கள் பாடக் கேட்டீர்கள்!" என்று ரேடியோ அறிவித்து விட்டுப் பட்டென அடைத்துக் கொண்டது.

திடீரென மின்சார விளக்குகளெல்லாம் அணைந்து போயின.

இருள் கனமாய்க் கவிந்தது.

**கலைமகள், ஜனவரி 1953**

# அர்ப்பணித்த சொற்கள்

வழக்கம்போலப் பக்கத்து வீட்டுக் கிழவரின் காட்டுக் கூச்சல்தான் அன்றைக்கும் என்னை எழுப்பியது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கண்ணைக் கசக்கி விட்டுக்கொண்டு அருகே அலமாரியில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தால் சரியாக மணி ஐந்து. ஒரு நாளைப் போல் தினமும் அடுத்த விட்டுக் கிழவரின் கூச்சல்தான் எங்களுக்குப் பள்ளி எழுச்சி பாடுகிறது. ஒரு வகையில் அவர், எங்கள் பாராட்டுக்குரியவர் தான். ஏழு மணி அடித்தாலல்லாது துயில் கலைந்து எழுவதற்கு மனமில்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த என்னை இந்த ஓராண்டு காலமாக அதிகாலையிலேயே எழுந்து விடும்படி செய்கிறவர் அவர் தானே! என்னை விட என் மனைவிக்குத்தான் அவரிடம் நன்றி உணர்ச்சி அதிகமாக இருக்க வேண்டும். என்னை எழுப்புகின்ற சிரமத்திலிருந்து அவளைக் காப்பாற்றிய புண்ணியவானல்லவா அவர்!

மஞ்சுவின் படுக்கை காலியாகக் கிடக்கிறது. முன்னமேயே எழுந்து குளிக்கப் போய் விட்டாள் போலிருக்கிறது. எழுந்து படுக்கையைச் சுற்றி வைத்து விட்டுப் பிரஷை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். மஞ்சு குளித்து விட்டு வந்து கொண்டிருந்தாள்,

"இந்த இரைச்சலிலே இவ்வளவு நேரம் எப்படித் தான் தூங்கினேளோ...?" என்று கிசுகிசுத்தாள் அவள். இரைந்து

பேசினால் எங்கே கிழவரின் காதில் விழுந்து அவர் சண்டைக்கு வந்துவிடப் போகிறாரோ என்ற பயம் அவளுக்கு.

"மணி அஞ்சுதான் ஆகிறது தெரியுமா?"

"கிழவர் ஒரு மணி நேரமாக இரைந்து கொண்டிருக்கிறார் தெரியுமா?" என்று சொல்லிச் சிரித்தாள் அவள்.

"பின் தூங்கி முன் எழும் பெருமை உனக்குக் கிடைக்கட்டுமே என்றுதான் கொஞ்ச நேரம் தூங்குவதுபோலக் கிடக்கிறேன். இல்லையென்றால்...?"

"ஆ... கா ..." என்று நொடித்தாள் மஞ்சு.

"ஒன்ஸ் மோர் ப்ளீஸ்...!"

"போறுமே! அசடு வழியறது —அவளுடைய 'ஆகா'வை நான் ரசித்த பெருமையில் மலர்ந்த புன்னகையுடன் அவள் உள்ளே போய்விட்டாள்.

திறந்த வெளி முற்றத்தில் குழாயடியில் குடத்தில் தண்ணீர் பிடித்துக் கொண்டு நின்றிருந்தார் கிழவர்.

"வீட்டிலே என்ன சாமான் இருக்கும், இல்லைன்னு கூடத் தெரிஞ்சு வச்சுக்காத மனுஷியோடு என்ன குடித்தனம் வேண்டிக்கிடக்கு ஸார்! அமாவாசையாச்சேன்னு காலங் கார்த்தாலே குளிச்சுப்பிட்டுத் தர்ப்பணத்துக்கு எள்ளு டப்பாவை எடுத்தா அது காலியாகக் கிடக்கிறது. நேத்துச் சாயங்காலமே அது இல்லைன்னு சொல்லியிருந்தால் வாங்கி வந்திருக்க மாட்டேனா...? ஒரு-இது வேண்டாம்?"

"அப்புறம் என்ன பண்ணினீர்கள்?"

"டப்பாவிலே ஒரு நாலைந்து எள்ளு கிடந்தது. அதைக் கொண்டே தர்ப்பணத்தை முடிச்சுண்டுட்டேன். காலையிலே

போய் எள்ளுக்குக் கடன் கேட்க முடியுமா யாரிடமும்?- இது மட்டுமில்லை. எதிலேயுமே அவள் இப்படித்தான்!''

"குடம் நிறைஞ்சுடுத்தே!"

''ஓ...!'' - குடத்தை எடுத்துக் கொண்டு கிழவர் நகர்ந்தார்.

''இன்றையச் சண்டைக்குக் கிழவருக்கு எள்ளு அகப்பட்டதாக்கும். நல்ல ஜன்மமய்யா!'' என்று சொல்லிக் கொண்டே வந்தார் சேஷராமன். குழாயை ஒட்டினாற் போலுள்ள வீட்டில் குடியிருப்பவர் அவர்.

''ஏதாவது வேண்டுமே!''

இந்தக் காம்பவுண்டுக்குள் மொத்தம் எட்டு வீடுகள். வாடகைக்கு விடும் நோக்கத்துடனேயே கட்டிப் போடப் பட்டவை தான் எல்லாம். பணம் பண்ணத் தெரிந்த மனிதரான குமரப்ப செட்டியார் என்பவர் யுத்த காலத்தில் மிகவும் குறைந்த விலையில் இந்த இடத்தில் மனை வாங்கி இப்படி எட்டு வீடுகளைக் கட்டிக் 'குமரப்பா ஸ்டோர்' என்று இந்தக் காம்பவுண்டுக்கு நாமகரணமும் சூட்டி வைத்து விட்டார். இப்போது இதன் மூலம் அவருக்குக் கிடைக்கும் மாத வருமானம் ஐந்நூறு ரூபாய்.

இந்த ஸ்டோரில் குடியிருக்கும் குடும்பங்களிடையே 'சண்டைக் கோழிகள்' என்ற பெயருடன் பிரசித்தி பெற்றிருந் தார்கள் என் பக்கத்து வீட்டுக் கிழவரும் கிழவியும். ஒரு நாள் ஒரு பொழுதாகிலும் கிழவியைத் திட்டாவிட்டால் கிழவருக்குப் பொறுக்காது. அதே போல் அவரைப் பற்றி யாரிடமாவது ஏதாவது குறை சொல்லாவிட்டால் கிழவிக்கு மண்டை வெடித்து விடும்.

அவருக்குக் கிட்டத்தட்ட அறுபத்தைந்து வயசிருக்கும். கிழவிக்கு அவரை விட ஏழெட்டு வயசு குறைவு என்று அவர்

எப்போதோ ஒரு முறை சொன்னதாக ஞாபகம்! இந்த வயசிலே அறுபது ரூபாய் வாடகை வீட்டில் தனிக் குடித்தனம் நடத்திக் கொண்டு தினமும் சண்டையும் சச்சரவு மாகக் காலம் கழிப்பதுதான் அவர்களுக்குப் பாந்தமாக இருக்கிறது. ராம லட்சுமணர்களாய் இரண்டு பையன்கள் பம்பாயில் கைநிறையச் சம்பாதிக்கிறார்கள். அவர்களுடன் போயிருந்து கடைசிக் காலத்தை நிம்மதியாகக் கழிக்கக் கூடாதா?

ஒரு சமயம் நான் அவரையே கேட்டு விட்டேன்.

"பேசாமல் பையன்களோடு போயிருப்பதுதானே? இப்படி இங்கே தனியே சிரமப்பட்டுக் கொண்டிருப்பதை விட அது எவ்வளவோ சௌகரியமாக இருக்குமே'"

"இவளுக்கு அதெல்லாம் சரிப்பட்டு வராது, ஸார்!"

இவர் பையன்களுடன் சேர்ந்திராததற்குக்கூட அவளைத் தான் காரணமாக்கினார். இதில் வேடிக்கை என்னவென்றால் 'கிழவருடைய பிடிவாதத்தினால்தான் இந்த வயசுக் காலத்தில் இப்படித் தனியே திண்டாட வேண்டியிருக்கிறது!' என்று மஞ்சுவிடம் கிழவி அலுத்துக் கொண்டாளாம். எப்படி இருக்கிறது கதை!

இப்போது ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. அன்றைக்கு ஏதோ ஒரு விடுமுறை நாள். கிழவர் எங்கோ வெளியே போயிருந்ததனால் ஏற்பட்ட இரைச்சல் இல்லாத சூழ் நிலையும், விடுமுறை என்ற உணர்வும் தூண்டவே நான் நாற்காலியில் சாய்ந்தவாறே தூங்கிப் போயிருந்தேன்,

கண் விழித்தபோது சமையலுள்ளிலிருந்து பேச்சுக் குரல் கேட்டது. தலையை நிமிர்த்தி எட்டிப்பார்த்தேன். அடுத்த வீட்டுப் பாட்டி தான் மஞ்சுவிடம் பேசிக் கொண்டி ருந்தாள்

"ஆன வயசுக்கு அடையாளமில்லாமே இந்தக்கிழத்துக்கு இப்படிப் புத்தி போகணுமாடி மஞ்சு? குருக்கள் வீட்டிலே போய்த்தான் சீட்டாடிண்டு உட்கார்ந்திருப்பார்னு நினைச் சேன். சுப்புணியை அனுப்பிச்சேன்; மணி மூணாகப் போறதே; வந்து காப்பியைக் குடிச்சுட்டிப் போகட்டும்னு!-' "தாத்தா குருக்கள் வீட்டிலே இல்லே பாட்டி. பத்மினி அக்கா வோடே 'செஸ்' ஆடிண்டிருக்கார். கூப்பிட்டேன். வரேன் போ என்று சொல்லிட்டார்!'— அப்படீன்னு அந்தப் பையன் வந்து சொல்றான். 'எந்தப் பத்மினியக்காடா?' ன்னு கேட்டேன். வக்கீல் மாமாவோட பொண்ணு பத்மினி யில்லே? காலேஜிலே படிக்கிறாளே!' என்று சொல்லிட்டு ஓடிப் போயிட்டான் அவன். என்னதான் இருந்தாலும் வயசு வந்த பொண்ணோட சட் என்ன 'செஸ்' வேண்டிக் கிடக்கு! காப்பி சாப்பிடக் கூட நேரமில்லே-அத்தனை சுவா ரசியம்! என்னவோ போ!"

வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டேன்.

சற்றைக்கெல்லாம் கிழவர் வந்து விட்டார். அன்றைக்குப் பாட்டியின் கைதான் மேலோங்கி நின்றது.

மூன்று நாட்கள் அதற்குப் பிறகு, அவருடன் பேசவில்லை யாம்: மஞ்சு சொன்னாள்.

"இவ்வளவு இரைகிறாரே தவிர அவளிடம் அவருக்கு உள்ளூறப் பயம் என்று தான் சொல்ல வேண்டும். மனிதர் அதற்குப் பிறகு குருக்கள் வீட்டுக்குக் கூட சீட்டாடப் போவ தில்லை"'

வேடிக்கையாக மஞ்சுகூடச் சொல்வதுண்டு.

"தாத்தாவுக்கு வெறும் வாய் ஜம்பம் தான். பாட்டியின் சாமர்த்தியத்தில் பாதி கூடக் கிடையாது!"

"உன் வர்க்கமில்லையா? நீ அதற்குத்தான் மதிப்புக் கொடுப்பாய்!" என்று அவள் வாயை அடக்கி வைத்தேன்.

பல் தேய்த்து விட்டு வந்து காப்பி குடித்துக் கொண்டிருந்தேன்.

"விஷயம் தெரியுமா உங்களுக்கு? தியாகுவுக்குக் கலியாணம் நிச்சயமாயிருக்கு!," என்றாள் மஞ்சு.

"எந்தத் தியாகுவுக்கு?..."

"அடுத்த வீட்டுத் தாத்தாவின் இரண்டாவது பிள்ளைக்கு—!"

"என்ன மஞ்சு இது? இன்னும் ஒரு வருஷம் முடியலையே அதற்குள்ளாகவா?"

"நேற்றுத்தான் கடிதாசி வந்ததாம். மூத்த பிள்ளை எழுதியிருக்கான். தியாகுவோடு அவன் வேலை பார்க்கிற கம்பெனியிலே டைப்பிஸ்டாக வேலை செய்யறதாம் அந்தப் பெண். அடுத்த மாதம் பம்பாயிலேயே கலியாணம் நடக்கும் போலத் தெரிகிறது?"

என்னால் நம்பத்தான் முடியவில்லை. அந்தப் பையன் தியாகு எப்படி இவ்வளவு சீக்கிரம் அவளை மறந்தான்?

இந்த ஸ்டோருக்குக் கிழவர் குடி வந்தபோது தியாகுவும் தன் மனைவியோடு கூட வந்திருந்தான். ஒரு மாதம் அவனும் அவன் மனைவியும் இங்கே தங்கியிருந்தார்கள். அவன் மனைவி உமா நல்ல அழகி. அப்பா அம்மாவுக்கு நேர் எதிரான தம்பதிகள் அவர்கள். அத்தனை ஒற்றுமை. அவள் காலில் ஒரு முள் குத்தினால் அவன் கண்ணில் ரத்தம் கசியும். அதே போல் அவனுக்கு இலேசாகத் தலைவலி என்றால் கூட அந்தப் பெண் தாங்க மாட்டாள் இருந்த ஒரு மாத காலத்திலும் எங்கள் வீட்டோடு மிகவும் ஒன்றிப் போய் விட்டார்கள்

அவர்கள் இருவருமே, அதனால் அவர்களுடைய அந்த நெருக்கமான அன்புப் பிணைப்பை நாங்கள் நன்றாக உணர்ந் திருந்தோம்.

தாத்தாவும் பாட்டியும் எப்படி ஒருவரை ஒருவர் குறை கூறுவதையே தொழிலாகக் கொண்டிருந்தார்களோ அதே போல் தியாகுவும் உமாவும் ஒருவரை ஒருவர் புகழ்வதையே தொழிலாகக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அப்படி ஒற்றுமையாக இருந்தது தான் தெய்வத்துக்குப் பொறுக்க வில்லையோ என்னவோ? இங்கிருந்து அவர்கள் புறப்பட்டுச் சென்ற ஒரு மாதத்துக்கெல்லாம் அந்தப்பெண் உமா இறந்து போய் விட்டாள் என்று ஒரு நாள் கிழவருக்குத் தந்தி வந்து விட்டது. கருச் சிதைவாம். ஏதோ காரணம் காட்டிக் காலன் அந்த மலரைப் பறித்துக் கொண்டு போய் விட்டான்!

பாட்டியும் தாத்தாவும் அடைந்த அதிர்ச்சியை விட அந்தத் தந்தியைப் பார்த்ததும் நானும் மஞ்சுவும்தான் பொறி கலங்கிப் போய் நின்றோம்.

"ஐயோ! அவர் எப்படித் தாங்கப் போறார் இதை" என்று ஏக காலத்தில் நானும் மஞ்சுவும் சொல்லிக் கொண் டோம்.

ஆனால்—

அந்த உமா மறைந்து ஓராண்டு கூட முடியவில்லை. தியாகுவுக்கு இரண்டாம் கலியாணம்! அவன் மனம் எப்படி இதற்குச் சம்மதித்தது! அவன் என் எதிரே இருந்தால்

"எப்படியப்பா உனக்கு மனம் மாறியது" என்று கேட்டு உலுக்கி யிருப்பேன்!-என்ன விசித்திர உலகம் இது!

சாயங்காலம் கிழவரே தியாகுவின் கலியாணம் நிச்சய மாகியிருப்பதை என்னிடம் தெரிவித்தார்.

''நீங்க தப்பா நினைச்சுக்கப்படாது. அதற்குள்ளாக உமாவை மறந்துவிட்டு எப்படி இந்த முடிவுக்கு உங்க பையனால் வர முடிந்தது?''

''இந்தக் காலத்துப் பிள்ளைகளோட மனசைப்பத்தி நான் என்ன சொல்ல—! எதிலேயும் கால் ஊன்றி நிற்காத ஒரு போக்கு! ஏதோ ஒரு பர பரப்பான உணர்ச்சியில் காலத்தை ஓட்டற வாழ்க்கைதான் இப்போ நடக்கிறது!'' என்று பதில் சொல்லிவிட்டார்.

அதற்குப் பிறகு இது பற்றி நான் ஏதும் பேசவில்லை. கலியாண அழைப்பை அவர் கொணர்ந்து கொடுத்த போது கூட ''சந்தோஷம்'' என்ற ஒரு சொல்லோடு நிறுத்திக் கொண்டேன்

கலியாணத்தை முன்னிட்டு, பம்பாய்க்குப் போன கிழவரும் கிழவியும் ஒரு மாதம் பிள்ளைகளுடன் தங்கிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். அதற்கு மேல் அவர்களுக்கு அங்கே இருக்கப் பொறுமை இல்லை. அவர்கள் இல்லாத ஒரு மாத காலத்திலும் எங்கள் ஸ்டோரே களை இழந்து கிடந்தது.

''பையன் எப்படி இருக்கிறான்...?'' என்று கேட்டேன் தாத்தாவிடம்.

''அவளையும் அழைத்துக் கொண்டு 'ஹனிமூன்' போயிருக்கிறான்!'' என்றார் அவர்.

''பின்னே உங்களைப் போல கட்டின பெண்டாட்டியைத் திட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கணுமா? '' என்றாள் பாட்டி.

வீட்டுக்கு வந்ததும் மஞ்சுவிடம் சொன்னேன்.

''ஆண்களே அப்படித்தான்! உமா... உமா... என்று உயிரைவிட்ட மனுஷனுக்கு இனிமேல் அப்படி ஒருத்தி இருந்தாள் என்பதுகூட மறந்துபோயிடும்!'' என்றாள் அவள்.

தியாகுவை நினைக்கும்போது எனக்குக்கூட எரிச்சலாகத் தான் இருந்தது. மண வாழ்க்கை அவனைப் பொறுத்த வரை ஒரு பொம்மை விளையாட்டாக அல்லவா இருக்கிறது

பம்பாயிலிருந்து அவர்கள் திரும்பி வந்து ஒரு வாரம் ஆகியிருக்கும். ரயில் பிரயாணத்தின் அலுப்பிலோ என்னவோ கிழவிக்கு ஜுரம் வந்து விட்டது.

''பாவம். கிழவிக்கு நல்ல ஜுரம் அடிக்கிறது. தலைவலி தாங்க முடியவில்லையாம். ராத்திரியெல்லாம் முனகிக் கொண்டே இருந்தாள். போய்ப் பார்த்து விட்டு வாருங்கள்!'' என்றாள் மஞ்சு.

போயிருந்தேன். ஈன ஸ்வரத்தில் முனகிக் கொண்டு பாட்டி படுத்துக் கொண்டிருந்தாள்.

''என்ன பாட்டி இது—?''

சிரமப்பட்டுக் கண்ணைத் திறந்து பார்த்தாள். அவள் கண்களில் கண்ணீர் கரை கூட்டி நின்றது.

''வாங்கோ?'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே இருந்து வந்தார் கிழவர். கிழவிக்குக் காப்பி போட்டுக் கொணர்ந்திருந்தார்.

''எழுந்திருக்க வேண்டாம். படுத்துண்ட வாக்கிலே சாப்பிடு!'' என்று சொல்லிக் காப்பி டம்ளரைக் கிழவியின் கையில் கொடுத்தார் அவர். சோகம் கப்பிக் கிடந்த அவர் முகத்திலே பரிவும் பாசமும் சோகத்தினூடு அலை தெறிப் பதை என்னால் காண முடிந்தது.

''டாக்டரிடம் காண்பிப்பதுதானே...?'' என்றேன்.

''காண்பிக்க வேண்டியதுதான். ஆனால் இந்த உடம் போடு இவளை எப்படி டாக்டரிடம் அழைத்துக் கொண்டு போக முடியும்?''

"நான் வேணுமானால் போய் அழைத்து வருகிறேனே!" என்றேன்.

"பாவம், உங்களுக்கு வேறே சிரமம்" என்றார் அவர்.

"பரவாயில்லை...!"

டாக்டர் வந்து பார்த்தார். ஊசி போட்டார், ஏதோ மருந்துகள் வாங்கச் சொல்லி எழுதிக் கொடுத்தார்.

"ஒண்ணும் பயமில்லையே டாக்டர்!' 'என்று நாத் தழுதழுக்க வாசலில் டாக்டர்காரில் ஏறும்போது கேட்டார் கிழவர்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. வரட்டுமா!" கார் கிளம்பி விட்டது.

"ஈசுவரா...!" என்று நெடுமூச்செறிந்தார் கிழவர்.

நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. ஒரு வாரம் ஓடி விட்டது. கிழவிக்கு உடம்பு குணமாகிற வழியாயில்லை. இந்த ஒரு வாரத்திலும் அவர் குரல் ஒரு முறைகூட உரக்க எழும்பவில்லை. ஒரு பெண்கூட அத்தனை சிரத்தையுடன் கவனித்துக் கொள்ள முடியாது. கிழவர் அப்படிக் கவனித்துக் கொண்டிருந்தார் மனைவியை.

வெளித் தோற்றத்தில் சதா சர்வகாலமும் கிழவியிடம் சண்டை போடுகிறவராகவே தெரிந்த அவர் உண்மையில் அவளிடம் எவ்வளவு அந்தரங்கமான அன்பு கொண்டிருக் கிறார் என்பதை நாங்கள் புரிந்து கொண்டோம்,

'கிழவரின் இந்த அன்புக்கு இரங்கியாவது கிழவிக்கு உயிர்ப் பிச்சை கொடு, ஆண்டவனே!' என்று எல்லாருமே வேண்டிக் கொண்டோம். நாங்கள் எல்லாருமே வற்புறுத்திய தின் மேல் பிள்ளைகளுக்குத் தந்தி கொடுத்தார் கிழவர்.

இரண்டு பிள்ளைகளும் தங்கள் மனைவிமாருடன் வந்து சேர்ந்தார்கள். உமாவுட ன்எப்படிப் பழகிக் கொண்டிருந்

தானோ அதே போன்ற பகட்டுப் பாசத்துடன் தன் புதிய மனைவியைச் சுற்றி வந்து கொண்டிருந்தான் தியாகு. கொஞ்சம்கூட சங்கோசமில்லாமல் தன் புதிய மனைவியைப் பற்றி அவன் என்னிடம் புகழ்ந்தபொழுது நான் மனத்துக்குள் நகைத்துக் கொண்டேன். பிள்ளைகள் வந்து விட்டார்கள் என்பதற்காகக் கிழவரிடம் ஏதும் மாறுதல் இல்லை. தம் மனைவிக்கான பணிவிடைகளை யெல்லாம் கிழவர் தாமே கவனித்துக் கொண்டிருந்தார். வாய் ஓயாமல் பேசிக் கொண்டிருக்கும் அவர் இப்போதெல்லாம் பேசுவதே அரிதாகியது.

''பாவம் இந்தத் தாத்தாவை நினைத்தால்தான் கஷ்ட மாக இருக்கிறது!'' என்று கூறினாள் மஞ்சு.

'ஏன் ?''

''இன்றைக்கு இரவு தாண்டாது போல் இருக்கிறது!''

''அடப் பாவமே?''

அந்த இரவு தாண்டத்தான் இல்லை. கிழவி கண்ணை மூடி விட்டாள். கிழவர் முகத்தை மூடிக் கொண்டு வாய் விட்டு அன்று இரவு அழுதததான். அதன் பிறகு அழவில்லை. பேசும் சக்தியையே இழந்து விட்டவராய்ப் பிரமை பிடித்து உட்கார்ந்து விட்டார்.

காரியங்கள் நடந்து முடிந்ததும் கிழவரையும் அழைத்துக் கொண்டு பிள்ளைகள் புறப்பட்டார்கள்

புறப்படுகையில் என் கைகளைப் பற்றிக் கொண்டு நன்றியும் சோகமும் நிறைந்த தம் பார்வையால் என்னிடம் விடைபெற்றுக் கொண்டார் கிழவர். உதடுகள் அசைந்தன. ஒலி எழும்பவில்லை.

தம்மிடமிருந்த சொற்களை யெல்லாம் தன் அன்பு மனைவிக்கே அர்ப்பணித்துவிட்டு வெறுமையாகிவிட்ட அவர் உதடுகள் இனி என்றுமே பேச முடியாதுஎனத் தோன்றியது·

கல்கி

# பீடமும் படிகளும்

வெளியே யாரோ கூப்பிடும் குரல் கேட்டுக் கண் விழித்தான் நாச்சிமுத்து. உடம்பின் சோர்வு இன்னமும் நீங்கிய பாடில்லை. எழுந்திருக்கவே வேண்டாம் போல ஓர் அயர்ச்சி. இன்னும் கொஞ்ச நேரம் தூங்கியிருக்கலாம்.

''நாச்சிமுத்து!''

கந்தசாமியின் குரல்தான். இந்த எலெக்ஷன் வந்தாலும் வந்தது, நிம்மதியாகப் படுத்துத் தூங்கின நாளே இல்லை என்றாகி விட்டது.

படுக்கையில் எழுந்து உட்கார்ந்தவாறே. ''உள்ளே வாயேன், அண்ணே!'' என்று குரல் கொடுத்தான்.

''நல்ல தூக்கம் போலிருக்கு'' என்று சொல்லிக்கொண்டே உள்ளே வந்தான் கந்தசாமி.

''மூணு நாளா ராத்திரித் தூக்கமில்லையே!'' என்று சொல்லிவிட்டுக் கைகளைத்தலைக்கு மேலே தூக்கிச் சோம்பல் முரித்தான் நாச்சிமுத்து. ஒரு டீயோ காபியோ குடித்தால் தான் எழுந்திருக்க முடியும் என்று தோன்றியது. பார்வதி எங்கே போய்த் தொலைந்தாள்?

''பாரு, ஏ பார்வதி!''

"இதோ வரேனுங்க" என்று கொல்லைப் புறத்திலிருந்து குரல் வந்தது. கொல்லைப்புற வாய்க்காலில் தேய்த்துக் கழுவிய பாத்திரங்களை எடுத்துக்கொண்டு பார்வதி உள்ளே வந்தாள்.

"அண்ணனுக்கும் எனக்கும் காபி கொண்டா."

"இப்போதான் நாயர் கடையிலே டீ குடிச்சேன்" என்றான் கந்தசாமி. காபி வேண்டாமென்று அவன் சொல்லவில்லை.

"அதுக்கென்ன தண்ணிதானே? இரு. முகம் கழுவிட்டு வரேன்."

பாயைச் சுருட்டி ஓரமாகப் போட்டுவிட்டு உள்ளே போனான். கீழே கிடந்த பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தான் கந்தசாமி.

துண்டினால் முகத்தைத் துடைத்துக் கொண்டே வந்து சுவரோரமாக உட்கார்ந்தான் நாச்சிமுத்து. இப்போது அவன் சற்று உற்சாகமாக இருந்தான்.

இரண்டு கண்ணாடித் தம்ளர்களில் காபி கொணர்ந்து வைத்தாள் பார்வதி.

"எடுத்துக்க."

காபியை உறிஞ்சிக் குடிக்கையில் தூக்கக் கலக்கமும் சோர்வும் விடைபெற்றுக் கொண்டுவிட்டன.

"என்ன சேதி?" என்று கேட்டான் கையில் காபித் தம்ளருடன்.

கந்தசாமி காபியை ருசித்துப் பருகிக் கொண்டிருந்தான்.

''எட்டு மணிக்குக் கம்மாளத் தெருவிலே கூட்டம் இருக்கு. நெனைவிருக்கில்லே;''

காலித் தம்ளரைக் கீழே வைத்துவிட்டு, மேல்துண்டினால் உதட்டைத் துடைத்துக்கொண்டு அவனைப் பார்த்துச் சிரித்தான் நாச்சிமுத்து.

''மணி என்ன ஆறது?''

''நாலு இருக்கும்.''

''கொஞ்சம் இரு. இதோ கௌம்பிடலாம்!''

மறுபடியும் பத்திரிகையைப் புரட்டத் தொடங்கினான் கந்தசாமி,

உள்ளே போய்ப் பார்வதியிடம், இரவு வரநேரமாகுமென்றும், பத்திரமாக இருக்கும் படியும் சொல்லிவிட்டு வந்து, உடுத்தியிருந்த அழுக்கு வேட்டியைக் களைந்துவிட்டு, கொடியில் காயப் போட்டிருந்த வேட்டியையும், சுவராணியில் தொங்கிக்கொண்டிருந்த சட்டையையும் எடுத்து அணிந்து கொண்டான். பெஞ்சின் மீது கண்ணாடியை வைத்து முகம் பார்த்துக் கொண்டான்.

''புறப்படலாமா?''

இனி, இரவு பன்னிரண்டு மணியோ அல்லது விடிந்த பிறகே தானோ?

பார்வதி வந்து அவர்களை வழியனுப்பி விட்டுக் கதவைத் தாழ்போட்டுக் கொண்டு போனாள். அவர்கள் உற்சாகமாக நடந்து போவதை ஜன்னல் வழியாகப் பார்த்துவிட்டுப் பெருமூச் செறிந்தாள்.

கம்மாளத் தெரு முனையில் அலங்கார மேடை அமைத்துக் கொண்டிருந்தார்கள். தெரு முழுக்கக் கட்சிக் கொடிகளால் தோரணம் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஏதோ

கலியாண வீட்டுக் காரியத்தைக் கவனிப்பதுபோல, இருபது முப்பது பேர் இடைவிடாமல் அந்தத் தெருவில் இயங்கிக் கொண்டிருந்தார்கள். கந்தசாமியும் நாச்சிமுத்துவுமே மேற் பார்வை.

''டேய், அந்தக் கம்பத்திலே கட்டாதேடா. காத்தடிச் சாக்கூட அறுந்து ஒடிஞ்சிடப் போவுது. எதுத்த வீட்டு ஜன்னல் கம்பிலே கட்டு. ஆங், அப்படித்தான்.''

''இந்த 'வருக வருக'வைக் கொண்டுபோய்த் தெரு முனையிலே கட்டு.''

''டேய் சின்னத்தம்பி, ராவுத்தர் வீட்டிலே ஒரு பெரிய நாற்காலி இருக்கு. சிம்மாசனம் கணக்கா இருக்கும். தலை வருக்கு அதைக் கொண்ணாந்து போட்டிடணும்.''

''மூணு நாலு பெஞ்சு வேணும். பக்கத்து இஸ் கூலிலே இருந்து எடுத்தாரலாம்.''

இப்படி ஒருவர் மாற்றி ஒருவர் கட்டளை பிறப்பித்த வண்ணந்தான்.

''எல்லாம் இன்னம் ஒரு வாரத்துக்குத் தானே? இல்லை யாண்ணே?'' என்று சொல்லிக் கொண்டே ஒரு பீடியைப் பற்றவைத்துக் கொண்டான் கந்தசாமி.

''அப்பறம் வெற்றி விழா இல்லே?''

''வெற்றியைப் பத்தி அவ்வளவு நிச்சயமாயிடுத்துன்னு சொல்லு!''

''இதிலே சந்தேகம் வேறயா?'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தான் நாச்சிமுத்து.

தெரு முனையில் ஒரு சைக்கிள் ஊர்வலம் வந்துகொண் டிருப்பது தெரிந்தது. பெஞ்சில் உட்கார்ந்திருந்த நாச்சி முத்து எழுந்து நின்று பார்த்தான்.

''பர்வதநாதனுக்கே ஓட்டுக் கொடுங்கள்!''

''நம்பாதே நம்பாதே, நரிக்கூட்டத்தை நம்பாதே!''

''நல்லசாமியை நம்பாதே! நடுத் தெருவில் நிற்காதே!''

''இவங்க பெரிய புலிக் கூட்டம், போக்கத்த பசங்க!'' என்று கோபமாகக் காறி உமிழ்ந்தான் நாச்சிமுத்து.

''எல்லாம் கூலிப் பட்டாளம்!''

ஊர்வலம் இவர்களைப் பார்த்துவிட்டு இன்னும் பெரிதாகக் கோஷமிட்டது. மொத்தம் இருபது பேர்தாம் இருந்தார்கள். இருந்தாலும் அவர்களின் அட்டகாசம் பெரிதாகத்தான் இருந்தது.

''நம்ம சனங்களை முளுக்க நம்பறத்துக்கில்லை, நாச்சிமுத்து. அவுங்க கட்சியிலே அந்த ரவுடிப்பய ஆறுமுகம் வேற இருக்கான்.''

கந்தசாமியை எரிச்சலுடன் பார்த்தான் நாச்சிமுத்து.

''உன் மாதிரித் தொடைநடுங்கிப் பசங்களாலேதான் நமக்குச் சங்கடமே வருது. பெரிய ரவுடிப்பய! சும்மா வெறும் அரட்டலும் உருட்டலுந்தான். பந்தயம் வேணா வச்சுக்குவம். நம்ம நல்லசாமியண்ணன் ஜெயிக்கலைன்னா நான் தலையை மொட்டை அடிச்சிக்கிறேன்.''

''வேண்டாம் வேண்டாம். இப்பவே தலை பாதி மொட்டையாகத்தான் இருக்கு.''

பாதி வழுக்கையாயிருந்த தன் தலையைத் த்டவிவிட்டுக் கொண்டான் நாச்சிமுத்து.

கந்தசாமியின் அநாவசியமான சந்தேகம் அவனுக்கு எரிச்சலூட்டினாலும் ரவுடி ஆறுமுகத்தைப் பற்றிய சிந்தனையை அவ்வளவு எளிதாக அவனால் ஒதுக்கிவிட முடியவில்லை.

அதற்கேற்றாற்போல அன்றிரவு கூட்டம் நடந்து கொண்டிருந்தபோது, அதுவும் நல்லசாமி பேச எழுந்திருந்த வேளையில், எங்கிருந்தோ ஒரு கழுதைக் கூட்டம் திமுதிமு வென்று கூட்டத்தில் புகுந்தடித்துக் கொண்டு ஓடிவந்தது. வெகு அமைதியாகத் தெருவை அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த மனிதக் கும்பலுக்கிடையில் இப்படி எதிர் பாராது புகுந்த கழுதைகளைக் கண்டு கூட்டத்தில் பாதிப் பேர் எழுந்திருந்து மிரண்டு போய், ஒரே அமளியாகிவிட்டது.

வேண்டுமென்றே ஆறுமுகந்தான் இப்படிக் கழுதை களைக் கூட்டத்திற்குள் அடித்து விரட்டியிருக்கிறான்.

"களுதைப்பய வேலை தான் இது. என்ன நெனைச்சுக் கிட்டிருக்கான் அவன்?" என்று கறுவிக் கொண்டிருந்தான் நாச்சிமுத்து.

"நீ கொஞ்சம் பொறுமையாயிரு, நாச்சிமுத்து. அவன் இன்னும் என்னென்ன செய்யப் போறானோ?'

"இங்கே யாரும் கையாலாகாத முண்டமில்லே அண்ணே!"

சிறிது நேர அமளிக்குப் பின் கூட்டம் தொடர்ந்து நடக்கத்தான் செய்தது.

நல்லசாமி தனக்கே உரிய பாணியில், இந்த மாதிரி விஷமம் செய்கிறவர்களுக்குச் சரியாகச் சொல்லாலே சூடு போட்டுக்கொண்டிருந்தார். ஆயினும் நாச்சிமுத்துவுக்குத் தான் ஜுரவேகம் ஏறுவதைப்போல மனத்துக்குள் கோபம் ஏறிக் கொண்டிருந்தது.

அன்று கூட்டம் முடிகிறபோது மணி பன்னிரண்டுக்கு மேல் ஆகிவிட்டது. அதற்குப் பிறகு நாற்காலி, பெஞ்சுகள் முதலியவற்றை உரியவர்களிடம் சேர்த்துவிட்டு, நாச்சி முத்து

வீடு திரும்பும் போது மணி இரண்டாகி விட்டது. இடை இடையே பொறையும் டீயும் சாப்பிட்டதில் எப்போதோ தூக்கம் கலைந்து போயிருந்தது. நன்றாகத் தூங்கிக்கொண் டிருந்த பார்வதியை எழுப்பிக் கதவைத் திறக்கச் சொன்னது தான் மிச்சம். உள்ளே போய்ப் படுத்துக் கொண்டால் தூக்கம் வந்தால்தானே?

'என்ன நெஞ்சழுத்தம் இருந்தால் இப்படிக் கழுதைக் கூட்டத்தை ஏவி விட்டிருப்பான்? தட்டிக் கேட்க ஆளில்லாமல் தான் இவன் இப்படி ஆகியிருக்கிறான்,

கண்ணை மூடிக் கொண்டிருந்த போதிலும் ஆறு முகத்தின் கொடுவாள் மீசையும் அட்டகாசச் சிரிப்புமே நினைவில் தோன்றின.

'இதெல்லாம் உன் வேலை தானேடா?' என்று சுடச்சுட அவனையே நேரில் கேட்டுவிட்டால் என்ன?

இல்லை என்று சாதிக்கப் போகிறான். கேட்பதனால் மட்டும் என்ன ஆகிவிடப் போகிறது?

இருந்தாலும், 'நாம் என்ன செய்தாலும் யாரும் எதுவும் கேட்க மாட்டார்கள்' என்ற அவனுடைய எண்ணத்தை முறியடிக்கத்தான் வேண்டும்,

படுக்கையில் படுத்துப் புரண்டு கொண்டிருந்த நாச்சி முத்துவின் மனத்தில் இந்த எண்ணந்தான் தீவிரமாகிக் கொண்டிருந்தது.

தூங்காததனால் கண்கள் எரிந்தன. பசிக்க வேறு ஆரம்பித்து விட்டது.

எழுந்து உட்கார்ந்து பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான். உறிஞ்சி இழுத்துப் புகையை விட்டபோது சுகமாக இருந்தது. அந்த சுகத்தில் லயித்துப் போய்ப் புகைத்துக் கொண்டிருந்தான்.

தூக்கம் கலைந்து பார்வதி எழுந்திருந்த போதும் அவன் ஏதோ சிந்தனையுடன் பீடியைப் புகைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"என்னங்க இது? நீங்க தூங்கவேயில்லை?"

"தூக்கம் வரலை; போ, சுருக்காக் கொஞ்சம் காபித் தண்ணி வை."

"என்னங்க இது? இப்படித் தூங்காம இருந்தா உடம்பு என்னத்துக்கு ஆகும்?" என்று கேட்டு விட்டுப் பாயைச்சுருட்டி வைத்து விட்டு உள்ளே போனாள் அவள்.

எழுந்து சோம்பல் முறித்து விட்டு வாசற்புறம் வந்தான். பொழுது நன்றாக விடிந்து விட்டிருந்தது. அன்றைக்கு அவனுக்கு நிறைய வேலை இருந்தது. வீடு வீடாகச் சென்று வாக்காளர் பட்டியலின் படி சீட்டுக் கொடுக்கச் செய்ய வேண்டும். இன்று கந்தசாமியோ, முத்துமாணிக்கமோ சென்றால் போதும். தேர்தலுக்கு ஒரு நாள் முன்பாக நல்ல சாமி அண்ணாச்சியே எல்லா வீட்டுக்கும் போய் வந்தால் தான் நல்லது.

பொதுவாகவே நல்லசாமிக்குத் தான் வாய்ப்புக்கள் இருந்தன. எதிர்க்கட்சியில் நிற்கும் பர்வதநாதனுக்கு மக்களிடம் அவ்வளவு நல்ல பேர் இல்லை. ஏற்கனவே முனிசிபல் சேர்மனாக அவன் இருந்து நிறையக் கெட்டபேர் சம்பாதித்திருந்தான். இருந்தாலும் அவன் கட்சிக்குப் பண பலமும், ரவுடி ஆறுமுகம் போன்ற அடியாட்களின் பலமும் இருந்தன.

எந்த நினைப்பின் நடுவிலும் ஆறுமுகந்தான் வந்து நின்றான். பர்வதநாதன் எதிரியா? ஆறுமுகம் எதிரியா? இப்படி ஒரு நினைப்புத் தோன்றியபோது தன்னை அறியாது வாய்விட்டுச் சிரித்து விட்டான் நாச்சிமுத்து.

அவன் அப்போது சாப்பாட்டு இலைமுன் உட்கார்ந் திருந்தான். பார்வதி எதிரே உட்கார்ந்து பரிமாறிக் கொண் டிருந்தாள்.

''என்னங்க இது, தனக்குத் தானே சிரிச்சுக்கிட்டு? இந்த எலெக்சன் வந்தாலும் வந்தது. நீங்க நீங்களாகவே இல்லை.''

''என்னமோ நெனைப்புப் போ; கொஞ்சம் கறி வை.''

அவள் அவனை விநோதமாகப் பார்த்தாள். இப்போ தெல்லாம் அவன் நிதானமாகச் சுவைத்துச் சாப்பிடுவது கூடக் கிடையாது. ஏதோ கோட்டையைப் பிடிக்கப் போகிறவன் மாதிரி, அவசர அவசரமாக அள்ளிப் போட்டுக் கொண்டு எழுந்து விடுகிறான்.

''இந்த எலெக்சன் ஏன்தான் வருதோ?'' என்று அலுத்துக் கொண்டாள் பார்வதி.

''இந்த ஆறுமுகம் போல உள்ளவனெல்லாம் தின்னு கொழுக்கத்தான்'' என்று பதில் சொன்னான் நாச்சிமுத்து. ஆறுமுகம் அவன் சிந்தனையை அப்படி ஆக்கிரமித்துக் கொண்டிருந்தான்.

எதிர்பாராத விதமாக அன்று பிற்பகல் அவனும் ஆறுமுகமும் கடைத் தெருவில் சந்தித்துக் கொண்டார்கள்.

''நேத்து அவங்க கூட்டத்திலே என்னமோ கலாட்டா வாமே?'' என்று இவன் காது கேட்கும்படி பக்கத்தில் நின்ற வனிடம் கேட்டான் ஆறுமுகம். வேண்டுமென்றே அவன் வம்புக்கிழுக்கிறான் என்று நாச்சிமுத்துவுக்குப் புரியாமல் இல்லை. இருந்தாலும் சும்மா இருக்க முடியவில்லை.

''எந்தக் கழுதைப் பயலோ கழுதைகளை வெரட்டிக் கூட்டத்தைக் கலைக்கப் பார்த்தான். அப்படியும் கூட்டம் நல்லாத்தான் நடந்தது.''

தன்னுடன் வந்துகொண்டிருந்த பிச்சையிடம் சொல்வது போல நாச்சிமுத்து அவனுக்குப் பதில் சொன்னான். ''என்ன நாச்சிமுத்து, ரொம்பத் தெனாட்டிலேதான் இருக்காப்பலே?''

அவன் இப்படி நேராகவே சண்டைக்கு வருவான் என்று நாச்சிமுத்து எதிர்பார்க்கவில்லை.

''பின்னே என்ன? ரௌடித் தனமாக் கழுதைங்களை வெரட்டற ஆளுங்க இல்லே நாங்க.''

''டேய்! என்ன, நாக்கு ரொம்ப நீளுது? சீவிப்பிடுவேன் சீவி!''

''சும்மா அரட்டாதே நயினா; இங்கே யாரும் பொட்டையில்லே!''

''அண்ணே, சும்மா இரு அண்ணே'' என்று கெஞ்சினான் பிச்சை.

''டேய்!''

தலையை உதறிக் கொண்டு சிங்கத்தைப் போல உறுமிக் கொண்டு அவன் எழுந்து நின்றதைப் பார்த்தால் நாச்சிமுத்துவைக் குதறிப்போட்டு விடுவான் போலத்தான் இருந்தது.

நாச்சிமுத்து அயரவில்லை. இடுப்பில் கைகளை ஊன்றிக் கொண்டு ஏளனப் புன்கையுடன் அவனை எதிர் கொண்டு நின்றான்.

ஆனால், சொல்லிவைத்தாற் போல் ஆறுமுகத்தைச் சேர்ந்தவர்களுள் இரண்டு பேர் வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டார்கள்.

''விடுங்கோ அண்ணே; சும்மா இருங்க.''

இன்னும் இரண்டு பேர் நாச்சிமுத்துவிடம் வந்தனர்.

''நீங்க போங்க, நாச்சிமுத்து.''

''போலாம் வாங்க அண்ணே'' என்று பிச்சை வேறு அவன் கையைப் பிடித்து இழுத்தான்.

நாச்சிமுத்துவுக்கு அப்படி எளிதாக அவனை விட்டு விட்டுப் போக மனமில்லை. என்றாலும் இரண்டு பேர் வந்து கையைப் பிடித்ததும் ஆறுமுகமே அடங்கி நின்றுவிட்ட பிறகு தான் சண்டைக்குத் தயாராவது சரியாகப்படவில்லை. எனவே, வேறு வழியில்லாமல் பிச்சையுடன் நடக்கத் தொடங்கினான்.

''இவனுக்குச் சரியான பாடம் சொல்லிக் கொடுக்கணும்'' என்று ஆறுமுகம் கூறிக்கொண்டிருந்தது, அவனுக்குக் கேட்கத்தான் செய்தது.

யோசித்துப் பார்க்கும்போது, ஆறுமுகத்துக்கும் அவனுக்கும் எந்த விதமாகவும் பகை ஏற்படக் காரணமேயில்லை என்றுதான் தோன்றியது, உண்மையில் ஆறுமுகத்துக்கு எந்தக்கட்சியும் கிடையாது. ஊரிலே அவன் ஓர் அடாவடிப் பேர்வழி என்று பெயரெடுத்திருந்தான். எதற்கும் பயன் படக்கூடும் என்ற நம்பிக்கையில் அவனை விலைக்கு வாங்கியிருக்கிறான் பர்வதநாதன். 'கூலிக்கு மாரடிக்கிறவனுக்கே இத்தனை வீம்பு என்றால் கொள்கைக்காகவே பாடுபடுகிற நமக்கு எவ்வளவு இருக்க வேண்டும்?, என்று எண்ணிக் கொண்டான் நாச்சிமுத்து.

கூலிக்கு மாரடித்தாலும் பிறரைத் துன்புறுத்துவதில் இன்பம் காணுவது அவன் பிறவிக் குணம் என்பது மெய்யாகி விட்டது.

தேர்தலுக்கு இன்னும் இரண்டே நாட்கள் இருந்தன. பிரசாரக் கூட்டங்களெல்லாம் அன்றுடன் முடிவுடைகின்றன. வீடு வீடாக ஏறி இறங்கியதில் ஏற்பட்ட நம்பிக்கையுடன்

நல்லசாமி கூட்டத்தில் பேசிக் கொண்டிருக்கிறார். அவருக்குச் சோடாவை உடைத்துக் கொடுத்துவிட்டு, மேடையிலிருந்து கீழே இறங்கிக் கொண்டிருக்கிறான் நாச்சிமுத்து. எங்கிருந்தோ பறந்து வந்த இரண்டு சோடாப் பாட்டில்கள் வெடித்து அவன் தலையில் மோதி நொறுங்குகின்றன.

மயங்கிச் சாய்கிறான் நாச்சிமுத்து.

கூட்டம் அலைமோதுகிறது. போலீஸ் ஓடி வருகிறது அடித்தவன் யாரென்று புரியவில்லை. அடிபட்டவனை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்கிறார்கள்.

நல்லசாமி தொடர்ந்து ஆவேசமாகப் பேசிக் கொண்டிருக்கிறார். நாச்சிமுத்து அடிபட்டு விழுந்தது அவருக்கு நம்பிக்கையூட்டும் வெறிப் பேச்சுக்கு அஸ்திவாரம் அமைத்துக் கொடுத்து விடுகிறது.

ஆஸ்பத்திரியில் நினைவு தெளிந்து கண் விழித்தபோது, "ஐயாவுக்கு ஒண்ணும் ஆபத்தில்லையே?" என்றுதான் கேட்டான் நாச்சிமுத்து.

அவன் என்ன கேட்கிறான் என்பதைப் புரிந்து கொள்வதற்கு நல்ல வேளையாக, அவனுடன் எப்போதும் சுற்றுகின்ற பிச்சை ஆஸ்பத்திரியில் அப்போது அவனுக்குத் துணையாக இருந்தான்.

"ஒண்ணும் ஆபத்து இல்லீங்க. உங்களுக்குத்தான் நல்லா அடிபட்டிடுச்சு."

நடந்தவை அப்போதுதான் அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக நினைவுக்கு வந்தன. தலையில் பலமான கட்டுப் போடப்பட்டிருந்ததைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

"கூட்டம் அப்புறம் நடந்ததா பிச்சை?" பிச்சைக்குச் சிரிப்புத்தான் வந்தது.

இந்நேரம் தேர்தலே நடந்து முடிந்திருக்கும். நாச்சி முத்து அன்றைக்கு நடந்த கூட்டத்தைப் பற்றி இரண்டு நாட்கள் கழித்துச் சாவகாசமாகக் கேட்டுக் கொண்டிருக் கிறான். பாவம்! இரண்டு நாட்களாகத்தான் தன் நினைவில் லாமல் அல்லவா கிடந்தான் அவன்?

''கூட்டமென்ன அண்ணே? தேர்தலே நடந்து முடிஞ் சாச்சு இந்நேரம். ரெண்டு நாளாத்தான் உங்களுக்கு நினைவே இல்லையே!''

இத்தனை நாட்களாக ஓடி ஓடி வேலை செய்து விட்டு, தேர்தல் நேரத்தில் இல்லாமல் இப்படி ஆஸ்பத்திரியில் வந்து படுத்துக் கிடக்கும்படி ஆகிவிட்டதே என்று சங்கடமாக இருந்தது நாச்சிமுத்துவுக்கு.

''தேர்தலெல்லாம் நல்லா நடந்திச்சா?''

''ஊம். மதியம் கந்தசாமியண்ணன் வந்திருந்தாரு. நல்லா நடந்ததாம். சொன்னாரு.''

எதையோ இழந்து விட்டதைப்போல வருத்தமாக இருந்தது அவனுக்கு.

எப்படியும் இன்னும் ஒருவாரமாவது ஆஸ்பத்திரியில் இருக்கவேண்டும் என்று சொல்லி விட்டார்கள். அதற்குள் தேர்தல் முடிவுகள் தெரிந்து விடும். வெற்றி விழா நிகழ்ச்சி யில் பங்கு கொள்ள முடியாது.

அன்று மாலை நல்லசாமி, தம் சகாக்கள் புடைசூழ ஆஸ்பத்திரிக்கு அவனைப் பார்க்க வந்திருந்தார். அப்போது அவன் படுக்கைக் கருகில் பார்வதியும் இருந்தாள். அவனுக்கு மிகவும் பெருமையாக இருந்தது.

''வெற்றி விழாவிலே கலந்துக்கக் கொடுத்து வைக்கலீங்க எனக்கு'' என்று அவரிடம் குறைப்பட்டுக் கொண்டான் அவன்.

நல்லசாமி ஒரு பெரிய மனிதப் புன்னகையை உதிர்த்தார்.

''கவலைப்படாம இரு. நல்லாக் கவனிச்சிக்கிறாங்க இல்லையா? நானும் சொல்லியிருக்கேன்,'' அவர் போய் விட்டார்.

''சோடாப் புட்டி எறிஞ்ச ஆளைப் புடிச்சுட்டாங்களா பிச்சை?''

'இல்லை' என்று தலையாட்டி உதட்டைப் பிதுக்கினான் பிச்சை.

''அவனைப் புடிச்சு என்ன ஆகப்போகுதுங்க? நீங்க அடிபட்டது அடிபட்டதுதானே?'' என்று கண்கலங்கியவாறு கூறினாள் பார்வதி.

''இதுக்கெல்லாம் கவலைப் படலாமா? பொது வேலைன்னு வந்துட்டா எல்லாந்தான் வரும், பாரு! ஐயாவே வந்து பார்த்துட்டுப் போறாரு!''

தேர்தல் முடிவுகள் வெளிவந்துவிட்டன.

அந்த ஊரில் நல்லசாமி ஜயித்துவிட்டார். ஆனால் நாட்டில் பெருவாரியான இடங்களை எதிர்க்கட்சிதான் பிடித்துக் கொண்டிருந்தது.

தன்னுடைய கட்சி ஆளும் கட்சியாக வர முடியாது என்ற செய்தி மிகுந்த மனவருத்தத்தைத் தந்தாலும் நல்லசாமியின் வெற்றி மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

வெளியே இருந்தால் வெற்றி விழாவில் கோலாகலமாகக் கலந்து கொண்டிருக்கலாம்.

நல்லசாமி அப்புறம் ஆஸ்பத்திரிக்கு வரவில்லை. கந்தசாமி, பிச்சை ஆகியோர் கூட நான்கைந்து நாட்களாக வரவில்லை. பார்வதிதான் எப்போதும் கூட இருந்தாள்.

எதிர்க்கட்சி மந்திரி சபை அமைத்து விட்டதைப் பத்திரிகையில் படித்தான். தோற்றுப் போனாலும் கூடப் பர்வதநாதனும் அவன் அடியாள் ஆறுமுகமும் இப்போது நிமிர்ந்துதான் நடப்பார்கள் என்று எண்ணினான் அவன்.

"நல்லசாமி ஐயா மாதிரி எல்லா இடத்திலும் நல்ல ஆட்களாகப் பார்த்து நிறுத்தியிருந்தா நம்ம கட்சிதான் ஆட்சிக்கு வந்திருக்கும். என்ன செய்ய?''

விளையாட்டுப் போல ஆஸ்பத்திரியில் பத்து நாட்கள் ஓடிவிட்டன. அன்று தான் அவனை வீட்டுக்கு அனுப்பு கிறார்கள்

வீட்டிற்குப் போனவுடன் நல்லசாமி ஐயாவைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டும் என்று நினைத்துக் கொண்டான் அவன்.

டாக்டர்கள் வந்து பார்த்து, அவன் 'டிஸ் சார்ஜ்' ஆகும் போது சாயங்காலம் ஆகிவிட்டது. ஹார்லிக்ஸ் பாட்டில், ஒரு பிளாஸ்டிக் கூடை என்று ஆஸ்பத்திரியில் ஒரு குடித் தனமே நடத்தியிருந்தாள் பார்வதி. அவற்றை யெல்லாம் ஒழித்து எடுத்துக் கொண்டு அவளும் உடன் வந்தாள்.

''வீட்டுக்குப் போனதும் ஐயா வீட்டுக்குப் போயிட்டு வரணும் பார்வதி.''

''உனக்கு வேறே வேலையென்ன?'' என்றாள் பார்வதி.

'உனக்கு என்ன தெரியும்?' என்பதைப் போல அவளைப் பார்த்தான்.

வழியில் பத்திரிகைக் கடையில் ஒரு மாலைப் பத்திரிகையை வாங்கிக் கொண்டான்.

"போகிற வழியிலே ஒரு ரோசா மாலை வாங்கிக்கோ பாரு, ஐயாவை வெறும் கையோடு போய்ப் பார்த்தா நல்லா இராது."என்று சொல்லிக்கொண்டே பத்திரிகையைப் பிரித்துப் பார்த்துக்கொண்டு வந்தான் அவன்.

''இதப் பாரு, வீட்டிலே போய்ப் படியேன். இல்லை இங்கே நின்னு பார்த்துக்கிட்டிரு. நான் மாலைவாங்கிட்டு வரேன்.''

அவன் பாதையோரம் நின்று கொண்டு பத்திரிகை படிக்கலானான். அவள் மாலை வாங்க எதிர்ச்சாரியில் இருந்த கடைக்குப் போனாள்.

'கட்சியைச் சேர்ந்த திரு நல்லசாமி ஆளும் கட்சியில் சேர்ந்தார். கட்சித் தலைமையின் மீது அவருக்கு நம்பிக்கை யில்லையாம்.'

''ஆ . . ங் . .!'' படித்துக்கொண்டிருந்த நாச்சிமுத்து வாய்விட்டே அரற்றிவிட்டான்

'நிஜந்தானா இது? நல்லசாமி ஐயா கூடவா இப்படி?'

எந்தக் குழப்பத்துக்கும் இடம் இல்லாமல் செய்தி மிகவும் தெளிவாகவே இருந்தது.

இரண்டு மூன்று முறை படித்து விட்டான் அவன். சோடாப்புட்டியால் பட்ட அடியைவிட இந்த அடியின் வேதனை மிகுதியாக இருந்தது. மடை உடைத்துக்கொண்டு அழுகை வந்தது அவனுக்கு!

கையில் மாலையுடன் வந்த பார்வதி அவன் தோற்றத் தைக் கண்டு கலங்கிப் போனாள்.

''என்னங்க? என்ன ஆச்சு உங்களுக்கு?''

''ஒண்ணும் இல்லை பாரு. குளத்தங்கரைப் பிள்ளை யாருக்கு அந்த மாலையைப் போட்டுட்டுப் போகலாம் வா'' என்றுசொல்லிவிட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டான்.

''ஐயாவுக்குன்னு சொன்னீங்களே?''

''அந்த ஐயா இப்ப நம்ம ஐயா இல்லை'' என்று சொல் லும் போது அவனுக்குக் குரல் தழுதழுத்து விட்டது.

அவன் சொல்வது புரியாமல் திகைத்துப் போய் நின்றாள் பார்வதி.

கலைமகள் — டிசம்பர், 1981

# திருஷ்டி

''மணி நாலரை ஆகிவிட்டது வாசு! பஸ் கிளம்பி விடப் போகிறது. அந்த இடத்திலேயே, அரைமணி நேரமாக அசையாமல் நின்று கொண்டிருக்கிறாயே! இன்னும் பார்க்க வேண்டியவற்றை யெல்லாம் பார்த்து முடிப்பதற்குள் நேர மாகிவிடும். புறப்படு!'' என்று அடுக்கியவாறே என்னை நோக்கித் திரும்பி வந்தான் நண்பன்.

அவனது அவசரம் நியாயமானது தான். ஆனால், இடத்தைவிட்டு நகர்வதற்கே என்னால் முடியவில்லையே! எதிரே இருந்த சிலையில் ஒளிர்ந்த கலை அழகு காந்தத்தைப் போல என்னைக் கட்டி இழுத்தது. வஞ்சிக்கொடி போன்ற ஒயிலான குமாரி, பாதச் சலங்கை 'கல் கல்' என ஒலிக்க நடனமாடும் காட்சியை என் முன் கண்டேன். என் உணர்விலே எழுந்த அனுபவ இனிமை, என் காதிலே சதங்கையின் ஒலியையும் கேட்கவைத்தது. உண்மையில், எதிரே இருப்பது சிலை என்ற எண்ணமே என்னின்று விலகி ஒளிந்து கொண்டது. நான் அதைக் காணவில்லை. அங்கே அவளைத்தான் ரஸித்தேன். அசையும் போது ஒடிந்து விடுவது போன்று விளங்கும் சிற்றிடையும், மாயக் கனவு களின் மதுவெறியூட்டும் ஜாலக் கண்களும், எடுப்பான மூக்கும்...! நான் என்னை மறந்து போய் நின்றேன்.

என் தோள் மீது தன் கையை ஊன்றியவாறு நின்று கொண்டிருந்தான் நண்பன். மணி ஆகிவிட்டதை அவனும் மறந்து விட்டான் என்றுதான் தோன்றியது.

''அற்புதமாகத்தான் இருக்கிறது! நான் இதைப் பார்க்காமலேயே போயிருக்கிறேன். இந்தப் பக்கமாக வந்த போது என் கண்ணில் இது படவேயில்லையே!''

''நீ கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே நடந்திருப்பாய்!'' என்றேன் நான்.

அவன் நான் சொன்னதைக் கவனித்ததாகத் தெரியவில்லை.

பஸ் ஹார்ன் சப்தம் கேட்டது.

பதறிப் போய் கைக் கடிகாரத்தைப் பார்த்தான் நண்பன். மணி ஐந்து.

''புறப்படு, ஓடுவோம்!''

கேட்டை அணுகியிருப்போம். பஸ் புழுதியை வீசிவிட்டு தூரத்திலே ஓடிவிட்டது.

''இனிமேல் நாளைக்குக் காலையிலே தான் பஸ்! அனாவசியமாக இன்றைக்கு இரவு இங்கே தங்கும்படி நேர்ந்து விட்டதே!''

''அனாவசிய மென்ன இதில்? மகாபலிபுரத்தில் நிசி நிலவை அனுபவிக்கும் வாய்ப்பை அந்த ஜீவப் பதுமை நமக்கு அளித்து விட்டது!'' என்றேன் நான், உற்சாகத்தின் கொடுவரையில் நின்று கொண்டு.

''சரி, சரி, அடுத்தபடி என்ன யோசனை?''

''நிதானமாகச் சுற்றித் திரிவதுதான். கோவிலுக்குப் போய்விட்டு வரலாம், முதல்வேலையாக!''

''வயிற்றுப் பாட்டுக்கு வழி...?

"அதோ அந்த முனையில் ஹோட்டல் இருக்கிறதப்பா, அதற்கெல்லாம் ஒன்றும் கவலை இல்லை. நிம்மதியாக இரு."

கோவிலுக்குப் போய்விட்டு வந்ததும் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஹோட்டலிலிருந்து வந்தோம்.

வானம் ஒளியில் முழுகி, மேகமற்று நிச்சலனமாய் இருந்தது. உயர்ந்தும் தாழ்ந்தும், பல்வேறு உருவில் விளங்கிய பாறைகளின் மேல் நிலவும் நிழலும் படிந்து எதிரே புதிய சூழ்நிலையை விரித்தன. பாறைகளின் மேலேறி நடந்து சென்றோம். காற்று குளுமையாக வீசியது.

தூரத்திலே கடல் எழுப்பிய ஆரவாரம் தேய்ந்து திரிந்து முனகல்போல ஒலித்தது. தொலைவிலே வளர்ந்திருந்த சவுக்கை மரங்களின் கூர் இலைகளின் நுனிகள் நிலவில் வாள் முனைகளாக மின்னின. மோனநிலவின் மோகனத்தில் மூழ்கியிருந்த பிரதேசம் இதயத்தில் இன்பக் கிளர்ச்சி ஊட்டியது.

"தர்மபுத்திரன் படுக்கை" என்று அழைக்கப்படும் கல் லணையில் வந்து உட்கார்ந்து கொண்டோம். சுற்றிலும் நிலவில் குளித்த பாறைகள்! காற்றில் மரங்கள் அசைந்த மெல்லோசை! இதயத்தைத் துருவும் மோனம்—

''என்னடா இங்கேயே படுத்துக் கொண்டு விட்டாய்?''

''காலெல்லாம் வலிக்கிறது வாசு. இங்கேதான் கொஞ்ச நேரம் படுத்துக் கொண்டிருப்போமே! எத்தனை சுகமாக இருக்கிறது!''

நான் அப்புறம் ஒன்றும் பேசவேயில்லை. மோன சுருதியில் மூழ்கிவிட்டேன்.

எவ்வளவு நேரம் அப்படிக் கழிந்ததோ, எனக்கு நினைவில்லை. திடீரென எதிரே, உலகிலே பரந்துள்ள நிலவனைத்தும் ஒரு கோட்டிற்குள் நெருங்கியதைப் போன்ற ஒளிக்கிறல் எழுந்ததும்தான் என்னை உணர்ந்து கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். என்னெதிரே, அந்த ஜீவ சிற்பம் நிற்பது தெரிந்தது. ஒரு சுரீர்ப்பு உடல் முழுவதும் பரவியது. பளீரென ஒரு மின்னல்! எதிரே சிலை உயிர் பெற்று நின்றது.

"ஆவியுலகில் நான் இன்பம் பெறுவதையும் பொறுக்காது கண்போட்டு விட்டீர்களில்லையா...?"—இசைக்குரல். கோபத்தில் வெளிவந்த சொற்களிலும் கூட மயக்கும், இனிமை சிலிர்த்தது.

நான் பிரமித்துப் போய் அவளையே பார்த்தேன்.

"நான் சொல்வது உங்களுக்குப் புரியவில்லை இல்லையா...?"

"இல்லை" என்பதற்கு அறிகுறியாக வெறுமே தலையை ஆட்டினேன்.

கல்லணையில் எனக்கெதிரில் ஒயிலாக அமர்ந்தாள் அவள்

"முழுவதையுமே சொல்லி விடுகிறேன். கவனமாகக் கேளுங்கள்!" என்று பீடிகை கொடுத்து விட்டு அவள் சொல்ல ஆரம்பித்தாள்.

"பல்லவ சாம்ராஜ்யம் தென்னாட்டில் புகழோங்கி நின்ற காலம் அது.

உறையூரில் பிரபல நடன ஆசிரியராக இருந்த என் அத்தை புருஷர் அம்பலவாணரின் வீட்டில் வளர்ந்து வந்தேன் நான். எனக்கு ஐந்து வயதிலேயே என் தாயும் தந்தையும் ஏதோ தொத்து நோய்க்குச் சேர்ந்தாற் போல் பலியாகி விட்டனராம்.

அம்பலவாணருக்குத் தாம் அறிந்த நடனக் கலையின் நுட்பங்களனைத்தையும் தம் சந்ததியில் என்றும் போற்றி வரச் செய்ய வேண்டும் என்று ஒரு தாபமே இருந்தது. ஆனால் அவர் மகன் சஞ்சயனின் மனம் நடனத்தை விடச் சிற்பத்தைத்தான் பற்றியிருந்தது.

மகனின் போக்கை உணர்ந்த அம்பலவாணர் என்னைத் தன் இலக்காக்கினார். குழந்தை முதலே ஒசிந்த உடலுடன் இருந்த எனக்கு நாட்டியம் நன்றாக வரும் என்று தீர்மானம் செய்து விட்டார். நாட்டியக் கலையில் எனக்கு ஏற்பட்ட ஈடுபாட்டை உணர்ந்த அம்பலவாணர் சளைக்காமல் எனக்கு நவ நவமாய்ப் பயிற்சி அளித்தார். வெவ்வேறு துறையில் புகுந்துவிட்ட போதும் சஞ்சயனும் நானும் ஒட்டுக் கனியாய்த் தான் இருந்தோம்.

அன்றொரு நாள், புதிதாக எனக்குக் கற்றுக் கொடுத் திருந்த பாடலுக்கு அபிநயம் பிடிக்கச் சொன்னார் அம்பல வாணர். அவர் பாடினார். நான் ஆடிக் கொண்டிருந் தேன்.

''சிந்தை மலர் பறித்துச் சென்றெங் கொளிந்து கொண் டாய்?...செந்தில் வடிவேலனே...!''

பாடலும் சதங்கை ஒலியும் என் இதயத்தினுள் கிளப்பிய ஏதோ ஒரு வகை வேகத்தில் நான் என்னை மறந்து ஆடினேன். அபிநயங்கள் என் முயற்சியின்றியே பொருத்த மாக எழுந்து கொண்டிருந்தன.

''பாலிகை! பாலிகை! அப்படியே நில்லேன், ஒரு நிமிஷம்!'' என் ஆட்டம் திடீரெனத் தடைப்பட்டது.

''என்ன சஞ்சயா இது? அருமையான இடத்திலே வந்து கெடுத்து விட்டாயே! இத்தனை நாளையும் விட இன்று

பாலிகை எவ்வளவு அபூர்வமாக ஆடிக் கொண்டிருந்தாள்!'' என்று ஆட்டம் பாதியில் நின்று போன வருத்தத்துடன் கூறி னார் அம்பலவாணர்.

எனக்குக் கூடத்தான் வருத்தமாக இருந்தது. ஆனால் சஞ்சயன் என்னையே விழுங்கி விடுவதைப் போலப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்ததும் என்னை மிஞ்சி எனக்கு வெட்கம் வந்து விட்டது. ஓடிப் போய் மாமாவின் அருகில் உட்கார்ந்து விட்டேன்.

''பாலிகை! பாலிகை!'' என்று கூப்பிட்டுக் கொண்டே என்னருகே வந்தான் சஞ்சயன்.

''பாலிகை! 'சிந்தை மலர்பறித்து' என்ற அடிக்கு நீ அபிநயம் பிடித்தாய் பார், அதை அப்படியே சிலையாக வடித்தால்...! பாலிகை, நிஜமாகச் சொல்லுகிறேன்: நான் கட்டாயம் அந்த பாவத்தைச் சிற்பத்தில் வடித்துத்தான் ஆக வேண்டும். எனக்காக மறுபடியும் அந்தப் பாட்டிற்கு அபி நயம் பிடியேன்!'' சஞ்சயனின் பேச்சில் ஆவலும், சிரத்தை யும் உயர்ந்து ஒலித்தன.

''பாலிகை! உனக்குச்சிரமமில்லையே?'' என்று கேட்டார் மாமா. சஞ்சயனின் முன் ஆட எனக்குச் சிரமம் ஏது?

''சிந்தை மலர் பறித்து...'' பாடல் சுழன்றது. சதங்கை ஒலித்தது. நான் நிருத்ய உலகில் புகுந்து விட்டேன்.

சஞ்சயன் தன் பார்வை முழுவதையும் என்மேல் நிறுத்தி வைத்து விட்டான். அவன் கண்களிலிருந்து குளிர் கதிர்கள் பாய்ந்து என்னில் குது குதுப்பைப் புகுத்தின.

ஆட்டம் முடிந்தது. சஞ்சயனின் முகத்தில் நான் எதிர் பார்த்த திருப்தி இல்லை. ''அந்த பாவம் என் மனத்தில் பூரண நிறைவுடன் இன்னும் பதியவில்லை,'' என்றான் அவன் ஏக்கத்துடன்.

''அவளுக்கும் சாதகம் தானே? அவளை அருகில் வைத்துக் கொண்டே உன் சிற்ப வேலையைத் தொடங்கேன் சஞ்சயா? அதுதான் சௌகரியமும் கூட.'' என்றார் அம்பலவாணர். சஞ்சயன் முகம் மலர்ந்தது. என்னுள் இன்பம் கிளு கிளுத்தது.

அதற்கு அடுத்த நாளே சஞ்சயன் தன் சிற்ப வேலையைத் தொடங்கி விட்டான். மாமா வீட்டின் பின்புறமுள்ள தோட்டத்தின் நடுவில்தான் சிற்பக் கூடம் இருந்தது.

ஒரு நாள் என்னிடம் அவன் சொன்னான்.

''நீ நாட்டியத்தில் நிபுணையாகி விட்டாய் பாலிகை! ஆனால் சிற்பத்தில் என்னால் அந்த வெற்றியை எட்ட முடிய வில்லையே!''

இந்தக் குறை அவன் மனத்தில் பெருத்த தாபமாகக் கிளைத்து விட்டது.

நாட்கள் இப்படி ஓடிக்கொண்டிருக்கும் பொழுதுதான், மாமல்லபுரத்திலிருந்து சஞ்சயனின் நண்பரொருவர் அவனை அங்கே அழைத்துப் போக வந்து சேர்ந்தார். மாமல்லபுரத்தில் அப்பொழுது ஆரம்பித்து நடந்து கொண்டிருந்த சிற்ப வேலைகளைப் பற்றித் தமிழ் நாடெங்கும் ஒரே பேச்சாக இருந்தது. அந்த அபூர்வ சந்தர்ப்பம் வேறு எப்போதுமே கிடைக்காது என்றறிந்த நாங்கள், சஞ்சயனின் திறமை ஒளி பெற இது ஒரு நல்ல வாய்ப்பு என்று மகிழ்ந்தோம். ஆயினும் அவனைப் பிரிந்து உறையூரில் தனியே காலம் கழிப்பது எப்படி? வெறிச் சென்று போய்விடும். சிற்பக் கூடத்தைப் பார்த்துக் கொண்டு தனியே உட்கார்ந்திருக்க முடியுமா...?

என் உள்ளத்தின் மூலையில் எழுந்த மகிழ்ச்சியை அமுக்கிக் கொண்டு பிரிவுத் துன்பம் கனத்தது.

சஞ்சயனும் இதே கவலையில் தான் சிக்கித் திணறியிருக்கிறான். கடைசியில் அவன் "நான் மாமல்லபுரம் போகவில்லையப்பா!" என்று சொன்ன போது எங்கள் எல்லோருக்கும் ஒரே ஆச்சரியமாயிருந்தது. அம்பலவாணர் அவன் மன ஆழத்தை எப்படியோ தொட்டுப் பார்த்து விட்டார்.

"சஞ்சயா, இந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிடாதே! குடத்துள் விளக்கெரிந்து யாருக்குப் பயன்? குன்றிவிட்ட தீபமாக அது விளங்க வேண்டும்! ஆகவே மறுக்காமல் புறப்படு! இந்த மாதத்திற்குள்ளேயே உங்கள் திருமணத்தை முடித்து விடுகிறேன். பாலிகையையும் கூட அழைத்துப் போனால் உனக்கு சௌகரியமாயிருக்குமல்லவா?" என்று டக்கென ஏதோ தீர்மானத்துக்கு வந்தவர் போலப் பேசினார் மாமா.

சஞ்சயன் பிரமித்துப் போய் நின்றான். வான வெளியில் புஷ்பக விமானத்தில் பறப்பது போன்ற இன்ப நினைவில் சுழன்றேன் நான். சஞ்சயனும் நானும் தம்பதிகளானோம். வயசுக் காலத்தில் தன்னால் எங்கும் அலைவதற்கில்லை என்று சொல்லி மாமா உறையூரிலேயே தங்கி விட்டார்.

மாமல்லபுரம் இன்றிருப்பதுபோலவா அப்போது இருந்தது? என்ன கோலாகலம்! என்ன சுறுசுறுப்பு வாய்ந்த ஜனத்திரள்! கடலின் கர்ஜனையைக் கரைத்துப் பொடித்துவிடும் "கல் கல்" என்ற கல்லுளி ஓசையின் இசை இடைவிடாது கேட்டுக் கொண்டிருந்தது.

அரை குறை வேலைகளில் நின்ற பாறைகளைச் சுற்றிப் பார்த்துக்கொண்டே ஒரு முழு நாளைக் கழித்தோம்.

நாட்கள் ஓடின.

அற்புதம் அற்புதமாகச் சிலைகள் வடித்தார் சஞ்சயன். கூட இருந்த சிற்பிகள் எல்லோரும் அபாரம் என்று புகழ்ந்தவற்றையெல்லாம் அவர் 'சாதாரணம்' என்று சொல்லி

நகர்த்தி வைத்துவிடுவார். இரவு, பகல் என்றில்லாமல் கல்லும் உளியும் கற்பனையுமாய்க் கழித்தார். அவர் கண்கள் பசை வரண்டன. உடம்பு மெலிந்து நாளுக்கு நாள் இளைத்தது.

''கல்...கல் கல்...கல்...''

உடலைத் திரணமாக மதித்து அவர் செய்யும் இந்த அசுர சாதகம் என்னைக் கலங்க அடித்தது.

அவர் தன் தொழிலில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். நாட்டிய உடையில் அவரது உத்தரவுக்குக் காத்து நின்று கொண்டிருந்தேன் நான்.

''பாலிகை...!'' கலைஞனின் பெருமிதம் அவர் முகத்தில் நிழலாடிற்று.

''இந்த முறை பூரண வெற்றிதான்! எங்கே, அந்தப் பதத்திற்கு மட்டும் அபிநயம் பிடி, பார்க்கலாம்!''

தாபம் கனிந்த என்னுள்ளம் அந்த பாவத்திற்கு உடலை வளைத்துக் கொடுத்தது.

''சரி, போதும், நீ போய் உட்கார்ந்து கொள்!''

'கல்...கல் ..கல்...'—மறுபடியும் அவர் தொடங்கி விட்டார். அவருக்குச் சற்றுத் தள்ளி மரப்பலகை ஒன்றின் மேல் உட்கார்ந்தவாறு அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன் நான். வெய்யல் மங்கி வந்தது. மாலையின் மயக்கம் வெளியைக் கவிந்தது. அவர் தன் வேலையில் முனைந்திருந்தார்

என் கண்கள் என்னை அறியாமல் நீர் பெருக்கின.

''பாலிகை! பாலிகை! இங்கே வந்துபார்!'' என்று களி வெறியில் கூச்சலிட்டார் அவர். கண்களைத் துடைத்துக் கொண்டு அவரை அணுகினேன்,

எங்கள் எதிரே நான் 'சிந்தை மலர் பறித்து' என்ற பதத்திற்கு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்தேன்! சஞ்சயன் அவரது லட்சியக் கோட்டையை எட்டிப் பிடித்து விட்டார்! எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அவர் கரங்களை ஆவலுடன் பற்றி என் கண்களில் ஒற்றிக்கொண்டேன்.

மறு நாள் அருணோதயம் முதல் எங்கள் சிற்பக் கூடத்தில் ஒரே கூட்டம்.

ஏதோ புதுமையைப் பார்க்க வருவது போல் ஊர் திரண்டு வந்தது.

அளவு மீறிய சந்தோஷத்தினாலேயோ என்னவோ என் தலையை லேசாகக் கனத்தது. சஞ்சயனிடம் கூறினேன். அவர் என் நெற்றியைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "உடம்பு சுடுகிறதே" என்றார்.

நிமிஷத்திற்கு நிமிஷம் ஜுரம் விஷமாய் ஏறியது, சஞ்சயன் பித்துப் பிடித்தவர் போல் உட்கார்ந்து விட்டார்.

நடு நிசியிலேயே யாரோ வைத்தியரை அழைத்து வந்தார். அந்தப் பிரபலவைத்தியரைப் படுதோல்வி அடையச் செய்துவிட்டு என் ஜுரம் முதிர்ச்சி அடைந்தது. பகல் முழுவதும் யார் யாரோ வந்து எனக்குச் சிகிச்சை செய்தார்கள்.

மாலை மூன்று மணிக்கு திடீரென்று ஜுரம் இறங்கியது. ஆனால் உஷ்ணத்திற்குப் பதில் குளிர் ஏறியது. கை, காலெல்லாம் அல்லித் தண்டாய் ஜில்லிட்டுப் போய்விட்டன. என் நினைவிழந்து போய் நான் ஏதேதோ பிதற்றத் தொடங்கி விட்டேன். சஞ்சயன் பச்சைக் குழந்தை போல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டார். அந்தத் தருணத்தில் யாரோ ஒரு கிழவி உள்ளே நுழைந்தாள்,

"தம்பி, நீ அவளை அப்படியே சிலையாக அடித் துவைத்து விட்டாய்! ஊரிலே உள்ளவர்களெல்லாம் அந்தச் சிலையிலே தோன்றிய அவள் மீது தங்கள் திருஷ்டியை நெரித்து விட்டார்கள். அதுதான் இப்படிப் படுத்துகிறது!" கிழவி தீர்க்க மாகப் பேசினாள்.

இதைக்கேட்டதும் சஞ்சயனுக்கு வெறியே வந்துவிட்டது.

"அந்தச் சண்டாளச் சிலையைச் சுக்கு நூறாக்கி விடு கிறேன்!" என்று இரைந்து கொண்டே ஓடினார்.

"அய்யோ, அந்தச் சிலையையா?"—என் உயிர் அந்த அதிர்ச்சியைத் தாங்கவில்லை. உடலைக் கீழே கிடத்தி விட்டு; அது வெளியே பறந்து விட்டது!

என் உயிர் பிரிந்ததோ இல்லையோ, சிற்பக் கூடத்தை நோக்கி ஓடிக்கொண்டிருந்த சஞ்சயனைத் தடுத்து நிறுத்தி யாரோ அதை அவரிடம் கூறிவிட்டார்கள். சஞ்சயன் தன் தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டார். திடீரெனப் பேய்ச் சிரிப்புச் சிரித்தார் அவர். ஆவி உருவில் இருந்த எனக்கு அவர் அவல நிலையைப் பார்க்கச் சகிக்கவில்லை.

"சஞ்சயன்! நான் இதோ இருக்கிறேன்!"—

என் அலறல் வேறு யாருக்குமே கேட்கவில்லை. அவருக்கு மட்டும் அது கேட்டுவிட்டது.

"எங்கே . ? எங்கே.. ?"

என் குரலை அவர் கேட்டார். என்னைக் காணவில்லை. பிரமைபிடித்துப் போய் வானத்தைப் பார்த்தவாறே ஓடினார் அவர்.

ட... ணா ர்!

எதிரே நின்ற பிரம்மாண்டமான கல்தூணில் அவர் சிரம் மோதி இரத்தம் பெருக்கெடுத்தது. என்னை அடையத் துடித்துக் கொண்டிருந்த அவரது ஆவி, தருணம் பார்த்துக் கூட்டைப் பிய்த்துக் கொண்டு வெளிவந்து விட்டது.

அன்று முதல் இந்தத் பாறைகளின் மீதும், அலைகடல் மேலும், பரந்த வான வெளியிலும் கால வரம்பின்றி ஜோடிப் பறவைகள் போல் சுற்றித் திரிகிறோம். சஞ்சயன் விரும்பியது போல், அந்த ஜீவசிற்பத்திற்குக் காவலாக நான் அதிலேயே உறைந்து விட்டேன். அவர் வெளிமீதே ஆவி யுருவில் சுற்றிக் கொண்டிருக்கிறார்.

தினமும் இருள் கவியும்போது என்னைத் தேடி வருவார் அவர். உல்லாசமாக இந்தக் கல்லணை மீது வந்தமர்ந்து உலகை மறந்து அளவளாவிக் கொண்டிருப்போம்.

இன்று மாலை என் சிலை உருவைப் பார்த்து—உங்கள் வெந்நோக்கை வீசி விட்டீர்கள். அதுதான் என் சஞ்சயன் இன்று இன்னும் வரவில்லை.

பூத உடம்புடன்வாழும் காலத்தில், எங்களுடன் வாழ்ந்த சிற்பிகளின் திருஷ்டி எங்கள் வாழ்வைக் குலைத்தது.ஆவி யுலகில் எங்கள் இன்பத்தைப் பறிக்க நீங்கள் வந்து சேர்ந் தீர்கள்!''

அவள், தன் விழிகளில் அனலை வார்த்து என்னைப் பார்த்தாள்.

''நான் ஒன்றும் செய்யவே யில்லையே!'' என்று அலறினேன்.

''என்னடா உளறிக் கொட்டுகிறாய், காலங்கார்த் தாலே!'' என்று சொல்லிக் கொண்டே நண்பன் என்னை உலுக்கி எழுப்பினான்.

கலக்கத்துடன் கண்ணை நன்றாகக் கசக்கி விட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தேன். பனியில் உடம் பெல்லாம் 'ஜில்' என்று குளிர்ந்து போயிருந்தது.

உள்ளே குமைந்த பிரமிப்பில் சுற்று முற்றும் பார்த்தேன். பறவைகள் பாடிக்கொண்டிருந்தன.

வைகறையின் மெல்லொளி இருளைக் கீறிக் கொண் டிருந்தது.

(குமுதம் 15-12-51)

# பழுத்த இலை

வெயில் பளீரென அடித்தது. பட்டுப் போய், கிளை யசைத்துக் கொண்டிருந்த அந்த மரத்திலே ஒட்டிக் கொண்டிருந்த இரண்டொரு பழுத்த இலைகள் வெயிலொளி யில் தங்கத் தகடுகளைப்போல மின்னிச் சல சலத்தன.

அவர் தம்முடன் அவற்றை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டார். வாழ்க்கையில் அவருக்கு ஏற்படும் சுகதுக்கங் களைப் பகிர்ந்து கொள்ளும் பாவனையில் அவர் கழுத்தில் மாலையிட்ட சங்கரி, அவருடைய அருமைப் புதல்வி ஸரோ, அவர் தங்கை, அவருடைய ஒரே மகன் ரகு- எல்லோருமே காலப் புயலில் அடிபட்டு ஒருவர் பின் ஒருவராக உதிர்ந்து விட்டனர். எழுபது வருஷமாக இந்த உலகக் காற்றைச் சுவாசித்துக் கொண்டு அவர்தாம், இதோ காற்றிலே அசை யும் இந்தப் பழுத்த இலைகளைப்போல, இன்னமும், பட்டுப் போன அந்தக் குடும்பத்தின் சின்னமாக நடமாடிக் கொண் ருந்தார். ஒளி ஊடுருவும்போது அந்த இலைகளின் நரம்புகள் பளிச்செனத் தெரிந்தன. ரத்தம் வற்றி முறுக்கேறிப் போயிருந்த தம் மெலிந்த கைகளை அவர் ஒரு முறை வெறித்துப் பார்த்துக் கொண்டார். அவற்றில், ஒன்றோ டொன்று பின்னிப் புடைத்துக் கொண்டிருந்த நரம்புகளைப் பார்த்ததும் அவருக்குச் சிரிப்புத்தான் வந்தது.

"நல்ல ..........பழுத்த... இலை!"

மெதுவாக, ஒவ்வொரு வார்த்தையாகச் சொல்லிப் பார்த்துக் கொண்டார் அவர். உள்ளத்தினுள்ளே சிந்தனை படபடத்துக் கொண்டிருந்தது.

குடுகுடென மேல் மூச்சு வாங்க ஓடி வந்த சிறுவனைக் கண்டதும் அவர் தம் சிந்தனையைக்கொஞ்சம் தள்ளிப் போட்டுக் கொண்டார். முகத்திலே கொப்புளித்திருந்த வேர்வை முத்துக்களைத் தன் கையினால் துடைத்துக் கொண்டே, ''அப் . . பா!'' என்று தன் இருதய ஆழத் திலிருந்து கிளம்பிய பெருமூச்சை வெளியே தள்ளினான், அவரெதிரே வந்து நின்ற சிறுவன்.

''என்னடா சுந்து, கல்யாணத்திட்டே சொன்னயாடா? அவன் என்ன சொன்னான்? கொண்டு வரானா . .?''

''ஆமாம், தாத்தா ... என் பின்னாடியே தான்வ ந்திண் டிருக்கான். நான் ஓடோடி... ஸ் ...'' —ஓடி வந்த களைப்பில் உந்தியெழும் மூச்சுடன் இழைத்து அரைகுறையாக வார்த் தைகளை அள்ளிக் கொட்டினான் அவன்.

''அப்படி என்ன அவசரம், சுந்து? மெதுவா நடந்து வரப்படாதோ? எப்படி இரைக்கிறது, பார். கொஞ்ச நேரம் பேசாம உட்கார்ந்துக்கோ!'' என்று அவர் அவனிடம் சொல்லிக் கொண்டிருந்தபோதே, ரெயிலடுக்கில் சாப்பாடு எடுத்துக்கொண்டு கல்யாணம் அவர்களைத் தாண்டி உள்ளே சென்றான்.

''என்ன வெயில் இது, தாத்தா! மண்டை பிளந்து போறதே!'' என்று சொல்லிக் கொண்டே ரெயிலடுக்கை ரேழியில் நக்கென்று வைத்தான் அவன்.

''ஏன், கல்யாணம், நீ சாப்பிட்டாச்சோ, இல்லையோ? உன் எரிச்சலையெல்லாம் அந்தப் பாத்திரத்திட்டே காட்டினா, அது தாங்குமா!''

"வெயில் சகிக்கலை தாத்தா. உங்களுக் கென்ன, எப்போதும் விளையாட்டுத்தான்" என்று அலுத்துக் கொண்டே தரையில் தண்ணீர் தெளித்து, கொண்டு வந்திருந்த வாழை இலையைப் போட்டான் அவன். அவர் எழுந்து சென்று, கைகால்களையெல்லாம் அலம்பிவிட்டு வந்து இலைமுன் உட்கார்ந்தார்.

"சுந்து, நீயும் சாப்பிடுகிறாயாடா?"

"இல்லை, தாத்தா. நான் சாப்பிட்டாச்சு"

இது வரையில் ரேழி வாசற் கதவடியில் நின்று கொண்டிருந்த சுந்து, இதைச் சொல்லி விட்டுத் தெருவிற்கு ஓடிவிட்டான்.

"நல்ல சுட்டிப் பயல்!" என்றார் அவர்.

* * *

சாப்பிட்டுவிட்டுத் தெருவைப் பார்த்திருந்த ஜன்னலடி யில் வந்து உட்கார்ந்துகொண்டு, மறுபடியும் சிந்தனைக் குப்பைகளினூடே தம் மனத்தைப் புதைத்துக்கொண்டார் அவர். ரெயிலடுக்கை எடுத்துக்கொண்டு வெளிக்கதவைச் சாத்திவிட்டு நடந்தான் கல்யாணராமன்.

"இன்னும் எத்தனை நாட்களுக்குக் கல்யாணம் கொண்டு போட்டுச் சாப்பிட லபித்திருக்கிறதோ?" என்று தமக்குத் தாமே கேட்டுக் கொண்டார் அவர்.

உண்ட மயக்கம் லேசாக அவர் கண்களை மூடியது. அப்படியே, உட்கார்ந்தவாறே, தூக்கமும் தூக்கம் இல்லாததுமான ஒரு கலங்கிய நிலையில் சிக்கி நின்றார் அவர்.

'கர்...ர்..ர்' என்று ஏதோ கதவு திறக்கும் சத்தம் கேட்டது. கண் விழித்துப் பார்த்தார். எதிர்த்த வீட்டுக்

கதவைத் திறந்து கொண்டு ஓர் அம்மாள் எச்சிலிலையைக் கொணர்ந்து, வாசல் தொட்டியில் எறிந்து விட்டுப் போனாள்.

மொரமொரவென்றிருந்த பட்டுப் புடைவையை இடது கையினாலே இழுத்துச் சரியாக்கிக்கொண்டு உள்ளே சென்றாள் அவள். எதிர்வீட்டுக் கதவு கர்...ர்...ர் என்று அடைத்துக் கொண்டது. அவர் மனத்தின் உள்ளே ஒரு சிறு கதவு மெதுவாகத் திறந்து உள்ளே அடைந்திருந்த பழைய சம்பவங்களை அவர் முன் நிறுத்தியது.

அவர் தம் கன்னத்தை லேசாகத் தடவி விட்டுக் கொண்டார். சுருக்கங்கள் விழுந்து கர கர வென்றிருந்தது. ஒரு காலத்திலே இவருடைய அழகைப் போற்றாதவர் கிடையாது. அந்த இளமை நாட்களின் இன்ப அனு பவங்களெல்லாம் அவர் எதிரே தோன்றின.

ஒரு நாள், விளக்கு வைக்கும் சமயம்; ஒளியும் இருளும் தழுவி ஒரு மங்கல் வெளியைச் சிருஷ்டித்திருந்தன. எங்கெல்லாமோ சுற்றிவிட்டு, அவர் அப்பொழுதுதான் வீட்டினுள் நுழைந்து கொண்டிருந்தார். 'கோலவிளக்கே, கொடியே விதானமே!' என்று ஏதோ ராகம் போட்டுப் பாடிக்கொண்டே குத்துவிளக்கை ஏற்றிக்கொண்டிருந்தாள் அவர் மனைவி சங்கரி. புதிதாக எழுந்த ஒளியில் பளபளத்த அவள் கன்னங்கள் அவளுக்கு ஓர் அலாதியான சோபையை அளித்தன. அந்தக் காட்சி அவர் உள்ளே போதை கலந்த கிளுகிளுப்பை உண்டாக்கியது.

''சங்கு!'' என்று மெதுவாக, இல்லை, மென்மையாக, அழைத்தார் அவர்.

அவள் நிமிர்ந்தாள்.

''வந்து ரொம்ப நேரமாயிடுத்தோ? நான் கவனிக்கவே இல்லையே!''

''இல்லை, இப்பொத்தான் வந்தேன். அதுசரி, சங்கு, அம்மா எங்கே?'' அவர் மெதுவாக அவளை நெருங்கிக் கொண்டிருந்தார்.

''இன்னிக்கு வெள்ளிக்கிழமை இல்லையா? கோவிலுக்குப் போயிருக்கார்''. குத்து விளக்கிற்கு எண்ணெய் வார்த்துக் கொண்டே இதைச் சொன்னாள் அவள்.

''இந்தக் குத்துவிளக்கின் பிரகாசத்திலே உன் முகம் எப்படி இருக்கு, தெரியுமா? சங்கு!''

''போருமே...!''

அவர் அவள் கன்னத்தை மெதுவாக நிமிண்டிக் கொண்டே அவள் முகத்தைத் தம் பக்கமாகத் திருப்பினார். அவள் நாணம் கிறிவிட்ட புன்னகையுடன் திரும்பினாள்.

''சங்கு!''

அவள் களுக்கென்று சிரித்துவிட்டாள்.

''அம்மா வீட்டிலே இல்லை என்றதுமே உங்கள் விஷமம் கிளம்பிடுத்தே!''

காலடிச் சப்தம் கேட்டது. அவர் அம்மா, சங்கரியின் மாமியார், வந்து கொண்டிருந்தாள். இருவரும் திடுக்கிட்டு விலகி நின்றனர்.

''ஏண்டாப்பா, ஊரிலே யிருந்து கடிதாசி வந்ததா? சங்குவை எப்போ அழைச்சிண்டு போறாளாம்? ஆச்சு, நாளைக்கு மாசம் பொறந்தா கணக்குக்கு ஆறு மாசம் ஆறதே!''

''இன்னிக்குத் தபாலில் ஒரு கடிதாசியும் இல்லை.''

இவர்கள் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் மெள்ள அங்கிருந்து சமையலறையினுள்ளே நழுவிவிட்டாள் சங்கரி.

புஸ்ஸென்று சீறிய காற்று தெரு மண்ணை வாரி வீசியது. 'டக்' என்று அவர் சிந்தனையும் இந்த இடத்திலே நின்றது.

"சீ! என்ன உபத்திரவம் இது!" என்று சொல்லிக் கொண்டே எழுந்து துண்டை உதறி விட்டு மறுபடியும் உட்கார்ந்துகொண்டார்.

வெறி பிடித்த காற்றுச் சுழன்று சுழன்று வீசியது, அவர் சிந்தனையைப் போல.

வீட்டின் எதிரேயிருந்த அந்த மரம் கிளைகளைப் பலமாக ஆட்டியது. சில இலைகள் பொல பொலவென உதிர்ந்தன. சற்று நேரத்திற்கு முன் அவர் தம்முடன் ஒப்பிட்டுக் கொண்டாரே, அதே பழுத்த இலைகள்தாம்! மரம் இப்பொழுது மொட்டையாக, வழுக்கைத் தலை யனைப்போல நின்றது.

"பெயருக்கு ஓர் இலைகூட இல்லை."-ஏனோ, இதைக் கொஞ்சம் உரக்கவே சொன்னார்.

இந்த இலைகளைப்போல எவ்வளவு உரமாக வாழ்க்கை மரத்தைப் பற்றிக் கொண்டிருந்தாலும், அவரும் என்றோ ஒரு நாள் உதிர்ந்து போக வேண்டியவர்தாம். அது என்று? அதை அவ்வளவு எளிதாகச் சொல்லிவிட முடியுமா? இந்த இலைகள்தாம் இன்று உதிர்ந்துவிடப் போகின்றன என்பது யாருக்குத் தெரியும்? நாளை நடப்பது, ஏன், அடுத்த நிமிஷத் தில் நடக்கப்போவது கூடத்தான் யாருக்கும் தெரியப் போவதில்லை.

அவர் என்ன என்னவோ நினைத்து மனத்தைக் குடைந்து கொண்டே எழுந்து, வாசற் கதவைத் திறந்து வெளியே

வந்து பார்த்தார். தெரு முனையில் யாரோ ஒருவன், 'மல்லிகை, குளுகுளு மல்லிகை, குண்டு மல்லிகை, குஷால் மல்லிகை!' என்று நீட்டி முழக்கி ராகத்துடன் பூ விற்றுக் கொண்டு சென்றான். அந்தச் சத்தத்தைக் கேட்டுத்தானோ, அல்லது இங்கிருந்தே அதன் வாசனையை உணர்ந்தோ, பட்டுப் பூச்சியைப்போல ஓடி வந்து அவரருகே நின்றாள் ஒரு சிறுமி.

"தாத்தா, தாத்தா, அந்த மல்லிகைக் காரனைக் கூப்பிடட்டுமா?" என்று கொஞ்சினாள் அவள்.

'மல்லிகை வேணும்' என்று கேட்காமல் 'அவனைக் கூப்பிடட்டுமா?' என்று கொஞ்சும் அந்தப் பெண்ணின் சாதுரியத்தை மனத்திற்குள் வியந்துகொண்டே பூக்காரனைக் கூப்பிட்டார் அவர்.

இன்று நேற்றல்ல; எத்தனை எத்தனையோ வருஷங் களாக இம்மாதிரி ஊர்க்குழந்தைகளுக்கெல்லாம் அவர்கள் விரும்பிக் கேட்பவற்றை வாங்கிக் கொடுத்து வருகிறார். அதிலே அவருக்கு இன்பமுங்கூட.

சிறுமியின் கையில் குண்டு மல்லிகை கிடைத்தவுடன் அவள்முகம் முன்னிலும் பன்மடங்கு பொலிவடைந்தது. மகிழ்ச்சி விம்ம, பெரிய மனுஷியைப்போல அவள் என்ன என்னவோ கதைக்கத் தொடங்கிவிட்டாள்.

"தாத்தா, இன்னம் கொஞ்ச நாள்லே எங்காத்து இருவாட்சி நிறையப் பூக்க ஆரம்பிச்சுடும். அப்பறம் நான் வேறே யார் கிட்டேயும் பூ வாங்கிக்கவே மாட்டேன்".

"உங்காத்துலே எங்கேம்மா இருவாட்சிச் செடி இருக்கு?" என்று கேட்டார் அவர்.

"அதோ, சின்னதா இருக்கு பார். அதே தான். ஒரு வாரத்துக்கு முந்தி ஒரு இருவாட்சிக் கொப்பை ஒடிச்சுக் கொண்டுவந்து நட்டோம் தாத்தா. இப்போ பாரு. பச்சைப்

பசேர்னு நிறைய இலை வந்துடுத்து!'' என்று பிரமாதமாகப் பேசினாள் அவள். அங்கிருந்தவாறே சிறுமி சுட்டிக் காட்டிய தளிர் விடும் இருவாட்சியைக் கண்டார் அவர்.

அவர் மனத்திலே மறுபடியும் சிந்தனை அலைகள் புரண்டெழுந்தன. அலையின் கர்ஜனை வெளியே கேட்கவில்லை. ஆனால் அவை அவர் நெஞ்சத்தில் வேகத்துடன் மோதும் போது எழுந்த வேதனை..?

தாத்தாவின் மௌனத்தைச் சகிக்க முடியாமல் சிறுமி துள்ளிக் குதித்து ஓடிவிட்டாள்.

அவர் அந்த மொட்டைமரத்தை அண்ணாந்து பார்த்தார்.

'இந்தப் பழுத்த இலைகள் உதிர்ந்துவிட்டன. ஆனால் அந்த இடத்திலே இன்னும் சில நாட்களிலே பசுமையான இலைகள் தளிர்த்து நிறைந்துவிடும். மரத்திற்கு மறுபடியும் ஜீவன் பிறந்துவிடும்.' தம்மை அந்தப் பழுத்த இலையுடன் ஒப்பிட்டுக்கொண்டது அவருக்குப் பொருத்தமற்றதாகப் பட்டது. ஆமாம். அவரும் என்றோ உதிர்ந்துவிடுவார். அப்புறம்...? அவருடைய இடத்தை யார் வந்து நிறைக்கப் போகிறார்கள்?

தம் வாரிசு என்று சுதந்தரமாக, இருதய பூர்வமாக உரிமையுடன் அழைக்க இந்த உலகத்தில் அவருக்கு யாருமே இல்லையா? என்ன பரிதாபமான வாழ்வு! அவருக்குப்பின் அந்தக் குடும்பம், குடும்பம் என்ற பெயரைச் சொல்லிக் கொள்ளவே வகையில்லாமல் அல்லவா போய்விடப் போகிறது? ஏனோ இதை அவரால் சகிக்கவே முடியாது போலிருந்தது. நின்றுகொண்டே இருக்க இளமை ரத்தமா அவர் உடம்பில் ஓடுகிறது? அவர் கால்கள் கெஞ்சின.

எப்பொழுதும் போல முன் அறையில் வாசல் ஜன்னலை அடுத்திருந்த பெஞ்சில் போய் உட்கார்ந்து கொண்டார்.

என்றைக்கும், மத்தியான்ன நேரங்களில் இந்த மாதிரி வெறுமனே உட்கார்ந்து வெற்றுச் சிந்தனை செய்து கொண்டிருக்கவே மாட்டார் அவர். ஆனால் அன்றைக்கு அவரால் ராமாயணத்தையோ, பாகவதத்தையோ புரட்டி ஒரு வரிகூடப் படிக்க முடியாது போலிருந்தது. எவ்வளவு நேரந்தான் இப்படியே முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பது? அவர் எழுந்து அங்கும் இங்கும் உலவினார்.

சற்று நேரத்திலெல்லாம் அதுவும் கஷ்டமாகத்தான் தோன்றியது. எதிரே கண்ணாடி பீரோவில் அழகாக அடுக்கி வைத்திருந்த புத்தகங்களை நோக்கினார் அவர். 'மனத் துக்குப் பிடித்தமான புத்தகம் ஏதாவது இருந்தால் பார்க்க லாமே!'— அவர் மனசு தனக்குத்தானே பேசிக் கொண்டது. பீரோவைத் திறந்து ஒவ்வொரு புத்தகமாகப் புரட்டத் தொடங்கினார்.

'ஸ்காட்' எழுதிய 'ஐவன் ஹோ' என்ற நாவல் அவருக்கு மிகவும் பிடித்தமான புத்தகம். அதை எடுத்துக் கொண்டு வந்து மறுபடியும் உட்கார்ந்தார். அதைப் படிப்பதற்குக்கூட அவருக்கு அப்பொழுது பொறுமை இல்லை. வெறுமே பக்கங் களை முன்னும் பின்னுமாகப் புரட்டிக் கொண்டிருந்தார்.

பொத்தென அந்தப் புத்தகத்தினுள்ளிருந்து ஏதோ கீழே விழுந்தது. குனிந்து அதைக் கையில் எடுத்தார் அவர். அதை இன்னதென்று அவர் உணர்ந்த அந்தக் கணத்திலேயே அவருள் ஓர் மின் இயக்கம் தோன்றிவிட்டது. சற்றுமுன் திடீரென ஸ்தம்பித்துப் போயிருந்த அவரது சிந்தனை இப்பொழுது மறுபடியும் அலை தெறிக்க ஆரம்பித்தது.

அவர் முகத்திலே நினைவின் சின்னமான மெல்லிய புன்னகையொன்று படர்ந்தது. அந்தப் புகைப்படத்தை' அதிலே கன்னங்குழிய அழகுடன் சிரிக்கும் பெண்ணின் உருவை, அவர் பார்த்துக் கொண்டேதான் இருந்தார். படத்தைக் காலம் அரித்து அங்கங்கே கருமை கலைந்து நிறல்

விழுந்திருந்தது. 'இப்பொழுது அவளையும் அவள் அழகையும் காலம் நன்றாக அரித்து விட்டிருக்கும்' என்று அவர் இருதயத்துடன் பேசிக்கொண்டார். அவள்தான் அந்தக் காலத்திலே அவருடன் எவ்வளவு இருதய அந்தரங்கத்துடன் நடந்துகொண்டாள்! அதை நினைத்தால்கூட இன்பமாகத் தான் இருந்தது அவருக்கு. தம் கையினாலே மெதுவாக அந்தப் படத்தைத் தடவினார் அவர். அதிலே என்ன சுகத்தைக் கண்டாரோ?

தலையை நிமிர்த்தி ஜன்னலுக்கு வெளியே பார்த்தார் அவர். எதிர் வீட்டு வாசல் திண்ணையில் இரு ஜோடிக் காக்கைகள் என்னவோ கொஞ்சிக் கொண்டிருந்தன.

அவர் அந்தக் காலத்துக்கே போய்விட்டார்!

சங்கரி இறந்துபோய்ச் சரியாக ஆறுமாதம் ஆகி யிருந்தது. வீட்டிலே அவரது விதவைத் தங்கை, ரகு, ஸரோ இவர்கள் தாம் இருந்தனர். வாழ்க்கை என்றால் என்ன என்று புரியாத இரண்டு பச்சை மண்கள்; வாழ்க்கைப் பாதையில் நுழையும்போதே பெரிய பாறாங்கல்லில் மோதி மண்டையைப் பிளந்துகொண்டு நிற்கும் ஓர் இளம்பெண். இவர்கள் மத்தியில் மனைவியைப் பிரிந்து தவிக்கும் அவருக்கு என்ன ஆறுதல் கிடைக்கும்? சதா சர்வதா ஊர் சுற்றுவது தான் அவருக்கு அப்போது உசிதமாகப்பட்டது. அந்தச் சந்தர்ப்பத்திலேதான் அவர் எப்படியோ அவள் அழகில், ரஞ்சிதத்தின் எழிலில், மயங்கி அவளிடமும் சிக்கிக் கொண்டார்.

குலத்திலே அவள் தாசிதான்! தொழிலிலேயும் தாசிதான்! ஆயினும் அவரிடத்திலே அவளுக்கு அதிதப் பிரேமை. அவருக்கும் அவளுக்கும் உறவு ஏற்பட்ட காலத்துக்குப்பின் அவள் ஒரு சிறந்த பதிவிரதை போலவே நடந்து கொண்டாள். நான்கு வருஷங்கள் அவளுடன் வாழ்ந்தார். இன்பத்தின் எல்லையை எட்டிவிட்டது போன்ற

பெருமிதத்தில் அவர் ஒரு சுற்றுப் பருத்துக்கூடப் போயிருந் தார். அந்தக் காலத்திலே ரஞ்சிதத்துக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை பிறந்த தினத்திலேதான் என்ன அமர்க்களம்!

அவர் மகள் ஸரோ இறந்தாள். அது அவர் வாழ்விலே அடுத்த திருப்பு முனையாக அமைந்தது. ரஞ்சிதத்தைக் கண்ணெடுத்தும் அதன் பின் அவர் பார்க்கவில்லை. வீட்டோடு வீடாக அடைந்து கிடந்துவிட்டார், பித்துப் பிடித்தவர்போல. இரண்டொரு முறை ரஞ்சிதம் அவர் வீட்டிற்கே வலிய வந்திருக்கிறாள். அப்பொழுதெல்லாம் அவளைப் பார்க்காமலேயே எப்படியெல்லாம் தட்டிக் கழித்து விட்டார்?—அவற்றையெல்லாம் நினைத்துப் பார்ப்பதற்கே அவருக்கு விநோதமாக இருந்தது.

நாலு வீட்டிற்கு அப்பால் யாரோ ஒரு வெற்றிலைக்காரி "நல்ல தளிர் இலையம்மா! வந்து பாருங்க!" என்று சொல்லிக் கொண்டிருப்பது அவர் காதில் விழுந்தது. திடீரென, அவர் தம் உடம்பை ஒருதரம் உலுக்கி விட்டுக் கொண்டார்.

தளிர்! பழுத்த இலை! தளிர்!

சிந்தனை பழைய பாதையில் திரும்பியது.

எதிரே மொட்டை மரம் தன் கிளைகளைப் பலமாக ஆட்டியது. அவர் மரத்தின் கிளைகளை உற்றுப் பார்த்தார். ஏதோ ஒரு கிளையின் நுனியில் எண்ணிவைத்தாற்போல இரண்டே இரண்டு பச்சிளந்தளிர்கள்! மரத்திலே ஒரு புறம் உதிர்ப்பு! மறுபுறம் தளிர்ப்பு! நாளைக்கு இதே மரம் பசுமை குலுங்க விளங்கும்!

அவருக்குப்பின் அவர் சொத்து யார் யாருக்கோ போய்ச் சேரப்போகிறது. அவருக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை. 'நான் செத்தால் எனக்குக் கொள்ளிபோட ஒரு மகன்

இல்லை. யாரையாவது சுவீகாரம் செய்துகொண்டால் என்ன? சுவீகாரப் புத்திரனை நான் என் மகன் என்று ஒப்புக் கொண்டுவிடலாம். ஆயினும் என்னுள் தனியாய் நிற்கும் உள் உணர்வு திருப்தி அடையுமா? என் ஆத்மதாகம் தணிந்து விடுமா?'

அவர் சிந்தனை இங்கும் அங்கும் நெளிந்து புரண்டது, மலையரணை போல.

''எனக்குத்தான் பிள்ளை இருக்கிறானே?''

திடீரென அதிர்வெடிச் சிரிப்புடன் உரக்க இதைச் சொன்னார் அவர்.

''ரஞ்சிதத்தின் வயிற்றில் எனக்குப் பிறந்த மகன்— அவனுக்கே என் சொத்தை எழுதி வைத்துவிடுகிறேன்.''

சம்பிரதாய விரோதம் என்று அவர் ஒருகணம் நினைத்தார். 'சம்பிரதாயமாவது மண்ணாவது! ரஞ்சிதத்தின் மகன்தான் என் வாரிசு!' அவருள் வேறாய் ஜனித்த உள்ளுணர்வு, 'எழுந்துபோய் இதை அவளிடம், ரஞ்சிதத் திடம் சொல்' என்று முடுக்கியது.

அரைக்கணம், அரைவிநாடி அவர் யோசித்தார். அப்புறம், புதியதொரு தெம்பு வந்தவரைப் போல் மிடுக்குடன் எழுந்து கதவைத் தாழிட்டுக் கொண்டு தெருவில் இறங்கி நடந்தார்.

அவர் ரஞ்சிதத்தின் வீட்டை நோக்கிச் செல்வதைக் கண்ட சில ஊர்வம்பிகள் பேசிக் கொண்டார்கள்: ''காடு வாவா என்கிறது; வீடு போபோ என்கிறது. இந்தக் கிழத்துக்கு இன்னும் அவபேரிலே ஆசை விடல்லியே!''

அவர் அதையெல்லாம் காதிலே வாங்கிக் கொள்ளவே யில்லை. லட்சியவாதியைப்போலத் தம் பாதை வழியே நிறைந்த மனத்துடன் நடந்து கொண்டிருந்தார் அவர்.

மாலை ஒளியில் அவர் வீட்டு வாசல் மரத்தின் ஒரு கிளையில் அரும்பியிருந்த இரண்டு தளிர்களும் தளதளத்தன.

(கலைமகள் - டிசம்பர் 1951)

# நம்பிக்கையின் மறுபுறம்

குங்குமம் நெற்றியில் ஒட்டவில்லை. வனஜாவுக்கு ஏனோ நெஞ்சம் துணுக்குற்றது. புதிதாக முந்திய தினம் சாயங்காலம் ஆபீஸ் விட்டு வருகையில் வாங்கி வந்த குங்குமம். கொஞ்சம் பரபரவென்றிருந்தது. 'அதனால் தான் ஒட்டவில்லை' என்று அவளே அவளுக்குச் சொல்லிக் கொண்டாலும் மனத்தின் மூலையில் இலேசாக ஒரு நெருடல் ஏற்படத்தான் செய்தது. ஏன் இப்படி?... ..

தன் மனமே தனக்கு இன்னும் சரியாகத்தெரிந்தபாடாக இல்லை என்றுதான் அவளுக்குத் தோன்றியது.

சிவப்புச் சாந்துப்புட்டி, மூடி திறக்கப்படாமல் அலமாரி யில் இருக்கிறது. அதை எடுத்து இட்டுக் கொள்ளலாம். ஆனால் சில காலமாகவே அவளுக்கு இந்தக் குங்குமத்திலும் மஞ்சளிலும் ஒரு மோகம். அவளுடன் அதே ஆபீசில் வேலை பார்க்கும் பெண்கள்கூட அவளுடைய இந்தக் கர்நாடக மோகத்தைக் கேலி செய்து பார்த்து விட்டார்கள். தன் நினைப்புக்குத் தானே உரமூட்ட அவள் பிடிவாதமாக இந்த மோகத்தைப் பற்றிக் கொண்டிருந்தாள்.

துண்டினால் நெற்றியை அழுத்தித் துடைத்துக் கொண்டாள். அதே குங்குமத்தை இலேசாகத் தண்ணீர் விட்டுக் குழைத்து அவரை விதைத் திலகமாக நெற்றியில் இட்டுக் கொண்டாள். அவ்வளவு நன்றாக இல்லை.

கண்ணாடியில் பார்த்துக் கொண்டபோது அவளுக்கே திருப்தி யாக இல்லை. சிவப்புச் சாந்தை எடுத்து இட்டுக் கொண்டால் என்ன? கூடாது. அவர் வந்து சேர்ந்த பிறகு அவர் இஷ்டப் பட்டால் வேண்டுமானால் இட்டுக் கொள்ளலாம்.

ஆமாம். அவர் வருவாரா?

நினைப்பிலே விளைந்த கேள்வி நெஞ்சிலேயே கொக்கி மாட்டிக் கொண்டு நின்றது.

அவள் கேள்விக்குப் பதில் கூறும் அசரீரி போல, அடுத்த அறையில் கீதாஞ்சலி படிக்கும் அண்ணா விஜியின் குரல் கேட்டது.

''ஹி கம்ஸ், கம்ஸ், எவர்கம்ஸ்!''

அவளுக்கு மெய் சிலிர்த்தது.

'வருவார். கட்டாயம் வருவார்' என்று மெல்ல முனகிக் கொண்டாள்.

நாக்கு முனகியதா? மனசு முனகியதா? இப்படி ஓர் அனாவசியமான சந்தேகம். அதற்கு விடை காணும் முயற்சி யில் உள்ளத்திலே உணர்ச்சிப் பரபரப்பு. இதுபோல் எத்தனை எத்தனையோ சந்தேகங்கள். எத்தனை எத்தனையோ சமாதானங்கள்.

ஆயினும் அவள் பிடிவாதமாக அவர் வருவார் என்று தான் நம்பிக் கொண்டிருந்தாள். அந்தப் பிடிவாதம் அளித்த தெம்பிலேதான், மேசை மீது வாழை இலையில் சுருட்டி வைத்திருக்கும் மல்லிகைச் சரத்தை எடுத்துத் தலையில் சூட்டிக் கொள்கிறாள்.

'பிச்சோடா'வுக்கு மேல் வளைவாகப் பூவை வைத்துக் கொண்டு கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொண் டிருக்கையில் கண்ணில் ஊசி குத்தினாற்போல் இருந்தது. பக்கத்து வீட்டு விசாலம் மாமி வாசல் நிலையில் நின்று

கொண்டு அவள் பூ வைத்துக் கொள்வதை ஏளனப் புன்னகை யுடன் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் முகமும் அந்தப் பார்வையின் குதர்க்கமும் வனஜாவை எரித்தன.

"வாங்கோ மாமி!" என்று வலிந்து புன்னகையை வரவழைத்துக் கொண்டு திரும்பினாள்.

"எங்கே? சினிமாவுக்கா?"

அந்தக் கேள்வியின் உள்ளே தொனித்த கேலி அவளுக்குப் புரிந்தது. அவள் அதைப் பொருட்படுத்தவில்லை.

"இல்லை, மாமி! இன்றைக்கு வெள்ளிக்கிழமை யில்லையா? கோவிலுக்குத்தான்."

"ஓஹோ!..."

"உள்ளே வாங்களேன்."

"இல்லை. சும்மாத்தான் வந்தேன். நீதான் கோவிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறாயே! ..."

வந்தவள் சொல்லிக் கொண்டே போய் விட்டாள். எதையோ வேவு பார்ப்பதைப் போல இவர்களெல்லாம் ஏன் அவளைப் பார்க்கிறார்கள்.

'இந்தப் பூவும் மஞ்சளும் குங்குமமும் நான் தீண்டத் தகாத பொருள்கள்தானோ? ஐயோ! கடவுளே!'

எந்த ஏளனத்தையும் அவளால் தாங்கிக் கொள்ள முடிந்தது. தனக்குள்ளிருந்தே கிளம்பும் இத்தகைய கேள்வி களைத்தான் அவளால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. எவ்வளவுதான் உறுதியோடிருந்தாலும் இம்மாதிரி நினைப்புக் களுக்குத் தடை போட முடியவில்லையே. என்ன செய்வது...?

"அண்ணா! இங்கே வந்து உட்கார்ந்து படியேன். வீடு திறந்து கிடக்கிறது. நான் கோவிலுக்குப் போய்விட்டு வருகிறேன்."

அண்ணாவிடம் சொல்லிக் கொண்டு கையில் பையுடன் கிளம்பி விட்டாள் அவள்.

"சீக்கிரம் திரும்பி விடு, வனஜா!"

அவளுக்குப் பின்னாடியே வந்து வாசல் கதவைத் தாழ் போட்டுக் கொண்டு சென்ற அண்ணாவை ஆதுரத்துடன் பார்த்தாள் அவள்.

அவளுடைய நம்பிக்கையை நம்புகிறவன் அவன் ஒருவன் தான் இந்த உலகத்திலேயே. எத்தனையோ கவலைகள் இருந்தபோதிலும், எத்தனையோ துன்பங்கள் சூழ்ந்த போதிலும் இத்தகைய அன்பின் வடிவமான அண்ணனைப் பெற்ற வரையில் தன்னைப் பாக்கியசாலியாக நினைத்துக் கொண்டாள் அவள்.

கோவிலில் கூட்டம் நெரிந்தது. இன்னும் சற்றுச் சீக்கிரமாகவே கிளம்பியிருந்தால் நல்லது என்று நினைத்துக் கொண்டாள். எப்படியோ ஒரு வழியாக அர்ச்சனையை முடித்துக் கொண்டு புறப்பட்டாள். கோவிலுக்குள் நுழைந்தது முதல் ஓயாமல் அவள் மனம் 'அவரைக் கொண்டு வந்து சேர்த்து விடு. அம்பிகே!' என்றுதான் வேண்டிக் கொண்டிருந்தது. அம்மன் சந்நிதியில் நிற்கும் போது அவளையறியாமலே அவள் கண்கள் கலங்கி விட்டன. 'என்னை ஏமாற்றி விடாதே, தாயே!' என்று மனமுருகி வேண்டிக் கொண்டாள்.

கோவிலுக்குப் போவதிலெல்லாம் அவளுடைய அவருக்கு அவ்வளவு ஈடுபாடு கிடையாது. ஆயினும் அவளுக்காக அவரும் அவளோடு கோவிலுக்கு வந்திருக்கிறார். அவளும் அவருமாய் பிராகாரத்தைச் சுற்றி வருகையில் எத்தனை கண்கள் அவர்களை வட்டமிடும்! யாருக்கும் கிடைக்காத பாக்கியம் தனக்குக் கிட்டியது போன்றதொரு பெருமிதத்

துடன் அந்தப் பார்வைகளை அலட்சியம் செய்து அவள் உல்லாச நடை போடுவாள். அப்படி இணையாக இந்தக் கோவிலை வலம் வரும் நாள் மறுபடியும் வருமா... ?

எத்தனை வெள்ளிக்கிழமைகள் ஓடி விட்டன! அவள் அர்ச்சித்திருக்கும் குங்குமத்தையெல்லாம் சேர்த்துக் குவித்தால் அந்தக் கோவிலில் குடியிருக்கும் அம்பிகையின் மூர்த்தியையே மூடிவிடலாம். ஆயினும், இன்னும் 'அவர் வருவாரா?' என்ற கேள்வியைத் தானே மனசு கேட்டுக் கொண்டிருக்கிறது!

அவள் கையில் பிரித்துக் கிடந்த பொட்டலத்திலிருந்து குங்குமத்தை எடுத்து நெற்றியில் இட்டுக் கொள்கையில் விஜி கேட்டான்.

"அம்பிகை என்ன சொல்கிறாள், வனஜா?"

இதுவரையில் அவன் கேட்காத கேள்வி இது. இப்போது இதைக் கேட்க அவனைத் தூண்டியது எது?

கலங்கிய கண்களுடன் வனஜா அவனைப் பார்த்தாள். 'நான் என்ன பதில் சொல்வது, அண்ணா?' என்று அந்தப் பார்வை பேசியது.

அவனுக்குத் தங்கை மேல் உயிர். அவள் கலக்கத்தை அவன் பொறுக்க முடியாது.

"விஷயம் தெரியுமா, வனஜா! அடுத்த வாரம் எங்கள் ஆபீஸிலிருந்து ஒரு பத்துப் பேர்கள் திருவனந்தபுரம் போகிறார்கள். என்னை மிகவும் வற்புறுத்திக் கூப்பிட்டார்கள். நான் வரவில்லை என்று சொல்லி விட்டேன்."

பேச்சை வெகு எளிதில் மாற்றுவதற்கு அவனால்தான் முடியும்.

"ஏன் அண்ணா?"

''நீயில்லாமல் நான் மட்டும் எங்காவது போவேனா, வனஜா?''

''அண்ணா..!'' - நெஞ்சத்து அன்பையெல்லாம் கொட்டி எப்படி அழைப்பது என்று தெரியாமல் அவள் திணறினாள்.

அப்புறம் என்ன தோன்றியதோ, ''வேண்டாம் அண்ணா. நீ போகாததே நல்லதாகப் போயிற்று'' என்று சொல்லி விட்டு உள்ளே போய் விட்டாள்.

சற்று நேரம் கழித்துத் தான் அவள் ஏன் அப்படிச் சொல்லி விட்டுப் போகிறாள் என்பது விஜிக்குப் புரிந்தது.

வனஜாவின் கணவன் ஸ்ரீதரனும் ஒரு சுற்றுலாக் கோஷ்டியுடன் புறப்பட்டுச் சென்றவன் தானே!—எந்த நினைப்பிலிருந்து அவளை மீட்கப் பேச்சை மாற்றினானோ, அந்த நினைப்புக்குள் தான் மறுபடியும் அவளை அவன் பேச்சு தள்ளிவிட்டது!

'அவர் வருவாரா அண்ணா?' என்று அவள் இதயத்தின் வாய் முனகும் ஒலி அவன் இதயத்தின் காதுக்குக் கேட்டது. சுருள் சுருளாகப் புரண்டலையும் கிராப்பும் குறுகுறுவென்று சுழலும் கண்களும் கூரிய மூக்கும் சதா புன்னகை சிந்தும் வாயுமாய்ச் செந்தாழை நிறத்தில் நெடிதுயர்ந்து நிற்கும் ஸ்ரீதர் அவன் மனக்கண் முன் தோன்றினான்.

அவன் என்னதான் ஆனான்...?—நிகழ்ச்சி நடந்த நாளிலிருந்து இன்றுவரை வனஜாவுக்கும் அவனுக்கும் இது விளங்காத புதிராகத்தான் இருக்கிறது. காரண காரியங்களை ஆராயும் அவசியமேயில்லாமல் எதற்கும் தீர்ப்புக் கூறும் உலகத்துக்கு இது புதிராக இல்லை. 'எங்கே செத்துத் தொலைந்தானோ?' என்று வெகு எளிதாக முடிவு கட்டி விட்டது அது. இந்தக் கூற்றைத்தான் அவனும் வனஜாவும் நம்ப மறுத்தனர்.

ஆயினும் ஒரு நாளா இரண்டு நாளா? ஐந்து ஆண்டுகள் அல்லவா ஓடிவிட்டன!

தங்கள் நம்பிக்கைக்கு ஆதாரமேயில்லையோ என்ற மருட்சியில் இப்போதெல்லாம் விஜி கலங்கத் தொடங்கி விட்டான். வனஜாதான் இன்னும் நம்பினாள்.

அந்த நம்பிக்கையின் பலம் தான் அவனைக் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்று நினைத்தான் விஜி.

நடந்தவற்றை நினைத்தால் வேடிக்கையாகவும் வேதனையாகவும் இருக்கிறது.

தாயும் தந்தையும் தானேயாக நின்று வனஜாவை வளர்த்துப் பெரியவளாக்கி அவளை ஸ்ரீதரன் கைப்பிடிக்க வைத்த பெருமை விஜியைத்தான் சேரும். நினைவு தெரியாத பருவத்தில் தந்தையை இழந்து விட்டு அன்னையின் அரவணைப்பில் வளர்ந்தவர்கள் அவர்கள். விஜி படிப்பு முடிந்து வேலைக்குச் செல்வதற்காகவே காத்திருந்தாற் போல் அந்த அன்னையும் கண் மூடி விட்டாள். அப்போது வனஜாவுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். அதன் பின் அவளுக்கு ஆதரவு அவன்தான்.

தங்கையின் அழகுக்கேற்ற மாப்பிள்ளை கிடைத்து விட்டதில் அவனுக்கு அளவிறந்த பெருமை. ஸ்ரீதரனும் வனஜாவும் சேர்ந்து நடந்து வரும்போது தன் கண்ணே பட்டு விடுமோ என்று அவனுக்குத் தோன்றும். அவன் கண் தான் பட்டு விட்டதோ...?

கலியாணம் ஆகி ஓராண்டு கழிந்திருக்கும்.

''விஜி! ஒரு 'எக்ஸ்கர்ஷன் பார்ட்டி' காஷ்மீர் வரை போகிறது. என் சிநேகிதன் என்னையும் கூப்பிடு கிறான். போய் வரலாமான்னு ஒரு சபலம். நீ என்ன நினைக் கிறாய்?'' என்று ஒரு நாள் விஜியிடம் ஸ்ரீதர் கேட்டான்.

"கிடைக்கிற வாய்ப்பை வீணாக்காதே ஸ்ரீதர். வனஜாவையும் கூட்டிக் கொண்டு போய் விட்டு வாயேன்."

"பெண்கள் யாரும் வரவில்லை. ஆகவே வனஜாவை அழைத்துப் போவது அவ்வளவு உசிதம் என்று எனக்குத் தோன்றவில்லை. அதனால் தான் யோசிக்கிறேன். அந்தச் சிநேகிதன் ரொம்பவும் வற்புறுத்துகிறான். செலவைப்பற்றிக் கவலையில்லை. அவன் ஒரு கோடீசுவரன் வீட்டுப் பிள்ளை. இருந்தாலும் .."

இவர்கள் பேச்சை அரைகுறையாகக் கேட்டுக் கொண்டே வந்த வனஜா "கிடைக்கிற சந்தர்ப்பத்தை விடுவானேன்! போய் வந்தால் போகிறது!" என்றாள் மிகுந்த மகிழ்ச்சியோடு.

"நீ வரமுடியாதே ...!"—அவள் இந்தப் பதிலை எதிர் பார்க்கவில்லை.

"அப்போ நீங்களும் போக வேண்டாம்" என்று பட்டென்று சொல்லி விட்டாள்.

"சேச்சே! அப்படியெல்லாம் சொல்லாதே. ஒரு மாதம் ஆகும். அவ்வளவுதானே? நீ போய் வா ஸ்ரீதர்!"

அண்ணாவுக்காக வனஜாவும் அவனைப் போக அனுமதித்தாள். உண்மையில் அவளுக்கு விருப்பமில்லைதான். எப்படியோ, ஸ்ரீதர் புறப்பட்டு விட்டான்.

"ஒரு மாதம் இதோ ஓடிவிடும். கவலைப்படாதே" என்று போகும்போது வனஜாவிடம் சொல்லி விட்டுப் போனான் ஸ்ரீதர்.

ஒரு மாதம் மட்டுமா ஓடியது? ஐந்தாண்டுகள் ஓடி விட்டன. ஸ்ரீதரன் என்ன ஆனான்?

சுற்றுலாக் கோஷ்டி திரும்பிய நாளில் இருந்து கேட்கப் படும் கேள்வி இது. பதில்தான் தெரியவில்லை.

பிரயாணம் தொடங்கிய இருபது நாட்கள் வரை ஸ்ரீதரிடமிருந்து வனஜாவுக்குக்குத் தொடர்ந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. அப்புறம் ஒரு பத்து நாட்களாகக் கடிதமேயில்லை. ''திரும்பி வந்துவிடப் போகிறானே இன்னும் பத்து நாட்களில்!'' என்று நினைத்து அவர்கள் அதைப் பாராட்டவில்லை. சுற்றுலாக் கோஷ்டி திரும்ப வேண்டிய நாள். பாங்கிலிருந்து மாலை வீடு திரும்புகையில் வழியில் ஸ்ரீதரின் நண்பனைச் சந்தித்தான் விஜி. அந்த நண்பன்தான் ஸ்ரீதரை வற்புறுத்தி அழைத்துச் சென்றவன்.

''மாப்பிள்ளை வந்து விட்டாரா? பிரயாணம் எல்லாம் எப்படி?'' என்று அவனை விசாரித்தான் விஜி.

''ஸ்ரீதரன் இன்னும் வந்து சேரவில்லையா? பத்து நாட்களுக்கு முன்னாலேயே அவன் திரும்பி விட்டானே!''

''ஸ்ரீதரா...? பத்து நாட்களுக்கு முன்னாலா...? அப்போ எங்கே போயிருப்பார்...?''

''ஊருக்குப் போவதாகத்தானே சொன்னான்? நாங்கள் கூட எவ்வளவோ சொன்னோம். கேட்காமல் அவன் பிடிவாதமாகப் புறப்பட்டு விட்டானே!''

''அப்படியானால்...!''

விஜிக்கு மேலே சிந்தனை ஓடவில்லை. ஸ்ரீதரன் எங்கு போயிருப்பான்...? வீட்டுக்குப் போய் வனஜாவிடம் இந்தச் செய்தியை எப்படிச் சொல்வது...?

''நீங்கள் சொல்வது நிஜம்தானா மிஸ்டர்?''

''பொய்யா சொல்கிறேன்? நான் எவ்வளவு சொல்லியும் கேட்காமல், பாதிப் பிரயாணத்தில் எங்களை விட்டு விட்டுத் திரும்பி விட்டானய்யா...!''

விஜிக்கு அப்போதுதான் திடீரென்று நினைவுக்கு வந்தது. பத்து நாட்களுக்கு முன்னால் வடக்கே ஒரு ரயில் விபத்து நிகழ்ந்த செய்தி.

''உங்களை விட்டு அவர் எங்கே பிரிந்தார் மிஸ்டர்?''

ஆக்ராவில், தாஜ்மகாலைப் பார்த்து விட்டு வரும்போது ஊர் நினைவு வந்து விட்டது அவனுக்கு. இப்போ நீங்கள் சொல்வதைப் பார்த்தால்...''

''என்ன... என்ன...?'' என்று பறந்தான் விஜி.

''தப்பாக நினைக்காதீர்கள். இப்போ ஒரு ரயில் விபத்து நடந்ததே. அதனாலே பிரயாணத்தில் ஏதும் தடங்கல் ஏற்பட்டிருக்குமோ என்னவோ...?''—நினைத்தது வேறா யிருந்தாலும் சொல்வதை நாசூக்காகச் சொல்லி வைத்தான் அவன்.

விஜிக்குத் தலை சுற்றியது.

அந்த நண்பனையும் கூட அழைத்துக் கொண்டு தான் வீட்டுக்கு வந்தான்.

வனஜா பூசை மாடத்தில் குத்து விளக்கை ஏற்றிவைத்து நமஸ்கரித்துக் கொண்டிருந்தாள். இந்த வேளையில் அவளி டம் எப்படி இதைச் சொல்வது?

ஆயினும் ........

''என்ன அண்ணா...?—அவர் வந்து விட்டாரா...?''

''இல்லை, வனஜா, பத்து நாட்களுக்கு முன்னாலேயே அவர் இவர்களிடமிருந்து பிரிந்து ஊர் திரும்பி விட்டாராம்!''

''அப்போ எங்கே போயிருப்பார்...?''

அந்தக் கேள்விக்கு இன்னும் விடை தெரியவில்லை. ரயில்வே அதிகாரிகளுக்கு எழுதிப் பார்த்தார்கள். விபத்தில்

காயமடைந்தவர்கள், இறந்தவர்கள் என்று அவர்கள் சேர்த்துக் கொடுத்த பட்டியலில் ஸ்ரீதரன் என்ற பெயரையே காணோம். வனஜாவுக்கு அவன் இறந்திருப்பான் என்று எண்ணவே இயலவில்லை. அவளையறியாமல் அவளுக்குள் ஒரு நம்பிக்கை சுடர் விட்டுக் கொண்டிருந்தது. அவன் இன்னும் உயிருடன் எங்கோதான் இருக்கிறான். அப்படியானால் அவன் ஏன் இன்னும் வரவில்லை?

கலியாணமான புதிதில் வேடிக்கையாக, ஸ்ரீதர் அவளிடம் சொல்வான்: "மேல் நாட்டுக்குப் போய் ஓர் இரண்டு வருடங்களாவது வாழ்ந்து வர வேண்டும். வனஜா, போய் வரட்டுமா?" என்று.

"நம்ம நாட்டிலில்லாத விசேஷம் அங்கென்ன வாழ்கிறதோ?" என்று அவனுக்கு அவள் பதில் சொல்லியிருக்கிறாள்.

"இருக்கிறதே! நீயும் நானும் கைகோத்துக் கொண்டு இங்கு நடனமாட முடியுமா..?" என்று சொல்லி விட்டுச் சிரிப்பான் அவன்.

ஒரு வேளை அப்படி ஏதாவது ஆசை பிறந்திருக்குமோ...? அவர் இறக்கவில்லை. ஆனால் ஏதோ ஓர் ஆபத்தில் மாட்டிக் கொண்டு தவிக்கிறார் என்று தான் தோன்றியது வனஜாவுக்கு.

அவளுடைய இந்த நம்பிக்கையை ஊர் நகைத்தது. அவள் கவலைப்பட வில்லை. அவளுக்கு விஜி என்ற அண்ணன் இருக்கும்வரை அவள் எதற்கும் கவலைப்படப் போவதில்லை.

"அண்ணா! வீட்டிலேயே இருந்தால் மனசு என்னென்னவோ நினைத்துக் குழம்புகிறது. எனக்கும் ஒரு வேலை வாங்கிக் கொடேன்" என்று அவள் விஜியிடம் ஒரு நாள் கேட்டாள்.

''அதற்கென்ன வாங்கித் தருகிறேன்!''

சொன்னதை நிறைவேற்றுவதில் அவன் மகா சூரன்.

வனஜாவுக்கு இப்போது பகல் பொழுது சோப்புக் கம்பெனியில் கழிகிறது.

ஸ்ரீதரன் அவர்களை விட்டுப் பிரிந்து ஐந்து வருடங்கள் ஆகின்றன. இன்னும் அவளுக்கு நம்பிக்கை நைந்து விட வில்லை.

மணி எட்டடித்து விட்டது.

அண்ணனைச் சாப்பிடக் கூப்பிட வந்தாள் வனஜா.

விஜி இரைந்து காலையில் படித்த அதே பகுதியைப் படித்துக் கொண்டிருந்தான்.

''ஹி கம்ஸ்...கம்ஸ்...எவர் கம்ஸ்!''

''அண்ணா......!''

''என்ன வனஜா......?'' என்றான் அவன் படிப்பை நிறுத்தி விட்டு.

''சாப்பிட வரயா......?''

''ஓ .....!''—அவன் எழுந்து விட்டான்.

''காலையிலும் இதையே படித்தாய்! மனப் பாடம் பண்ணுகிறயா...என்ன?'', என்றாள் அவள் நடந்து கொண்டே.

''என்னவோ அதைப் படிப்பதற்குப் பிடிக்கிறது!'' என்றான் விஜி.

''எனக்கும் அதைக் கேட்கப் பிடிக்கிறது.''

''எதை......?''

''ஹி கம்ஸ். கம்ஸ் .... எவர் கம்ஸ் .....!''
விளக்கு சுடர் தெறித்தது. அவள் கண்கள் பிரகாசமுற்றன.

''அண்ணா......!'' என்று சொல்லிக் கொண்டே விளக்குக்குக் கைகூப்பினாள் அவள்.

அவன் நெஞ்சிலும் இலேசாக ஒரு சுடர் தலை நீட்டியது.

* * *

அன்றிரவு முழுக்க வனஜாவுக்குக் கனவுகள்தாம். மூடிய இமைகளை மெல்ல ஸ்ரீதரன் வந்து திறப்பது போலத் தோன்றும். படபடப்பில் கண்களை விழித்து இருட்டைப் பார்த்து மருளுவாள்.

கனவுகளுடன் உறவாடிய இரவும் கழிந்தது.

'அவர் வருகிறார். வருகிறார்......' என்று மனசுக்குள் முனகிக் கொண்டே தான் அவள் துயில் கலைந்தாள்.

காலைக் காரியங்கள் பழக்க வேகத்தில் மளமளவென்று நடந்தேறின. மணி ஒன்பதாகிவிட்டது. ''சாப்பிட வா அண்ணா......!'' என்று சமையற் கட்டிலிருந்தே குரல் கொடுத்தாள் வனஜா.

''வனஜா......!''

விஜி ஏன் இப்படி அலறி அழைக்கிறான்?

அவள் ஓடோடி வந்தாள்.

கலங்கிய கண்களுடனும் கையில் பிரித்த கடிதத்துடனும் விஜி நின்றான்.

அவள் அவனைப் பார்த்துப் பதறிவிட்டாள்.

''என்ன அண்ணா...?''

''ஸ்ரீதரன் உயிரோடிருக்கிறான் வனஜா!''

''ஹா...ங்!''—அவள் கண்களும் பனித்தன. அவன் கையிலிருந்த கடிதத்தைப் பறித்தாள். முத்து முத்தாக அவர் கையெழுத்து!

''வனஜாவுக்கு......

ஓடும் ரயிலில் உட்கார்ந்து கொண்டு இதை எழுது கிறேன். நான் உயிருடன்தான் இருக்கிறேன் என்பது ஆச்சரியமாகத் தான் இருக்கும். எனக்கே ஆச்சரியமான செய்தி அது. ஆக்ராவில் தாஜ்மகாலைப் பார்த்ததுமே எனக்கு உன்னருகே இருக்க வேண்டும் போல ஒரு வெறியே ஏற்பட்டு விட்டது. நண்பர்கள் எவ்வளவோ வற்புறுத்தியும் கேளாமல் அவர்களை விட்டுப் பிரிந்து ரயிலேறி விட்டேன். திடீரென உன் முன் வந்து நின்று உன்னை ஆச்சரியத்தில் மூழ்கடிக்க வேண்டும் என்று நினைத்தேன். அதனால் தான் உனக்கு அதைக் குறித்து எழுதவில்லை. ஆனால்... நான் வந்த ரயில் விபத்துக்குள்ளாகியது. நான் இருந்த பெட்டியில் ஒரு செல்வந்தர் உடன் வந்தார். ரயில் கவிழ்ந்தது மட்டும் தான் எனக்கு நினைவிருக்கிறது. அப்புறம் நடந்த தெல்லாம் அவர் சொல்லித்தான் தெரியும். எங்கள் பெட்டியில் யாருக் கும் காயமோ, சேதமோ ஏற்படவில்லையாம். விழுந்த அதிர்ச்சியில் மண்டை நிலையில் மோதி எனக்குத்தான் பிரக்ஞை தப்பி விட்டது. என் கைப்பெட்டி எங்கோ தவறி விட்டது. அந்த மனிதர் காருண்யத்துடன் என்னைத் தன் னுடன் காரில் ஏற்றிக் கொண்டு சென்றிருக்கிறார், அதிர்ச்சி நீங்கியதும் பிரக்ஞை தெளியும் என்ற நம்பிக்கையில். அவருக்கு நான் யார் என்ற விவரம் தெரியாது. எனக்கோ தன் நினைவே வரவில்லை. ஆகவே என்னை ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்து விட்டார். மூளைக்கோளாறு என்று முடிவு கட்டி அவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விட்டார்கள்.

பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போயும் தெளியாத கோளாறுகள் இல்லையா ? என் கதை ஏனோ தெளிகிற கதையாகி என்னைத் திண்டாட வைத்து விட்டது. சுயப் பிரக்ஞை வந்ததும் நான் அங்கு வந்து சேர்ந்த வரலாற்றைத் தெரிந்து கொண்டேன். ஆயினும் எனக்குப் பழைய நினைவுகள் சரிவர வரவில்லை. என்னைக் காப்பாற்றிய அந்த மனிதர் ஒருநாள் என்னைப் பார்க்க வந்தார், அவர் கூறிய விவரங்கள் எனக்கு ஒரளவு தெளிவு பெற உதவின. நான் சொல்லும் இந்த நிலையெல்லாம் கடந்த ஒரு மாத காலமாகத் தான்.

சுற்றுலாக் கோஷ்டி திரும்ப வந்து நான் முன்னால் புறப் பட்டதைத் தெரிவித்திருக்கும். உங்களுக்கு ரயில் விபத்தில் நான் இறந்ததாக எண்ணி நீ கைம்மைக் கோலம் பூண்டிருப் பாய் என்று நினைத்த போது என்னால் தாங்கவே முடிய வில்லை. என் வேதனையை உனக்குச் சொல்லி முடியாது.

உன்னைப் பார்த்து உனக்குப் புனர்வாழ்வு தர ஓடோடி வந்தேன்.

ரயிலடியிலேயே எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது. தலை நிறையப் பூவும், நெற்றியில் குங்குமப் பொட்டுமாய் நீ சாரதா சோப்புக் கம்பெனி வாசலில் நின்றுகொண்டிருப்பதை ரயிலடியிலிருந்து வெளியே வந்து ஜட்காவைக் கூப்பிட வாய் திறந்தவன் பார்த்து விட்டேன்.

உன்னைக் கூப்பிடத்தான் நினைத்தேன். ஏனோ முடிய வில்லை. 'நீதானா அது?' என்று ஒரு சந்தேகம். மெள்ள நடந்து வந்தேன். நீ என்னைக் கவனிக்கவேயில்லை.

''வனஜாவுக்குக் குங்குமப் பொட்டுத்தான் ரொம்பப் பிடிக்கிறது. இல்லையா வனஜா...!'' என்று யாரோ ஒரு பெண் கேட்டாள் உன்னிடம்.

"சுமங்கலிக்கு அதுதான் அழகு!" என்று சொல்லிவிட்டு நீ சிரித்தாய்.

என் கண்களை நம்ப முடியவில்லை. நான் கற்பனை பண்ணி வைத்திருந்த வனஜாவாக நீயில்லை. என் மறைவு உன்னை எவ்வகையிலும் பாதிக்கவில்லை என்பதை உன் தோற்றமே எனக்கு உணர்த்தி விட்டது. அப்படி உணர்ந்த போது எனக்கு வேதனையாயிருந்தது.

நீ எப்படி வாழ்கிறாய் என்று நான் நினைக்க விரும்ப வில்லை. 'சுமங்கலி' என்ற புனிதமான பதத்தை நீ எந்த நினைப்பில் உச்சரித்தாயோ; நான் உயிருடன் தான் இருக் கிறேன். ஆகவே நீ சுமங்கலிதான்.

என்னைத் தேட முயலவேண்டாம். நான் எங்கோ எப்படியோ வாழ்ந்து கொள்வேன். என் மறைவு உன்னை எப்படிப் பாதிக்க வில்லையோ, அப்படியே இந்தக் கடிதமும் உன்னை ஏதும் பாதிக்காது என்று தான் தோன்றுகிறது.

-ஸ்ரீதரன்

"அ . ண் ..ணா...!" என்று கதறிக் கொண்டு கீழே விழுந்தாள் வனஜா, விஜி அவளைத் தேற்ற முனையவில்லை. முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு குழந்தை போல் விம்மிக் கொண்டு நின்றான்.

(கல்கி 13-5-1962)

# மூத்த பையன்

'அப்பா...!'

சுற்றிக் கவிந்திருந்த இருளைக் கிழித்துக்கொண்டு கிளம்பிய ஜோதியில் இனிமை நிறைந்த இவ்வொலி கேட்டு அவர் துயில் கலைந்தார்.

கனவில் தெரிந்த ஒளிக்கீற்று,கண்விழித்தபோது இருளில் புதைந்து போய்விட்டது. நெருக்கித் திரண்டிருந்த இருட்டி னூடே சுவர்க் கோழியின் முணு முணுப்புத்தான் கேட்டது.

சிறு வெளிச்சம்கூட நிம்மதியான தூக்கத்துக்கு இடைஞ்ச லாக இருக்கும் என்று எண்ணி அவர் தூங்கியதும் விடி விளக்கைக்கூட அணைத்து விடும்படி வேலைக்காரனுக்கு உத்தர விட்டிருந்தான் அவர் பையன். அப்பாவின்மீது அவனுக்குஅவ்வளவு சிரத்தை. ஆயினும் அவருக்கு ஏனோ நிம்மதியில்லை.

தலைமாட்டில் கட்டிலிலேயே பொருத்தப்பட்டிருந்த பொத்தானை அழுத்தினார். இருள் திரைவிலகி, அறையில் விடிவிளக்கின் நீல ஒளித்திரை ஆடியது. அது அவருக்காகக் கட்டப்பட்டிருந்த படுக்கை அறை. எதிரே சுவரில் வேலும் அபயகரமும் வினைதீர்க்கும் குறுநகையும் ஒளிவீச, குழந்தை முருகன் படத்திலே சிரித்துக் கொண்டிருந்தான்.

அவன்தான் கனவிலே வந்து அழைத்தானோ?

"முருகா...!"

மேலே மாடியில் கட்டில் கிறீச்சிட்டது. பளிச்சென்று உயரேயிருந்த ஜன்னலில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது.

"என்ன வேணும் அப்பா?"

அவர் தமக்குள் மெதுவாக நகைத்துக்கொண்டார். அவர் முனகிய ஒலி கேட்டே அவர் மகன் கபாலி எழுந்து விட்டான். எப்போதுமே அப்படித்தான் அவன். எத்தனை அயர்ந்து தூங்கினாலும் பக்கத்திலே முணுக்கென்று ஒலி கேட்டால் விழித்துக்கொண்டு விடுவான்.

"ஒண்ணுமில்லை, ராஜா! நீ தூங்கு."

விடி விளக்கை அவர் கை அணைத்ததும் மேலேயும் விளக்கு அணைந்தது. கட்டில் கிறீச்சிட்டது.

'நல்ல வேளை, படுத்துக் கொண்டு விட்டான்!"

அனாவசியமாக ஏதாவது கவலைப்பட்டுக்கொண்டு பையன் எழுந்து வந்துவிடப்போகிறானே என்ற பயத்தில் விளக்கை அணைத்துவிட்டாரென்றாலும் அவருக்கு இப் போது வெளிச்சம் தேவையாகத்தான் இருந்தது. பால் வடியும் முகமும், பசி தீர்க்கும் புன்னகையுமாய் நிற்கும் பால குருநாதனைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் தேவலை போலிருந்தது அவருக்கு.

'சொல்லப் போனால் கபாலி எனக்கு இரண்டாவது பிள்ளைதான். முருகன்தான் எனக்கு மூத்த பிள்ளை— சரியோ தப்போ அவர் மனதில் எப்போதுமே இப்படியொரு நினைவு இழையோடிக் கொண்டுதான் இருந்தது.

முருகன் மீது அவருக்கு பக்தி அதிகம் என்று சொல் வதைவிடப் பாசம் அதிகம் என்று சொல்வதுதான் பொருந்தும். அவர் தன் மனத்தை அப்படி வளர்த்திருந்தார். இல்லை. அவர் மனது அப்படி வளர்ந்திருந்தது.

அதிலும் குறிப்பாக, கிராமத்தில் அவரே நிர்மாணித்த கோயிலில் குடியிருக்கும் குழந்தைத் தெய்வம் ..!

இருளில் அவருக்கு மெய்சிலிர்த்தது.

'முருகா ?' என்று மனதுக்குள்ளேயே முனகிக் கொண்டார்.

'அப்பா.. !'

குழந்தைக் குரலில் யாரோ தன்னை அழைப்பது அவருக்கு மட்டும் கேட்டது. 'முருகன்தான் குரல் கொடுக்கிறான்! முருகனேதான்!'—என்று அவர் நெஞ்சம் முனகியது.

மனவெளியிலே கிராமத்துக் கோவில் அழகாய் அலங்காரமாய் எழுந்து நின்றது.

அந்தக் கோவிலில்தான் அவருடைய மூத்த பிள்ளை இருக்கிறான். எங்குமே நிறைந்திருக்கும் எல்லையற்ற பரம் பொருளை இங்குதான் இருக்கிறான் என்று வரையறுத்துக் கூறுவது தவறு என்று அவரது வேதாந்த மனம் சமயத்தில் விசாரப்பட்டாலும் அவரால் அப்படித்தான் நினைக்க முடிந்தது.

கோவில் அப்படியொன்றும் பெரியகோவிலில்லை. சின்னக் கோவில்தான். கோவிலையடுத்து ஒரு சின்னத் திருக்குளம். பழமையின் பெருமை பாடும் சிற்பமோ, சித்திரமோ கோபுரமோ இல்லாமல் சின்னதோர் வெள்ளை விமானத்துடன் நின்றது கோவில்.

அந்தக் கோயிலில் குடியிருப்பவனுக்கு மட்டுமென்ன, கோவிலுக்கே அவர்தான் தந்தை.

ஊருக்குக் கிழக்கே சிதிலமடைந்த மதில்களுடன் சிவன் கோவிலொன்று இருக்கிறது. அவருடைய பாட்டன், முப்பாட்டன்களெல்லாம் பூசை செய்து வந்த கோவில். அது,

அவரும்கூட வெகு நாட்கள்வரை அந்தக் கோவிலில்தான் மணியடித்துக் கொண்டிருந்தார். கோவில் நிர்வாகப் பொறுப்பில் ஏற்பட்ட மாறுதலில் ஒரு நாள் வேறொருவன் அவர் கையிலிருந்த மணியை வாங்கிக்கொண்டு விட்டான்.

வாழ்க்கையில் சொல்லொணாத சலிப்பு ஏற்பட்டிருந்த வேளை அது அவருக்கு. அவருக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட்ட திருப்தியுடன் அவர் தாயும் தகப்பனும் இரண்டு வருடங்களில் ஒருவர்பின் ஒருவராகப் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். 'நானும் நீயுமடி எதிரும் புதிருமடி என்று அவரும் அவருடன் தன் வாழ்வைப் பிணைத்துக் கொண்ட அவளும் அந்தக் கிராமத்துப் பெரிய வீட்டில் பத்து வருடங்கள் ஓட்டியாயிற்று.

அவளுக்கு அவர் துணையாய், அவருக்கு அவள் துணை யாய் நிற்கும் நிலைமாற அவர்களுக்கு ஒரு துணையாக— அவள் வயிற்றில் ஒரு குஞ்சு பொரிக்கவில்லை.

பங்களாவாக வீடு. தாமிரவருணிக் கரையில் நாலு ஏக்கர் நிலம்.

சோற்றுக் கவலையில்லைதான். என்றாலும்...?

சிவன் கோவில் உத்தியோகம் கைமாறிப் போனபோது அவர் கொஞ்சமும் வருத்தப்படவில்லை. பேசாமல் வந்து ரேழியில் தொங்கிக்கொண்டிருந்த ஊஞ்சலில் துண்டை உதறி விரித்துப் படுத்துக்கொண்டு விட்டார்.

ஆனால் அப்படிப் படுத்துக் கொண்டு ஆடும் ஊஞ்சலின் வேதனை முனகலை சகித்துக் கொண்டு காலத்தின் கழுத்தைப் பிடித்துத் தள்ளுவது எவ்வளவு சிரமமான காரியம் என்பது அவருக்கு ஒரு வாரத்திலேயே புரிந்து விட்டது. தாம்பத் யத்தனிமை விசுவரூபமெடுத்து அப்போது அவரை வதைத்தது. சுவரையோ பூசை மாடத்தையோ வெறிக்கப்

பார்த்துக் கொண்டு முட்டைக் கட்டிக்கொண்டு பறி கொடுத்துவிட்ட பாவனையில் சோகக் கறை பூசிய முகத் துடன் உட்கார்ந்திருக்கும் மனைவியைப் பார்க்கையில், வீட்டிலே நிறைந்து ஆட்சி புரியும் வெறிச்சிட்ட தன்மையை மூச்சுக் காற்றுடன் சுவாசிக்கையில், இத்தனை நாளும் அனு பவித்து அறியாத வேதனை அவரை ஆட்கொண்டது.

முன்னெல்லாம் கோவில் காலம் முடிந்து அலுத்துச் சலித்துப் போய் வீடு வந்து படுத்தால் சொல்லாமல் கொள் ளாமல் ஓடி வந்து அவரை அணைத்துக் கொள்ளும் உறக்கம் இப்போது அவரிடம் சொல்லாமல் எங்கேயோ போய் உறங்கி விட்டது.

இரவில் ஊஞ்சலில் படுத்தவாறு என்னென்னவோ எண்ணிப் புழுங்கி த்தவித்திருக்கிறார். அப்படியாகத் தன்னை மறந்து தூங்கினால் திடீரென யாரோ தன்னைத் தொட்டு எழுப்பினாற் போன்ற உணர்வில் கண் விழித்துக்கொண்டு 'பாகி...! கூப்பிட்டாயா..?' என்பார். பாகீரதி சுவரோரம் தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவருக்கே விநோதமாக இருக்கும்.

பாதி ராத்திரியில் திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொள்வது அவருக்கு வழக்கமாகிவிட்டது.

ஒரு நாள். நடுநிசிப்போது. ஊரே உறங்கிக்கொண்டிருக் கிறது. எப்போதும் போல பாகி சுவரோரம் படுத்துத் தூங்கு கிறாள். அவரும ஊஞ்சலில் தூங்கிக் கொண்டுதான் இருக் கிறார். ஊஞ்சல் மட்டும் முனகி அழுது கொண்டு விழித்துக் கொண்டிருக்கிறது.

திடீரென ஊஞ்சலின் முனகல் ஓய்கிறது. மெழுகு பொம்மை போல ஒரு குழந்தை தன் பிஞ்சுக் கரங்களால் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு ஊஞ்சலில் தொற்றியேறு கிறது.

'அப்பா, அ...ப்...பா...!'

அவர் துயில் கலைந்து கண் விழிக்கிறார். 'கொள்ளை ஒளித்திரளின் கூட்டமுதாய்' குழந்தை அவர் மார்பில் தவழ் கிறது.

பிரமிப்பில்அவர் குழந்தையை எடுத்து அணைக்கக் கை விரிக்கையில் அது ஊஞ்சலிலிருந்து கீழே குதித்து திரும்பித் திரும்பிப் பார்த்து மனமோகனமாகச் சிரித்துக் கொண்டே வாசலுக்கு ஓடிவிடுகிறது.

அவர் எழுந்து அதைத் தொடர்கிறார்.

அந்தச் சின்னஞ்சிறு குழந்தை கதவை எப்படித் திறந்து கொண்டு ஓடிற்று?—

தெருவிலே நின்று கையை ஆட்டி அவரை அழைக்கிறது குழந்தை.

இதுவரை உணராத ஒரு பரவச உணர்ச்சியில் அவர் குளித்துக் கொண்டு நிற்கிறார்.

குறுநடை நடந்து அது மேற்கே திரும்புகிறது.

கதவைச் சார்த்தக்கூட மறந்து போய் அவர் அதைப் பின் தொடர்கிறார்.

'குளத்துப் பக்கம் போகிறதே, குழந்தை!—' அவர் வேக மாக அடியெடுத்து வைக்கிறார்.

குழந்தையும் சிரித்துக் கொண்டே ஓடி குளத்தங்கரை அரசமரத்தடிப் பிள்ளையாரின் பின்னால் போய் ஒளிந்து கொள்கிறது.

அவர் ஓடிப் போய் விநாயகரின் பின்னால் தேடுகிறார்.

விநாயகரின் தலையில் முட்டிக் கொள்கிறார். குழந்தையை அங்கே காணோம்!

வலிக்கின்ற நெற்றியை அழுத்தத் தேய்த்துக் கொள்கையில் கண்முன் ஏதோ திரை விலகினாற் போன்று உணர்கிறார். கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு சுற்று முற்றும் பாக்கிறார்.

நடந்ததெல்லாம் கனவானால் அவர் எப்படி குளத்தங் கரைப் பிள்ளையாருக்கு எதிரே வந்து நிற்கிறார்...?

பிரமிப்பிலும் திகைப்பிலும் இன்னதெனப் புரியாததோர் பரவசத்துடனும் அவர் தலை குனிந்தவாறு வீடுதிரும்பும் போது பாகீரதி எழுந்து உட்கார்ந்திருக்கிறாள்.

"பாதி ராத்திரி வேளையிலே கதவைத் திறந்து போட்டுட்டு எங்கே போனேள்...?"

"எங்கே போனேன்...? எப்படிப் போனேன்?"

கதவைத் தாள் போட்டுவிட்டு வந்து அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு வெகு சுவாரசியமாய் அவர் நடந்ததைச் சொன்னால் அவள் இடி இடியென்று சிரிக்கிறாள்.

"உங்களுக்குப் பைத்தியம்தான் பிடிச்சுடுத்து...!"

அதன்பின் அன்றிரவு அவர் தூங்கவேயில்லை.

பாகீரதி நம்ப மறுத்த அந்த அனுபவத்தை வேறு யாரிடமும் சொல்லி அவமானப்பட அவர் விரும்பவில்லை. நினைந்து நினைந்து அந்த நினைப்பில் கிளர்ந்தெழும் மகிழ்ச்சிப் பரவசத்தில் திளைத்துக் கொண்டிருந்தார்.

அடுத்த நாள் அவர் அதே போன்ற நிகழ்ச்சியை வெகுவாக எதிர்பார்த்ததனாலோ அல்லது அந்த நினைப்பிலேயே விழித்துக் கொண்டிருந்ததனாலோ ஒன்றும் ஏற்படவில்லை. அதற்கடுத்த நாளும் அவருக்கு ஏமாற்றம்தான்.

நான்காம் நாள் அவர் நன்றாகத் தூங்கிவிட்டார். இரண்டு நாட்களாக சரியாகத் தூக்கம் இல்லாததால் அன்று படுத்தவுடனேயே கண்ணயர்ந்து விட்டார்.

அன்று நள்ளிரவில் குழந்தை அவரைத் தொட்டு எழுப்பியது.

அவர் கையைப் பிடித்திழுத்துக் கொண்டு குளத்தங் கரைப் பிள்ளையாரின் எதிரே போய் நிறுத்திவிட்டுத் தான் மறைந்து கொண்டது.

குழந்தை மறைந்ததும் பிரமை தெளிந்து அவர் கண் விழிக்கையில் அவர் நிஜமாகவே குளத்தங்கரையில் நிற்கிறார்.

அப்புறம்—இரண்டு நாட்கள் ஒன்றும் இல்லை. மறு படுயும் ஒரு நாள்—இதே போல!

பாகீரதி பயந்து போனாள்.

அவர் பயப்படவும் இல்லை. கவலைப்படவும் இல்லை அழகு கொழிக்கும் அந்தக் குழந்தை தினம் வராதா என்று தான் ஏங்கினார்.

அந்திமயங்கும் வேளையில் கிணற்றங்கரையில் கையில் தாம்புக் கயிறுடன் கனவில் கண்ட குழந்தையின் நினைவில் செயலொழிந்து நிற்கும்போது, ஒரு நாள், பாகீரதி உள்ளூர் டாக்டரை அழைத்து வந்துவிட்டாள்.

''பாகீ! உனக்கென்ன பைத்தியமா...? என்று இரைந்தார்'' அவர்.

டாக்டர் ரொம்பவும் அனுபவஸ்தர்.

''அதில்லை சபேசய்யர். பொம்மனாட்டிகள் மனசு அப்படித்தான். நானென்ன ஈஸ்வரனா...? ஏதோ நான் பார்த்து உங்களுக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லையின்னு சொல்லிட்டா அவாளுக்கு ஒரு திருப்தி!'' என்று சொல்லிக்

கொண்டே சபேசய்யரை வழிப்படுத்தி, என்னமோ கேள்வி கள் கேட்டு சோதனை செய்து தம் காரியத்தைக் சாதித்துக் கொண்டார்

''தூக்கத்திலே எழுந்து நடக்கிறது ஒரு வியாதி. அந்த வியாதிக்கு 'ஸோம்னாம்புலிஸம்' என்று பெயர். ஆனா ஒண்ணு, அவர் அப்படி எழுந்து நடக்கிறபோது நீங்க ஏதும் தடை பண்ணிப்பிடா தேங்கோ!''

டாக்டர் தனக்குச் சேரவேண்டியதைப் பெற்றுக் கொண்டு பாகீரதியின் மனத்திலே மேலும் கொஞ்சம் கவலையை ஏற்றிவிட்டுப் போய்ச் சேர்ந்தார்.

அடுத்த நாள் குழந்தை சபேசய்யரை அழைத்தது.

''எனக்கு ஒரு வீடு கட்டித் தாயேன்'' என்று கேட்டு விட்டு ஓடிவிட்டது. உடம்பெல்லாம் வேர்வையில் தெப்ப மாய் நனைந்திருக்க ஊஞ்சலில் எழுந்து உட்கார்ந்திருந்தார் சபேசய்யர்.

''பாகீரதி; பாகீரதி...!''

அவள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து வந்தாள்.

''குளத்தங்கரையிலே ஒரு முருகன் கோவில் கட்டப் போகிறேன்!''

அவர் பேச்சின் படபடப்பும் முகத்தில் கொழுந்து விட்டெரியும் தேஜஸும் அவளை என்னவோ செய்தன.

''உங்களுக்கு என்னதான் வந்திருக்கோ...?'' என்று சொல்லி விட்டுக் கேவினாள் அவள்.

அவர் அவளைக் கவனிக்கவேயில்லை. முகட்டு வளை யில் எதையோ தேடிக் கொண்டிருந்தார்.

'தூக்கத்தில் ஏதோ பிதற்றுகிறார்' என்றுதான் பாகீரதி நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் மறுநாள் பொழுது

புலர்ந்தும் புலராததுமாய் அவர் குளித்துவிட்டு வெளியே கிளம்பியபோது தான் அவருடைய பேச்சின் தீவிரம் அவளுக்குப் புரிந்தது.

அழகாய், சின்னஞ் சிறிதாய் குளத்தங்கரையில் முருகன் கோவில் எழும்பி விட்டது.

அதன்பின் அவர் தூக்கத்தில் எழுந்து நடக்கவில்லை. அவரும், பாகியும் ஊரார் அனைவரும் அதிசயிக்கும்படி இத்தனை வருடங்கள் கழித்து பாகி கருவுற்றாள்.

ஐயர் கனவில் வந்த குழந்தை போல, குமரன் கோவில் கும்பாபிஷேகம் ஆன பத்து மாதங்களில் 'கபாலி' பிறந்தான்.

முருகன் கோவில் பூசையை சபேசய்யர்தான் நடத்தினார். ஆயினும் அவருக்கு அந்தக் கோவிலைக் கோவிலாகவும் தன்னைக் குருக்களாகவும் எண்ணிப் பணியாற்ற இயலவில்லை.

காலையில் எழுந்து குளித்ததுமே, ''என் பிள்ளை பட்டினி கிடக்கிறான். அவனைக் கவனித்து விட்டு வரேன்!'' என்று சிரித்துக் கொண்டு கூறிவிட்டுக் கோவிலுக்கு ஓடுவார். அபிஷேகம் செய்வதெல்லாம் ஆசையோடு ஒரு குழந்தையைக் குளிப்பாட்டுவது போலத்தான் இருக்கும்.

கபாலியிடமும் அவர் ஒட்டாமல் இல்லை. செல்வச் சிறப்புடன்தான் பிள்ளையை வளர்த்தார்.

இதில் வேடிக்கை என்னவென்றால், கபாலி வளர்ந்து பெரியவனாகி கல்லூரியில் படிக்கும் காலத்திலும் அவர் திடகாத்திரராகத்தான் இருந்தார். உஷை கண் திறக்குமுன் எழுந்து திருக்குளத்தில் நீராடி முடித்து, கோவிலில் குடியிருக்கும் முருகனுக்கும் அபிஷேக நைவேத்தியம் செய்துவிடுவார்.

கபாலி தற்காலப் பையனாய் வளர்ந்தான். அப்பா இந்தத் தள்ளாத வயதில் இப்படிக் கோவில் பூசை செய்வது அவனுக்குப் பிடிக்கவில்லை.

அவன் எவ்வளவு நாசூக்காகத்தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாலும் சபேசய்யர் ஒரு புன்னகையுடன் "நீயும் முருகனும் எனக்கு ஒண்ணு தாண்டா!" என்று சொல்லி விட்டுப் போய் விடுவார்.

அப்பாவின் பதிலுக்குப் பொருள் புரியாமல் திகைத்து நிற்பான் கபாலி.

பையன் பி. ஏ. தேறிவிட்டான்—மாகாணத்தில் முதல் வனாக. பாகீரதி மகிழ்ந்து போனாள். பெரியஇடத்துப் பெண் ணொருத்தி ஏராளமான ஸ்ரீதனங்களுடன் மருமகளாக வந்து வாய்த்தாள்.

நடக்க வேண்டுவன நடந்ததாக அமைதியாக இருந்தார் சபேசய்யர். ஒழுங்காக என்றும் போல அவர் வாழ்க்கை ஓடியது.

கபாலிக்கு சர்க்காரில் நல்ல உத்தியோகமும்கிடைத்தது. ஐ. ஏ. எஸ். எழுதித் தேர்ச்சி பெற்று விட்டான். செய்தி யறிந்த பாகீரதி மகிழ்ச்சியில் மூச்சுவிட மறந்து போனாள்

அமைதியாகத் தெளிந்து நின்ற ஐயரின் மனம் லேசாகக் கலங்கியது. பிள்ளையும் மருமகளும் தங்களுடன் வந்துவிடும் படிஅவர் காலில் விழுந்து கெஞ்சினார்கள்.

சபேசய்யர் ஏனோ நிர்த்தாட்சண்யமாய் மறுத்து விட்டார்,

"இந்தக் கோவிலைக் கட்டித்தாண்டா உன்னை உண்டாக்கினேன். இங்கேதான் என் மூச்சு உள்ளவரைக்கும் நான் இருப்பேன். இருக்கணும். கலங்காமல் போயிட்டு வாங்கோ...!"

சமையலுக்கு ஒரு ஆள் வைத்துக் கொள்ளும்படி கேட்டுப் பார்த்தான் பையன். அவருக்கு ஏனோ அதில் இஷ்டமில்லை.

பிடிவாதமாக தனியே கிராமத்தில் தங்கிவிட்டார் அவர்.

மகனும் மருமகளும் பிரியா விடை பெற்றுப் பிரிந்து சென்றனர்.

அவர் தனக்குத்தானே சிரித்துக் கொண்டார்.

ஒரு நாள் கபாலிக்கு ஊரிலுள்ள ஒரு பெரிய மனிதரிட மிருந்து தந்தி வந்தது.

"சபேசய்யருக்கு அபாயம்! உடன் புறப்படவும்!"

விமானத்திலும் காரிலுமாய்ப் பறந்து ஓடி வந்தான் கபாலி.

ஐயர் ஜுரத்தில் தன் நினைவு இழந்து படுத்திருந்தார். வரும் போதே கூட ஒரு டாக்டரையும் அழைத்து வந்திருந் தான் புத்திசாலிப் பையன்.

இரண்டு நாட்கள் தங்கி, ஜுரவேகத்தைத் தணித்துக் கொண்டு, சென்னைக்கு அவரை ஒரு காரில் படுக்கவைத்துக் கொண்டு போய் விட்டான். பணத்தைப் பணமென்று பாராமல் செலவு செய்து பூரண குணமாக்கி விட்டான். ஆயினும் அப்பாவின் முகத்தில் கிராமத்திலிருக்கும் போது காணும் மலர்ச்சியில்லாதது அவனுக்கு வேதனையாகத்தான் இருந்தது.

பையனின் எண்ணம் ஐயருக்குப் புரிந்துதான் இருந்தது. இதைவிட அக்கறையுடன் உலகில் வேறு யாரும் கவனிக்க முடியாது. ஆயினும் அவரால் இங்கே நிம்மதியாக இருக்க முடியவில்லையே!

சிந்தனைகளில் சிக்கித் திசை தடுமாறிக் கொண்டிருந்து விட்டு அன்று அவர் தூங்கும்போது மணி நாலடித்துவிட்டது.

ஐயர் பித்துப் பிடித்தாற்போல் ஆகிவிட்டார். ஆபீஸி லிருந்து வந்ததும் நேராக அவரருகே தான் வந்து நிற்பான் கபாலி. மேல் அங்கியைக்கூடக் கழற்றாமல் அப்பாவிடம் ஏதாவது பேசிக் கொண்டிருந்துவிட்டுத்தான் உள்ளே போவான். ஆனால் அவரால் மட்டும் இதயம் திறந்து நிறையப் பேச முடிவதில்லை. இன்னதென்று சொல்ல முடியாதபடிஅவரை ஏதோ வேதனை அழுத்திக்கொண்டிருந்தது.

காலையில், தயாராயிருக்கும் வெந்நீரில் குளித்துவிட்டு, பூஜை மாடத்தின் முன் போய் உட்கார்ந்து கொண்டால்... அவர் மனம் இறகு முளைத்துப் பறந்து கிராமத்து முருகன் கோவிலை அடைந்துவிடும்.

வாய் மந்திர உச்சாடனம் செய்து கொண்டிருக்கும் போது அவர் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருக்கும்.

பிரமை தெளிந்து அவர் தன்னைச்சுதாரித்துக்கொள்ளும் போது அவருக்கே வேடிக்கையாகத்தான் இருந்தது.

காலைப்பொழுது எப்படியோ போய்விடும். மத்தியானப் பொழுதுதான் அவரை வாட்டி வதைத்தது. பத்துப் பதினோரு மணிக்கெல்லாம் கபாலி ஆபீஸ் போய்விடுவான். மருமகளும் ஏதாவது புத்தகத்தை எடுத்துக் கொண்டு மாடிக்குப் போய்விடுவாள்.

சமையற்காரப் பையன் பற்றுப் பாத்திரங்களைஒழித்துப் போட்டுவிட்டு தூங்கப் போய் விடுவான். வேலைக்காரன் சோமு திண்ணையில் தூங்கி வழிந்து கொண்டு இருப்பான்.

அவர் மட்டும் தன்னந்தனியே அந்த விசாலமான அறை நடுவே கட்டிலில் படுத்துக்கொண்டு எதிரே வேல் தாங்கும்

கரமும், வினைதீர்க்கும் புன்னகையுமாய் விளங்கும் குழந்தை முருகனின் அருள் வடிவைப் பார்த்துக் கொண்டிருப்பார்.

விழித்துக் கொண்டிருக்கும் போதே அவர் கண்முன் அந்தப் படம் திடீரென மலறந்து போகும்.

கனவிலே வந்த குழந்தை முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டு, பிஞ்சு விரல்களை நீட்டி, அவருடன் 'டூ' விட்டு விட்டு ஓடும் காட்சி அங்கே தோன்றும்.

மெய் சிலிர்க்க, நெஞ்சு பட படக்க அவர் கண்களைக் கசக்கி விட்டுக் கொள்வார். எதிரே படத்தில் முருகன் சிரிப்பான்.

நாளுக்கு நாள் தன்னுடம்பில் தெம்பு குறைந்து வருவதாக அவருக்குத் தோன்றியது.

''எனக்குத்தான் உடம்பு சரியாயிடுத்தே, ராஜா! ஊரிலே கொண்டு விட்டுடேன்!'' என்று பையனிடம் ஒரு நாள் கூறிப் பார்த்தார்.

''நீ சும்மா இரு அப்பா. உடம்பு இருக்கிற இருப்பிலே...?'' என்று இழுத்துவிட்டுப் போய்விட்டான் பையன்.

''என் மனத்தை யாருமே புரிந்து கொள்ளவில்லை. புரிந்து கொள்ள முடியாது!'' என்று அவருக்குத் தோன்றியது.

இருட்டி ஒரு மணி நேரமாயிருக்கும். எங்கிருந்தோ சங்கொலி கேட்டது.

''என்ன சோமு அது ?'' என்று கேட்டார் ஐயர்.

நிலைப்படியருகே நின்று கொண்டிருந்த சோமு உள்ளே வந்தான்.

''கோடி வீட்டுக் குருக்களய்யா காலமாயிட்டாங்க சாமி. காலையிலேயே போன உசிரு. மூத்த பையன் எங்கோ

வடக்கேயிருந்து வரணுமின்னு இத்தனை நேரம் காத்துக் கிட்டிருந்தாங்க. அவன்வர வழியாயில்லை. இளைய பையன் தான் கருமாதி பண்ணுது. போறங்காலத்திலே மூத்தமவன் பக்கத்திலிருக்கத் கொடுத்து வைக்கணுமில்லீங்க...?''

ஐயர் படத்தைத்தான் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர் முகத்தில் திடீரென ஏதோ கலவரம் பரவிப் படர்ந்தது.

பேசிக்கொண்டே வாசல்புறம் போய்விட்டான்—சோமு.

பாதி ராத்திரியில் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து ஐயர் கேவிக் கேவி அழ ஆரம்பித்து விட்டார்.

விம்மல் ஒலி கேட்டு மாடியிலிருந்து ஓடோடி வந்தான் கபாலி. அவன் பின்னால் அவன் மனைவி, சோமு எல்லோருமே வந்து விட்டனர்.

ஐயர் அவர்கள் வந்ததையே உணராமல் அழுது கொண்டிருந்தார்

''என்ன அப்பா இது...? என்ன நடந்தது அப்பா...?''

கிழவருக்கே தன் நிலை அப்போதுதான் புரிந்தது. கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தார். கபாலியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

''விடிஞ்சதும் என்னைக் கிராமத்துக்குக் கூட்டிண்டு போறயா கபாலி? முருகனைப் பார்த்துட்டு வந்துடேறன்!''

''இந்த உடம்பிலே எதற்கு அப்பா?''—

ஐயர் அவனை முறைத்துப் பார்த்தார். பரிதாபம், சோகம், கோபம் எல்லாமாய்க் குழம்பிக் கொதித்த அந்தப் பார்வையை அவனால் தாங்க முடியவில்லை,

“சரி அப்பா!”— என்று சொல்லி விட்டான் அவன். பொழுது விடிந்தது.

ஆபீஸிற்கு லீவு போட்டு விட்டு அப்பாவை அழைத்துக் கொண்டு கபாலியே கிராமத்துக்குப் புறப்பட்டு விட்டான்.

ஒரு வாரமாய் இருள்மூடிக் கிடந்த கிழவரின் முகத்தில் திடீரென்று ஒரு பிரகாசம் மலர்ந்து விரிந்திருப்பதைக் கபாலி யால் காண முடிந்தது. இந்தப் பிரயாணத்தின் அலுப்பு அவனையே பாதிக்கையில் அவர் வெகு செளகரியமாய் இருப்பது போல் காணப்பட்டார்.

ஊர் வந்து விட்டது.

கோவிலுக்குள் நுழைகையில் கிழவரின் கண்களில் அமா னுஷ்ய ஒளி பரவியது.

“மு... ரு... கா . !”

கபாலிக்கு அந்தக் குரலின் உணர்ச்சியில் மெய் சிலிர்த்தது.

சபேசய்யரின் இடத்தை ஏற்றுக் கொண்டிருந்த இளம் குருக்கள் ஒதுங்கி வழிவிட்டார்.

குழந்தை முருகனுக்கு வெகு அருகில் போய் கிழவர் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தார்.

சுவாசத்தில் அவர் முதுகு உயர்ந்து அமுங்கியது.

முருகனின் கையிலிருந்த மலர் அவர் தலையில் உதிர்ந்தது.

கூப்பிய கரங்கள் பிரியவில்லை. வணங்கிய கிழவர் அப்புறம் எழுந்திருக்கவேயில்லை.

“அப்...பா!” என்ற கபாலியின் அலறல் கோவில் சுவர் களில் முட்டி மோதி எதிரொலிக்கையில் குழந்தை முருகனே கதறினாற் போன்று தான் இருந்தது.

ஐயர் தன் இடம் தேடிக் கொண்டு விட்டார்.

(சுதேசமித்திரன் 11-9-1960)

# நெஞ்சும் நினைவும்

பத்திரிகை ஆசிரியரிடமிருந்து மூன்றாவது நினைவுக் கடிதம் வந்து விட்டது. வழக்கத்தைப் போலல்லாமல் சற்றுக் காரமாகவேயிருந்த அந்தக் கடிதத்தை இரண்டாம் முறை படித்துப் பார்த்தான் மார்க்கண்டேயன்.

"எங்கள் இரண்டு கடிதங்களும் கிடைத்திருக்குமென்று நினைக்கிறேன். இணக்கம் தெரிவித்து ஒருவரி எழுதிப் போடக் கூட உங்களால் இயலவில்லை! எங்களுக்குத் தேவை யானது உங்கள் கதையே தவிர கடிதமல்லவே! ஆகவேதான் மறுபடியும் எழுதுகிறோம். 'மலர்' இன்னும் இருபது நாட் களில் வெளிவர வேண்டும். சித்திரை மலரில் உங்கள் எழுத்து. வண்ணம் சேர்க்குமென்று ஏற்கெனவே நிறைய விளம்பரம் செய்து விட்டோம். எங்கள் விளம்பரத்தைப் பொய்யாக்க மாட்டீர்கள் என்பது எங்கள் நம்பிக்கை. உங்கள் உயரிய சிறு கதையைக் கடிதம் கண்டவுடன் அனுப்பிவைக்க வேண்டு கிறோம். இனியும் தாமதம் செய்து எங்களை இக்கட்டான நிலைக்கு இழுத்து வைக்காதீர்கள்."

அவனுக்கு வேதனையாகத்தான் இருந்தது. வேண்டு மென்றே ஏதோ சோம்பேறித்தனத்தில் ஒன்றும் எழுதாது இருப்பதாகத்தான் ஆசிரியர் நினைக்கிறார். சகஜம்தானே! கேட்டபோதும் கேட்காத போதும் வண்ண வண்ணமாய்ப் பல்வேறு கோணங்களில் கதைகள் எழுதிக் குவித்த அவன் சேர்ந்தாற்போல் மாதக் கணக்காய் மௌனம் சாதித்தால் வேறு எப்படி நினைத்துக் கொள்வார் அவர்!

இலக்கிய உலகில் என்றும் உயிரோட்டமுள்ள சிருஷ்டிகளைப் படைக்கும் சிரஞ்சீவியாகத் திகழவேண்டும் என்பது தான் அவனது இலட்சியம். அந்த நினைப்புடன்தான் அவன் தனக்கு அந்தச் சிரஞ்சீவியின் பெயரைச் சூட்டிக் கொண்டான். அந்தப் பெயர் பொய்க்கவில்லை. 'சாகாத இலக்கியம்' என்று தலைசிறந்த விமர்சகர்களின் பாராட்டைப் பெற்ற பல கதைகளைத் தமிழுக்கு அவன் சிந்தனை தந்திருக்கிறது. எழுதிமுடிந்தபின் தன்னையே வேற்றாளாய் நினைத்துத் தன் படைப்பை அவன் எடைபோடுவதுண்டு. வெற்றியின் மகிழ்ச்சியில் கண்கள் பனித்த நாட்கள்தாம் அதிகம். அந்த மார்க்கண்டேயன் தானா இன்று இப்படியாகிவிட்டான்.

காற்றிலே மேசை மீது கிடந்த தாள்கள் படபடத்தன. மின்விசிறி 'கிர்ர்க்...கிர்ர்க்' என்று கத்தியவாறு சுற்றிக் கொண்டிருந்தது, அவன் சிந்தனையைப் போலவே. இந்த நண்பகலில் ஊரும் உலகமுமே உறங்கி விட்டனவா? ஏன் இந்த அமைதி ?

"சார்...!"

சிந்தனை வயப்பட்டிருந்த மார்க்கண்டேயன் திரும்பினான். சமையல்காரச் சாம்பு தோளில் துண்டுடன் நின்று கொண்டிருந்தார். "டிபன் கொண்டு வரட்டுமா?"

'மணியென்ன ஆகிறது' என்ற நினைப்புடன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான் மார்க்கண்டேயன். மூன்றடிக்கப் பத்து நிமிடங்கள் இருந்தன. இவ்வளவு நேரமாகி விட்டதா?

"கொண்டு வையுங்கள்...!"

சாம்பு உள்ளே போய்விட்டார். வெய்யிலில் தெரு வெறிச்சென்று கிடந்தது. வீடு வெறிச்சென்றிருக்கிறது. மனம் மட்டுமென்ன வாழ்கிறது? வாழ்க்கையே வெறிச்சிட்டுப் போய் விட்டதே, ஏன்...?

இந்த வீடும் இந்தச் சுற்றுப்புறமும் இந்த நெஞ்சும் இப்படியா இருந்தன?

சாம்பு ஒரு தட்டில் பூரியும் ஒரு தட்டில் உருளைக் கிழங்கு மசாலாவும் கொணர்ந்து மேசை மீது வைத்தார்.

அவனுக்குப் பிரியமான டிபன் பூரி மசால்தான். இந்த ஓராண்டுக்கால அனுபவத்தில் சாம்பு அவனுக்கு எதெது பிடிக்கும் என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டிருந் தார். சபரியைப் போல் எத்தனையோ சிரத்தையுடன்தான் அவர் டிபன் தயாரித்துக் கொணர்ந்திருந்தார். ஆயினும் அது அவனுக்கு ருசிக்கவில்லை.

அவன்வாயும் மனமும் மணக்கும் அந்தக்'கைமணம்'அதில் இல்லை. பேருக்கு ஏதோகொறித்துவிட்டு எழுந்துவிட்டான்.

''என்ன எழுந்துட்டேள். சூடாக்கொண்டுவந்திருக்கேன். ரெண்டே ரெண்டு தான்!'' சாம்பு நிஜமான ஆதுரத்துடன் கேட்டார்.

''நீரே சாப்பிட்டுக் கொள்ளும்!''

சாம்புவின் முகம் தொங்கிப் போய் விட்டது. அவன் அதைக் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் மட்டுமென்ன? அவனுக்கே தெளிவுறத் தெரியாத ஒரு பலவீனம் அவனை ஆட்கொண்டு தனக்கு இரையாக்கி விட்டது. அதன் பயன்? அவன் அவனாக இல்லை. இதே பூரி மசாலை அவள் தயாரித்திருந்து, ஆடி நடந்து வந்து அவன் எதிரே சிரிக்கும் மலர்ச் சிலையாய் நின்று கொண்டு தன் தங்கக் கையால் கொஞ்சிக் கொஞ்சிப் பரிமாறிய போது எட்டோ ஒன்பதோ தின்றிருக்கிறான் அவன்.

அந்தக் காட்சியின் நினைவு தோன்றி நெஞ்சம் சுவைக் கையிலேயே அது இன்று பொய்யாகி விட்ட உண்மையின் கொடூரம் அவனை எரித்தது. ''பரிமளம்...!'' என்று நெட்டுயிர்த்தான் அவன்.

கதை யெழுதும் நினைப்பு காற்றில் கரைந்து விட்டது. கனவு வழியும் விழிகளோடு நினைவு வெளியில் பரிமளம்வந்து நிறைந்தாள்.

மலரைப் போல், அதன் மணத்தைப் போல் மென்மை யான என் பரிமளம் எப்படி இவ்வளவு கடின சித்தம் பெற்றாள்? தேனீயைப்போல் என்னைச் சுற்றிச் சுற்றி வரும் அவளால் எப்படி என்னை விட்டுப் பிரிந்திருக்க முடிகிறது? பரிமளம்! உனக்கு என் நினைப்பு வருவதேயில்லையா பரிமளம்!

நினைத்துப் பார்க்கும்போது அவன் சேகரித்திருக்கும் இந்தப் புகழ்மணம் அவள் தந்தது தான் என்று அவனுக்குத் தோன்றியது.

பரிமளம் அவன் வாழ்வில் பங்கு கொள்ள வந்து அவன் கழுத்தில் மாலையிட்டபோது அவன் வெறும் ராமநாதனாகத் தான் இருந்தான். 'மார்க்கண்டேயன்' என்ற பெயரை ஒரு வாரப் பத்திரிகை இரண்டு மூன்று முறை அச்சிட்டு அவனை மகிழ்வித்திருந்தது என்றாலும் அந்தப் பெயர் இப்போது பெற்றிருக்கும் கனமும் மதிப்பும் அப்போது ஏது?

செந்திருவைப் போல் அவள் அவன் வீட்டில் எழில் பரப்பினாள். சிலை போன்ற அவள் ஒயிலை, சிந்தை கவரும் அவள் புன்னகையை, ஆடி நடக்கும் அழகை ரசித்து ரசித்து அவனுள் காவிய நெஞ்சம் மலர்ந்துவிட்டது.

மாலையில் ஆபீஸ்விட்டு வீட்டுக்கு வந்ததும், டிபன் பண்ணிவிட்டு அவளையும் அழைத்துக் கொண்டு மொட்டை மாடியில் போய் உட்கார்ந்து கொள்வான்.

"ஒன்று கேட்கிறேன். கோபித்துக்கொள்ள மாட்டீர் களே?" என்று அவன் மீது மெல்லச் சாய்ந்து கொண்டே கேட்டாள் அவள்.

''கோபமா...? உன்னிடமா.. ? சரி, விஷயத்தைச் சொல்லு!''

''நீங்கள் கதையெல்லாம் எழுதுவீர்களாமே! ஏன் இப்போதெல்லாம் ஒன்றும் எழுதுவதேயில்லை. நமக்குக் கல்யாணமாகி ஆறு மாதம் ஆகிறது. இன்னும் ஒரு கதைகூட நீங்கள் எழுதி நான் பார்க்கவில்லை. கல்யாணம் பண்ணிக் காமல் இருந்திருந்தால் பெரிய எழுத்தாளராக ஆகியிருப்பீர் கள். நான் வந்து கெடுத்து விட்டேன்! இல்லையா?'' அவன் சிரித்தான்.

''கொஞ்ச காலம் 'ரெஸ்ட்' அவ்வளவுதான். இனிமேல் பாரேன்!''

அவளுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. வீட்டின் முன் அறையை ஒழித்துப் பெருக்கி வைத்தாள். கூடத்து மூலையில் கிடந்த நாற்காலியையும் மேசையையும் அங்கே கொண்டு போட்டாள். மேசையில் விரிக்க அழகிய விரிப்பொன்றைத் தானே பின்னினாள்.

அவளுக்கிருந்த அந்த ஆர்வத்தை அவன் ரசித்தான். அவளை மகிழ்விக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான் அவன் அப்போது எழுதினான். எழுதி முடித்தபின் அந்த எழுத்து அவளையும் மகிழ்வித்தது. பிறகு ஆசிரியரை மகிழ்வித்து அச்சேறி பவனி வந்து எத்தனை பேரை மகிழ்விக்க ஆரம்பித்துவிட்டது!

அவனே எதிர்பார்க்காத வளர்ச்சி அது.

ஒவ்வொரு பக்கம் முடிந்ததும் அவள் அவன் உத்தர வின்றியே அதை எடுத்துப் படித்து விடுவாள். அவன் எழுதும் ஒவ்வொரு எழுத்தும் அவளுக்குத் தேனாய் இனிக்கும். அவள் மகிழ்ச்சியும் ஆர்வமும் அவனை இலக்கிய உலகில் ஓர் ஒப்புயர் வற்ற தாரகையாக உயர்த்தி விட்டன.

அவளுக்காக எழுதிய கை, தனக்காக எழுதியது. அப்புறம் வாசகர்களுக்காக எழுதியது. பிறகு எழுத்துக்காக எழுதியது.

பத்து வருடங்கள்! எவ்வளவு இனிய அனுபவங்களைச் சுமந்து கொண்டு இந்தப் பத்து வருடங்களும் ஓடிவிட்டன.

நாட்களின் போக்கிலே பரிமளம் ஒரு சிறப்பு விமர்சகி யாக மாறிவிட்டாள். அவன் எழுதியவை எல்லாவற்றையும் ஒரே போக்கில் புகழ்ந்து கொண்டிருந்த அவள் இப்போது அவன் எழுத்தின் குறையையும் நிறையையும் குறித்தும் பேசக் கற்றுக் கொண்டிருந்தாள்.

சில சமயங்களில் அவனுடன் காரசாரமாக விவாதத்தில் இறங்கி விடுவாள். அவளுடைய வாதத் திறமை அவனை அயர வைத்துவிடும். இத்தகைய ஞானம் இவளுக்கு எப்படி வளர்ந்தது என்று அதிசயித்து நிற்பான்.

''பரிமளம் நீ என் வாழ்க்கையின் பரிமளம்!'' என்றான் அவன் ஒரு நாள். அவள் அப்போது தோட்டத்தில் செடி களுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தாள். பூவாளி யுடன் பச்சைப் பசிய செடிகளுக்கு நடுவே உயிர்ச் சிலையாய் நின்ற அவள் அழகாகத் திரும்பினாள்.

''நீ நட்ட செடிகள் பூத்துக் காய்ச்சாச்சு.''

''நான் தொட்டதெல்லாம் துலங்குமாக்கும்'' என்றான் பெருமையுடன்.

வெளியே மழை பெய்து கொண்டிருந்தது. வீசியடிக்கும் காற்றில் மழைக் கம்பிகள் தாறுமாறாய்த் தறிகெட்டு விழுந்தன. காற்றுடன் கலந்து வந்த சாரலில் மேசைமீதிருந்த தாள்கள் இலேசாக நனைந்தன.

எழுந்து போய்க் கண்ணாடிக் கதவுகளைப் போட்டு விட்டு விளக்கையும் போட்டான். மழை ஓசை சுருதிபோல் வெளியேயிருந்து மெதுவாகக் கேட்டது.

''சாமீ! ''

அறைவாசலில் விளக்குமாறுடன் கிழவி குப்பம்மா நின்று கொண்டிருந்தாள். கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே அறையை விட்டு வெளியே வந்தான், மணி நாலாகி விட்டது. அதனால் தான் குப்பம்மா வந்துவிட்டாள்; நேரம் எப்படித்தான் விரைகிறது!

அவள் இருந்தால் வீடு இப்படியா இருக்கும்?

தெருவைப் பார்த்தாற்போல், வாசல் திண்ணையில் கிடந்த சாய்வு நாற்காலியில் வந்து சாய்ந்து கொண்டான்.

நண்பகலின் சோர்வு கலைந்து தெருவுக்கு விழிப்பு வந்திருந்தது. இலேசாகத் தூறிக்கொண்டிருந்த மழையில் நனைந்து கொண்டே தெருவில் ஜனங்கள் போய் வந்து கொண்டிருந்தார்கள்.

யாரோ ஒரு பெண் மழையில் நனைந்த வாயில் புடவை உடலோடு ஒட்டிக் கொண்டிருக்க, அவன் வீட்டைக் கடந்து சென்றாள்.

மார்க்கண்டேயனுக்கு எரிச்சலாயிருந்தது.

அழகின் புனிதத்தைக் குலைக்கும் ஆபாசக் கவர்ச்சி பற்றிய சிந்தனைதான் பரிமளத்தை அவனிடமிருந்து விரட்டியது. அந்த நிகழ்ச்சிகளை அவன் எப்படி மறக்க முடியும்?

சென்ற ஆண்டு தீபாவளியின்போது 'மன்மதன்' பத்திரிகையின் விசேஷ மலரில் அவன் எழுதிய கதையால் விளைந்த விளைவுதான் அது. தமிழ்நாட்டில் சிறந்த கதாசிரியர்களுக்குள் ஒருவனாக அவன் பிரபலமான பிறகு, புதிய பத்திரிகைகளும் பழைய பத்திரிகைகளும் கடிதத்தின் மேல் கடிதமெழுதி அவனைத் தொந்தரவு செய்யத் தொடங்கின. மறுக்கமுடியாத நிலையில் அவனும் கதையோ

கட்டுரையோ எழுதிக் கொண்டுதான் இருந்தான். எழுத்துக்கே தன் நேரத்தைச் செலவிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட போது அவன் வேலையைக்கூட விட்டு விட்டான்.

அப்போது ஆவணி மாதம். இதுபோல் வானம் பிசுபிசுத்துக் கொண்டிருந்த ஒரு நாள் தான் 'மன்மதன்' பத்திரிகையின் ஆசிரியர் அவனைத் தேடி வந்தார்.

அப்போது மார்க்கண்டேயன் ஓர் ஆங்கில நாவல் படித்துக் கொண்டிருந்தான். பிரசித்தி பெற்ற ஆசிரியர் ஒருவரின் புத்தகம் அது. கதை படிக்கிறோம் என்ற நினைப்பையே மறக்கடித்து, கதாபாத்திரங்களுடன் வாசகனை உறவாடச் செய்யும் சக்தி அந்த எழுத்துக்கு இருந்தது. வரிக்கு வரி வியந்து ரசித்துக் கொண்டிருந்தான் அவன்.

''நமஸ்காரம் ஸார்!''

ஆசிரியரின் குரல் கேட்டுப் புத்தகத்தை மூடிவிட்டு நிமிர்ந்தான்.

''வாருங்கள்!'' 'மன்மதன்' ஆசிரியரை அவன் இதற்கு முன் பார்த்ததில்லை. ஆயினும் வந்திருப்பது ஒரு பத்திரிகை யாசிரியர் தான் என்பதைத் தோற்றத்திலிருந்து தெரிந்து கொண்டிருந்தான் அவன்.

''நான் 'மன்மதன்' பத்திரிகையின் ஆசிரியர். இந்த வருடம் ஆண்டு மலரை தீபாவளியின்போது சிறப்பாக வெளிக் கொண்டுவர நினைத்திருக்கிறோம்.. உங்கள் கதை மலரில் கட்டாயம் இடம் பெற வேண்டும்.''

''நேரமே கிடைப்பதில்லை. மூன்று மலர்களுக்கு எழுத ஒப்புக்கொண்டு விட்டேன்!''

''எங்கள் பத்திரிகை ஆரம்பித்து ஏழு வருடங்கள்தான் ஆகின்றன. இந்த ஆண்டு மலரில் உங்களைப் போன்றவர்

களின் எழுத்துக்கள் இடம்பெற்றுத்தான் எங்கள் வளர்ச்சி ஆரம்பமாக வேண்டும். எப்படியும் நீங்கள் மறுக்காமல் ஒப்புக் கொள்ள வேண்டும்.''

யாரையும் எளிதில் தட்டிப்பேசி அவனுக்குப் பழக்க மில்லை. ஆகவே, ''சரி, பார்க்கிறேன்'' என்றுதான் அவனால் சொல்ல முடிந்தது.

ஆசிரியருக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை.

''ஒரு விஷயம். பத்திரிகையின் முக்கிய நோக்கம், ஆண் பெண் உறவு பற்றிய சிந்தனைகளை வெளியிடுவது. கூடுமானவரை இனக்கிளர்ச்சி பற்றிய கதையாக இருந்தால் நலம்!''

மார்க்கண்டேயன் சிரித்தான்.

''உங்கள் இஷ்டப்படியே எழுதித் தருகிறேன். சரிதானே?''

ஆசிரியருக்காக மட்டும் அவன் அப்படி ஒப்புக் கொள்ள வில்லை. இப்போது அவன் படிக்கும் நாவல் அவன் மனத்தில் ஏற்கெனவே அப்படி ஓர் ஆசையைத் தூண்டிவிட்டிருந்தது. இனக் கவர்ச்சி தான் அந்தக் கதையின் அடிப்படை. தம்முடைய பண்பட்ட நடையால் ஆபாசமாக இல்லாமல் அழகாகக் கதை எழுதியிருந்தார் அந்த ஆங்கில ஆசிரியர், இப்படித் தமிழில் எழுதினால் என்ன?' என்ற சிந்தனை மெல்ல அடிமனத்தில் தலைநீட்டிக் கொண்டிருக்கும்போது தான் 'மன்மதன்' ஆசிரியர் வந்து சேர்ந்தார்.

ஆசிரியர் மகிழ்ச்சியுடன் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார்.

அவர் புறப்பட்டுச் சென்றவுடனேயே அவன் சிந்தனை யும் கதை பின்னப் புறப்பட்டுவிட்டது. சற்று நேரத்துக்

கெல்லாம், உள்ளே தூங்கிக் கொண்டிருந்த பரிமளம் எழுந்து வந்து அவனருகே நின்றாள். அவன் குனிந்து எழுதிக் கொண்டிருந்தான்.

"என்ன கதையோ?..."

"உன் கதை...!" என்றான் அவன்.

"ஐய...!" அவள் தோள்பட்டையைக் குலுக்கிக் கொண்டு போய்விட்டாள்.

அவன் சிரித்துக் கொண்டான்.

'மன்மதன்' மலருக்குக் கதை தயாராயிற்று.

"கதை எங்கே...?" என்று கேட்டாள் பரிமளம்.

"அனுப்பியாச்சு...!" சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த மார்க்கண்டேயன் சாவகாசமாகக் கூறிய பதில் சாட்டையாக அவள் மீது விழுந்தது.

"நான் படிக்கவேயில்லையே..."

"அச்சிலே படிச்சுக்கோ. இது ஒரு புது மாதிரியான கதை. இப்போதே நீ படித்துவிட்டால் உனக்குப் பத்திரிகையிலே படிக்கச் சுவாரஸ்யப்படாது!"

"இப்போ மட்டும் என்ன இப்படி" அவள் குரல் தழுதழுத்து விட்டது.

அவள் இவ்வளவு விபரீதமாக இதை எடுத்துக் கொள்வாள் என்று அவன் நினைக்கவேயில்லை. எழுந்து வந்து அவள் கையைப் பற்றிக் கொண்டான்.

"நீ வித்தியாசமாக நினைச்சுக்காதே. பரிமளம்! இதுவரை எழுதினமாதிரியில்லாமல் புதுமாதிரி எழுதியிருக்கிறேன். பத்திரிகையில் நீ அதைப் படித்து ஆச்சரியப்பட வைக்கணும் என்று தோன்றியது, அதுதான்."

அவன் என்ன சமாதானம் சொல்லியும் அவள் சமாதானமாகவில்லை.

விடிந்தால் தீபாவளி. 'மன்மதன்' மலர் தபாலில் வந்து விட்டது பரிமளம்தான் தபாலை வாங்கிக் கொண்டு வந்தாள். உள்ளே மார்க்கண்டேயன் இல்லை. எங்கோ வெளியில் சென்றிருந்தான்.

"தீபாவளி மலரில் போய் இப்படி ஆபாசமாக அட்டைப் படம் போட்டிருக்கிறார்களே!" என்று நினைத்துக் கொண்டே பக்கங்களைப் புரட்டி மார்க்கண்டேயனின் கதையைப் படிக்கத் தொடங்கினாள்.

"அட்டைப்படம் போட்டது தப்பில்லை. இந்தக் கதையை எப்படி வெளியிட்டார்கள்?" என்று அவளுக்குத் தோன்றியது. மார்க்கண்டேயன்தானா இதை எழுதியது?"

வீட்டை வர்ணிப்பதென்றால் சாக்கடையை வர்ணிப் பார்களா? பெண்ணையோ பெண்மையையோ பற்றி இப்படியா எழுதுவது?

வெட்கமும் வெறுப்பும் கோபமாகக் கிளர்கையில் அவன் வந்து சேர்ந்தான்.

"எவ்வளவு பண்போடு எழுதிக்கொண்டிருந்த உங்களுக்கு இப்படியெல்லாம் எழுத எப்படி மனசு வந்தது?"

"பைத்தியமே பேரும் கெடாது. புகழும் கெடாது. நாளைக்குப் பார், என் கதையின் 'ரியலிச'த்துக்கு எவ்வளவு பாராட்டுக் கடிதம் வருகின்றதென்று?"

அவன் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை என்று அடுத்த நாள் நிரூபணம் ஆகிவிட்டது. இதுவரை அவனது எந்தக் கதைக்கும் இத்தனை கடிதங்கள் வந்தது கிடையாது.

மார்க்கண்டேயனுக்குப் பெருமை பிடிபடவில்லை. கடிதங் களையெல்லாம் கொண்டுபோய்ப் பரிமளத்தின் முன் போட்டான்.

"நான் இதைப் பார்க்கத் தயாரில்லை." என்று சீறி விழுந்தாள் அவள்.

"இத்தனை பேரும் புகழும் தந்திருப்பது இந்தக் கதை தான்!" என்று புகழ்வெறியில் பேசினான் அவன்.

பரிமளத்துக்கு என்னமோ போல் ஆகிவிட்டது. தருணம் கிடைக்கும் பொழுதெல்லாம் அவனிடம் இதுபற்றி அவள் பேசத்தான் செய்தாள். அவன் ஏனோ பிடிகொடுத்தே பேசவில்லை.

அவள் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அவன் எழுதிய அடுத்த கதையில் அவன் குறிப்பிட்ட அந்த ரியலிசம் கட்டு மீறிப் பிரவேசித்தது.

"நீங்கள் ஏன் இப்படி ஆகிவிட்டீர்கள்...?" என்றாள். கதையின் இரண்டு பக்கங்களைப் படித்துக்கொண்டே.

"ரசிகர்கள் விரும்புகிறார்கள், பரிமளம்! ரசிகர்கள் விரும்புகிறார்கள்!"

"நான்தான் உங்கள் முதல் ரசிகை. நான் இதைச் சற்றும் விரும்பவில்லை!"

"அதற்காக?"

"நீங்கள் இப்படி எழுதக் கூடாது!"

"எழுதினால்...?"

"நான் எழுதவிட மாட்டேன்!" அந்த இரண்டு தாள் களும் அவள் கையில் கசங்கிக் கொண்டிருந்தன. அவனுக்குக் குபீரென்று கோபம் வந்து விட்டது.

கை சுழற்றிக் கன்னத்தில் அவன் அறைந்ததில் அவள் பொறி கலங்கிப் போனாள்.

அவளுக்கு நினைவு தெளிந்தபோது அவன் அங்கே இல்லை.

அவன் வீடு திரும்பிய போது அவள் பிரயாணத்துக்குத் தயாராகிக் கொண்டிருந்தாள்.

''பிறந்த வீட்டுக்கா...?'' என்று ஏளனமாக நகைத்தான் அவன்.

அவள் பதில் சொல்லவில்லை. குனிந்துகொண்டே நின்றாள்.

''உனக்குத் திமிர்ஏறித்தான் விட்டது.போ, போய் விடு!?'

அவள் வந்து தன்னிடம் மன்னிப்புக் கேட்பாள் என்று' அவன் எதிர்பார்த்தான். அவள் அவனுக்குத் தோற்ற வளாயில்லை. மௌனமாய்ப் பெட்டியில் துணிகளைத் திணித்துக் கொண்டு நின்றாள். அவனுக்குக் கோபம் அதிகரித்தது.

''நாகூ... நாகூ...!'' என்று இரைந்தான்.

தோளில் கிடந்த துண்டை அரையிலே கட்டிக்கொண்டு ஓடிவந்து நின்றான் வேலைக்காரன் நாகு.

''அம்மாவைத் திருச்சிக்கு ரயிலேற்றி அனுப்பிவிட்டு வா. போய் டாக்ஸி கொண்டு வா!'' என்று இரைந்தான்.

வாசலில் வண்டி வந்து விட்டது.

''போய் வருகிறேன்.''

யாருக்கு வேண்டும் இந்தச் சம்பிரதாயமெல்லாம் அவன் அவளைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

''இனிமேல் இந்த வீட்டில் அவள் எப்படிக்கால் வைக்கிறாள் என்று பார்க்கிறேன்!'' என்று மனத்துள் கறுவினான்.

அதன்பின்... எழுத நினைத்த கதை எழுதவே ஓட வில்லை.

ஒரு நாள், இரண்டு நாள், ஒரு மாதம், இரண்டு மாதம் ..

காலம் வளர வளர, அவளைப் பற்றிய எண்ணங்கள் தாம் வலுத்தன; வேறு எதிலும் நெஞ்சு ஒட்டவில்லை.

'அவள்தான் ஏதோ அசட்டுத்தனமாக நடந்துகொண்டா ளென்றால் நான் அவளை விட மோசமாகத்தான் இருந்திருக் கிறேன்!' என்று நினைத்தான் அவன்.

யாராவது ஒருவர் விட்டுக்கொடுத்துத்தான் ஆகவேண்டும் நானே போய் அவளை அழைத்து வந்தால் என்ன...?

திருச்சிக்கு இரவில் வண்டியிருக்கிறது. போய் அவளை அழைத்து வர வேண்டியதுதான். நான் போய் அழைத்தால் வரமாட்டேன் என்றா சொல்லப் போகிறாள்? அற்பமான பொய்ப் புகழ் மீது ஆசை கொண்டு ஏதோ தவறு செய்து விட்டேன். அவள் நல்லதைத்தான் சொன்னாள். இப்போது இத்தனை கால இடைவெளிக்குப் பின் அது உறைக்கிறது!

சிந்தனை பட்டென்று நின்றது. மேசை அறைக்குள் ளிருந்து அவன் கையில் சிக்கிய 'மன்மதன்' பத்திரிகையின் பழைய தீபாவளி மலர் அவனைப் பார்த்துச் சிரித்தது அட்டைப் படத்தில் அரை நிர்வாணமாய் நீராடும் மங்கை கூட நாணத்தை விட்டு அவனைப் பார்த்து நகைத்தாள்.

'சே! என்ன கோரம்!' என்று இப்போது தோன்றியது.

பத்திரிகையைத் தூர வீசியெறிந்தான்.

"பார்த்து வீசுங்கள்...!" குனிந்து கொண்டிருந்த மார்க் கண்டேயன் குரல் வந்த திக்கில் திரும்பினான். அவன் மாமனார் அறைவாசலில் நின்றார். அவருக்குப் பின்னால், பொலிவிழந்த முகத்துடன் வாடிய உடம்புடன் அவன் மனைவி பரிமளம் ஏக்கத்தின் எழிலுருவாய் நின்றாள்.

''வாருங்கள்''' என்று சொல்லக் கூட அவனுக்கு வாய் எழவில்லை.

"வந்ததிலிருந்து அவளுக்கு உடம்புசரியில்லையாம். நீங்கள் கவலைப் படுவீர்கள் என்று உங்களுக்கு இத்தனை நாட்களாய் ஒன்றுமே எழுதாமல் இருந்து விட்டாளாம். நான் இரண்டு மாசமாய் ஊரில் இல்லை. திங்கட்கிழமைதான் வந்தேன். கோபித்துக் கொண்டேன். ''என்னை அங்கே கொண்டு விட்டுவிடு அப்பா!'' என்று நேற்றுப் பொழுது விடிந்தது முதல் தொண தொணத்து விட்டாள்.''

காரணங்களை அவன் கேட்கத் தயாராக இல்லை.

'மன்மதன்' இதழைத் தூர வீசியெறிந்த நேரத்தில் சொல்லி வைத்தாற்போல அவள்வந்து நின்ற ஒற்றுமை யைத் தான் அவன் எண்ணிக் கொண்டிருந்தான்.

''வா பரிமளம்!''

பரிமளம் வந்து அவனை நமஸ்கரித்து எழுந்தாள். பேச்சு வெளிப்படவில்லை. அவள் உதடுகள் வெறுமனே துடித்தன.

அவனுக்கு அந்தக் காட்சியில் நெஞ்சில் காவியம் மலர்ந்தது.

அவன் நினைத்துக் கொண்டான்.

'என்னை விட்டு அவளால் வாழ முடியாது. அவள் இல்லாமல் என்னால் பரிமளிக்க முடியாது. நெஞ்சும் நினைவும் போல நாங்கள்!'

(கல்கி 21—10—1960)

# அன்பெனும் பெருவெள்ளம்

வெயில் சற்று மங்கி இருக்கிறது. இலேசாகக் காற்று வீசத் தொடங்கி இருக்கிறது.

சலசலத்தோடும் ஆற்று நீரில் கால்களால் அளைந்து கொண்டு, ஆற்றின் நடுவே கிடந்த பாறை மீது உட்கார்ந் திருக்கிறாள் தங்கம்.

தொலைவில் இருந்து "அம்மே.." என்று ஆட்டின் குரல் காற்றில் மிதந்து வருகிறது. குரல் வந்த திக்கில் திரும்பிப் பார்க்கிறாள் தங்கம். ஆட்டு மந்தையிலிருந்து பிரிந்து செங் கான் வீட்டு ஆடு மட்டும் தனியாகப் பனை மேட்டுப் பக்கம் நின்று கொண்டிருக்கிறது. மற்ற ஆடுகள் எல்லாம் கரையை அடுத்த மேய்ச்சல் வெளியில் திரிந்து கொண்டிருக்கின்றன. கரையோரத்து வேப்ப மரக் கிளையில் உட்கார்ந்து சீராமன் அவற்றுக்குக் காவல் காத்துக் கொண்டிருக்கிறான்.

சீராமனைப் பார்த்ததும் அவளுக்குச் சிரிப்பு வந்து விடுகிறது.

"ஏ சீராமா! .. செங்கான் வீட்டு ஆடு மட்டும் தனியா நிக்குது பார்...! அதைப் பத்திக்கிட்டு வா..." என்று கத்து கிறாள்.

குரலைக் கேட்டு அவளைத் திரும்பிப் பார்க்கிறான், சீராமன். அவள் கூறியது அவனுக்குப் புரியாவிட்டாலும் அவள் தன்னைத் தான் கூப்பிடுகிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டிருக்கிறான்.

முகத்தை முன்னே நீட்டித் தலையைச் சொறிந்து அவளைப் பார்த்து அழகு காட்டுகிறான்.

"வெவ்வெவ்வே...!" என்று அவனுக்கு அழகு காட்டிக் கொண்டே, பாவாடையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு தண்ணீரில் இறங்கிக் கரையை நோக்கி நடந்து வருகிறாள் அவள்.

சிராமன் மரத்திலிருந்து தொப்பென்று குதித்தோடிக் கரைக்கு வந்து அவளை வரவேற்கத் தயாராகிறான்.

வேகமாக ஓடி வந்து தங்கம் அவனை நோக்கிக் கையை நீட்டுகிறாள். நீட்டிய அவள் கையைப் பற்றிக் கொண்டு எழுந்து நின்ற சிராமனின் தலையை ஆசையுடன் தடவிக் கொடுக்கிறாள். கீழே கிடந்த கம்பை எடுத்துக் கொண்டு தனியே நிற்கும் ஆட்டை மந்தைக்கு ஓட்டிவரக் கிளம்பு கிறாள். சிராமனும் அவளைத் தொடர்கிறான்.

ஆட்டைப் பிடித்து மந்தையை நோக்கி விரட்டிக் கொண்டு திரும்பும்போது சிராமனின் காலில் முள் குத்தி விடுகிறது.

"முள்ளு குத்திடுச்சா...?" என்று கேட்டுக் கொண்டே அவன் முன் போய் மண்டியிட்டு உட்கார்ந்து, மெதுவாக, அவன் காலில் குத்தியிருந்த கருவேலமுள்ளை எடுத்துத் தூர எறிகிறாள் அவள். சின்னக் குழந்தையைத் தூக்குவதைப் போல அவனை எடுத்துத் தோள்மீது உட்கார்த்திக் கொள் கிறாள். சிராமன் ஜம்மென்று அவள் தலையைப் பிடித்துக் கொண்டு சவாரி செய்கிறான்.

"இது என்னடீ தங்கம்...? எப்பப் பார்த்தாலும் இந்தக் குரங்கைப் பிடிச்சுக்கிட்டுத் திரியறையே! நாளைக்குப் புருஷன் வீட்டுக்குப் போனா, இதையும் கூட்டிக்கிட்டுத்தான் போவையா...?" என்று கேட்கிறாள் அம்மா.

சிராமனின் கன்னத்தில் செல்லமாகத் தட்டிக் கொண்டே, ''நான் எங்கே போனாலும் சிராமனும் எங்கூடத் தான் வரும்! என்னடா சிராமா...?'' என்று தங்கம் கொஞ்சு கிறாள்.

''அளகாத் தான் இருக்கு...!'' என்று தன் தலையில் அடித்துக் கொள்கிறாள் அம்மா.

''அளகாயில்லாட்டி, கண்ணை மூடிக்கிட்டுப் போயேன்!' என்று ஒரு நொடி நொடித்து விட்டு, குரங்கைத் தூக்கிக் கொண்டு குதித்தோடிப் போய் விடுகிறாள் தங்கம்.

ஒருநாள் மாலைப் போதில், மேய்ச்சல் முடித்து ஆடு களை ஓட்டிக் கொண்டு அவள் திரும்பிக் கொண்டிருக்கும் போது, காவிரியாற்றுப் பாலத்தருகே நெற்றியில் காயத் துடன் இந்தக் குரங்கைக் கண்டாள்.

''அடப் பாவமே! எந்தப் பாவியோ கல்லால் அடிச்சுப் போட்டிருக்கான்...'' என்று சொல்லிக் கொண்டே அதன் அருகே போய் நின்றாள்.

அவள் கையிலிருந்த கம்பைப் பார்த்துவிட்டு, அது ஓட முயன்றது.

உடனேயே கையிலிருந்த கம்பைத் தூர வீசி எறிந்தாள். வழியில் களத்து மேட்டு ஆயாவிடம் வாங்கிச் சுருக்குப் பையில் நிரப்பிக் கொண்டிருந்த வேர்க்கடலைகளில் ஒரு பிடி எடுத்து அதன் முன் போட்டாள்.

தாவி வந்து வேர்க் கடலைகளை எடுத்துக் கொண்டு; பல்லால் கடித்துத் தோலை உரித்து அது வேர்க்கடலை தின்னும் அழகை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என் கூட வரயா ? நிறைய வேர்க்கடலை தருவேன், வாளப்பளம் தருவேன்...!''

வேர்க் கடலையைக் கொறித்துக் கொண்டே அவளைப் பார்த்துக் கொண்டிருந்தது அது.

அதன் சின்னக் கண்களும் அது வேர்க்கடலை தின்னும் அழகும்...

''வா... சும்மா வா...!''—என்று கொஞ்சிக் கொண்டே ஒவ்வொரு வேர்க்கடலையாக வழியில் வீசிக் கொண்டே வந்தாள் அவள். குரங்கும் அவள் பின்னால் வீடு வரை வந்து விட்டது.

'ஸ்ரீராமன்' என்று அதற்குப் பெயரிட்டாள் அவள். அன்று அவளுடன் அந்த வீட்டுக்கு வந்து சேர்ந்த அந்தக் குரங்குக்கும் அவளுக்கும் ஏற்பட்ட சிநேகம் வலுவடைந்து, சிராமனை விட்டுப் பிரிய முடியாது என்ற அளவுக்கு அவள் மனத்தில் ஒரு பாச வெறியே இப்போது வளர்ந்து விட்டது.

வாசல் திண்ணையில் மூங்கில் கதவுடன் ஒரு கயிற்றில் கட்டி விடுகிறாள் அதை. இரவு அந்தத் திண்ணை தான் அதற்குப் புகலிடம். பகற் பொழுதில் அதை அவள் கட்டிப் போடுவதில்லை. அவளுடனேயே தான் அது சுற்றிக் கொண் டிருக்கும்.

அவள் தன் பெற்றோருக்கு ஒரே பெண். அந்தச் செல்லத் தினால் சிராமன் மீது அவளுடைய செல்லம் அந்த வீட்டில் செல்லுபடி ஆகிறது.

சிராமனை யாராவது 'அது' என்று சொல்லி விட்டால் அவளுக்குப் படு கோபம் வந்து விடுகிறது.

''அது என்னடா அது...? அனுமார் அம்சம்டா சிராமன்! அது என்ன மரக்கட்டையா...? அதுவாம் அது...!'' என்று பெண் புலியாகச் சீறுகிறாள்.

ஒரு சமயம் அவளுக்குக் காய்ச்சல் வந்து விடுகிறது.

அவளால் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடிய வில்லையே என்ற கவலையை விட சீராமனை மற்றவர்கள் சரியாகச் கவனித்துக் கொள்வார்களா என்ற கவலை தான் அவளுக்கு.

"சீராமனுக்குத் தட்டிலே சோறு கொண்ணாந்து எம் பக்கத்திலே வச்சிரம்மா!"

"எங்கே அதன் வயத்தைக் காயப் போட்டுடுவே னோன்னு பயமா?"—என்று சொல்லிக் கொண்டே, அவள் அம்மா சீராமனுக்கு ஒரு தட்டில் சாதம் கொணர்ந்து அவள் பக்கத்தில் வைக்கிறாள் சீராமன் அந்தச் சாதத்தில் ஒரு பிடி அள்ளி, தங்கத்திடம் நீட்டுகிறது.

தங்கத்திற்குக் கண் கலங்கி விடுகிறது.

"உனக்குத் தான் எம்மேலே எத்தினி ஆசை! நீ சாப்பிடுடா ராஜா...!"

சீராமன், அவளைப் பார்த்துக் கொண்டே தட்டுச் சோற்றைக் காலி செய்து கொண்டிருப்பதைத் தங்கத்தின் தாயார் நிலைப்படியருகில் நின்று கவனித்துக் கொண்டிருக் கிறாள்.

"உறவு முறைக் காரங்க மாதிரியில்லா ஒட்டிப் போச்சு இது...!"

ஒட்டிப் போனது மட்டுமில்லை. தங்கத்தின் பேச்சைப் புரிந்து கொண்டு அவள் ஏவின வேலைகளைச் செய்யவும் கற்றுக் கொண்டு விடுகிறது சீராமன்.

தங்கம் பெரியவளாகி விடுகிறாள்.

இனி அவள் ஆட்டு மந்தையை ஓட்டிக் கொண்டு ஆற்றை அடுத்த மேய்ச்சல் வெளிக்குப் போக முடியாது.

இஷ்டம் போல் ஆற்று நீரில் திளைந்து நீந்திக் குளிக்க முடியாது. சிராமனைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு சந்தைக்குப் போய் வர முடியாது.

இந்தச் சிறை வாழ்க்கையில் நாட்களை எப்படி ஓட்டப் போகிறோம் என்று அவளுக்குப் பெரும் கவலையாகி விடுகிறது. வீட்டுக் கொல்லையில் பெரிய தோப்பு இருக்கிறது. அவர்களுக்குச் சொந்தமான தோப்பு. அவள் அப்பா அதில், மா, தென்னை, வேப்ப மரங்களை வளர்த்து வைத்திருக்கிறார். இப்போதெல்லாம் சிராமனை அழைத்துச் கொண்டு தோப்புக்குப் போய்விடுகிறாள் அவள்.

சிராமன் அவளுக்கு மாங்காய் பறித்துப் போடுகிறான்; இள நீர் பறித்துத் தருகிறான்.

கிளைக்குக் கிளை தாவி, கரணம் அடித்து ஊஞ்சலாடி சர்க்கஸ் விளையாடி, அவளுக்கு வேடிக்கை காட்கிறான். சிராமனின் துணையில், இந்தச் சிறை வாழ்க்கைக் கூட அவளுக்கு இனிமையான நாட்களைத் தந்து விடுகிறது.

சிராமனை விட்டால் அவளுடன் தோழமையுடன் பழகக் கூடியவள் செங்கான் வீட்டு ரங்கம்மை தான். தங்கத்தை விட ஒரு வயது பெரியவள் அவள். எப்போதாவது அவள் வந்து பேசிக் கொண்டிருக்கிறாள்.

"நீ இப்படி இந்தக் குரங்கு கிட்ட உசிரையே வச்சிருக்கியே தங்கம்! நாளைக்கு உனக்குக் கலியாண மாயிட்டா இதை எப்படிப் பிரிஞ்சிருக்கப் போறே?"

தங்கம் கன்னத்தில் கைவைத்துக் கொண்டு யோசனை யில் ஆழ்ந்து விடுகிறாள். கலியாணம் என்பது தவிர்க்க முடியாத பந்தம் என்பதையும், புருஷன் வீட்டுக்குப் போகும் காலத்தில் சிராமனைக் கூட்டிக் கொண்டு போவது முடியாத காரியம் என்பதையும் இப்போதுஅவள் புரிந்து கொண்டிருக் கிறாள்.

"கடவுளே, எனக்குக் கலியாணமே ஆக வேண்டாம்!" என்று வேண்டிக் கொள்கிறாள் அவள்.

அப்படி ஏதாவது ஆகி விட்டால் சீராமனின் கதி...? நினைக்கவே சங்கடமாகத் தான் இருக்கிறது.

ஆயினும் அந்த நாளும் வரத்தான் செய்கிறது.

மாப்பிள்ளைப் பையனுக்குத் தாலுகா அலுவலகத்தில் கடைநிலை ஊழியர் பதவி. பையனுக்கு அப்பா இல்லையாம் அம்மாவும் தங்கையும் அவனுடன் இருக்கிறார்களாம்.

அவளைப் பார்ப்பதற்குப் பையனின் அம்மாவும் தங்கையும் வந்திருக்கிறார்கள். அவர்கள் நாகரிகமாக உடுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் வந்திருந்த போது, அப்பா அம்மாவின் உத்திரவுக்கிணங்கி, சீராமனை விட்டுவிட்டுத் தனியாக அவர்கள் முன் வருகிறாள் அவள்.

சீராமன் திண்ணையில் விளையாடிக் கொண்டிருக்கிறது.

புறப்படும் போது திண்ணையிலிருந்த குரங்கைப் பார்த்து விடுகிறாள் அந்த அம்மாள்.

"இது என்னங்க, குரங்கைக் கட்டிப் போட்டிருக்கீங்க?"

"அது இங்கு தான் வளருது! தங்கத்துக்கு அதும் பேரில உசிரு..."

சொல்லக் கூடாததைச் சொல்லிவிட்டதைப் போல, தங்கத்தின் அம்மா உதட்டைக் கடித்துக் கொள்கிறாள். வந்திருந்த அம்மாளுக்கு முகம் சுருங்கிப் போகிறது.

"எங்க கோபாலுக்கு இதெல்லாம் பிடிக்கவே பிடிக்காது!" என்று சொல்லிவிட்டுப் போகிறாள் அவள்.

அவர்கள் போய் வெகு நேரம் வரை சிராமனை மடிமீது வைத்துக் கொண்டு, நீர்முட்டும் கண்களுடன் உட்கார்ந்திருக்கிறாள் தங்கம்.

''இதப் பாரு தங்கம்! நீ என்ன பச்சப்புள்ளையா? அந்த அம்மா என்ன சொல்லிட்டுப் போனாங்க பாத்தியா...? மனதை மாத்திக்கிட்டுத்தான் ஆவணும்—நீ. இப்படிக் காலத்துக்கும் குரங்கைக் கட்டிக்கிட்டு நிக்க முடியுமா?...'' என்று அம்மா இன்னும் ஏதேதோ பேசிக் கொண்டு போகிறாள். அவளுக்கு அழுகை மடை திறந்து கொண்டு வருகிறது. சிராமன், பரிதாபமாக அவள் அழுவதைப் பார்த்துக் கொண்டு தலையைச் சொறிந்து கொண்டு இருக்கிறது.

கலியாணம் நிச்சயமாகி விடுகிறது.

''எங்க கோபாலுக்கு இதெல்லாம் பிடிக்கவே பிடிக்காது'' என்ற சொற்கள் தங்கத்தைச் சுற்றி சுற்றி இரைகின்றன.

சிராமனை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரிந்து விடத்தான் அவளும் நினைக்கிறாள். ஆனால் முடியவில்லையே!

''கலியாணத்தப்போ, சிராமன் இங்கே இருந்தா நீ அளுது வடிஞ்சுக் கிட்டுத்தான் இருப்பே. அதை நான் ரங்கம்மை வூட்டிலே கொண்டு போய்க் கட்டிப் போட்டு வச்சுடறேன்'' என்கிறாள் அம்மா.

''வேண்டாம்மா! கலியாணத்தும் போதாவது சிராமன் இங்கே இருக்கட்டும்மா...!''

''உனக்கு என்ன சொன்னாலும் புரியாது! நாளைக்கு இதாலே ஏதாச்சும் ஏடாகூடமா ஒரு பேச்சு வரக் கூடாது தங்கம்!...''

''ஆமாம், தங்கம். இதுக்கெல்லாம் மனம் கலங்கினா எப்படி?...'' என்று அவள் தந்தையும் கூறிவிடுகிறார்.

கடைசியில்..

மேளதாளம் முழங்க, கழுத்து நிறைய மாலையுடன் அவள் கோபாலின் கைப்பிடித்த வேளையில், அவளுடைய உயிருக்கு உயிரான சீராமன் அந்தக் காட்சியைப் பார்க்க அந்த வீட்டில் இல்லை.

சீராமன் இல்லா நிலை சங்கடமாக இருந்தாலும், கோபாலின் அழகும் நாகரிகமும் அவளுக்கு இதமாக இருக்கின்றன.

கோபாலின் ஆபீஸிலிருந்து பெரிய பெரிய மனிதர்கள் வருகிறார்கள். ஒரு 'சூட்கேஸை' அவளுக்குத் திருமணப் பரிசாகத் தந்து விட்டுப் போகிறார்கள்.

அவளுடைய துணிமணிகளை அந்த சூட்கேஸில் எடுத்து வைக்கச் சொல்கிறான், அவளுடைய கணவனாகி விட்ட கோபால்.

அவள் அவனைப் பார்த்து மூன்று நாட்களாகி விட்டன.

''சாயந்தரமே நம்ம வீட்டுக்குப் போகப் போறோம் தெரியுமில்லே! ஏழு மணிக்கு ரயில் புறப்படுது!''

அவள் கணவன் அவள் காதருகில் கிசுகிசுக்கிறான்.

'ஊருக்குப் போவதற்குள் சீராமனைப் பார்த்து விட வேண்டும்' என்று அவள் மனது துடிக்கிறது.

உள்ளே போய் அம்மாவிடம் மெதுவாகத் தன் விருப்பத்தை வெளியிடுகிறாள்.

''ரங்கம்மையை அதைத் தோட்டத்துக்கு எடுத்து வரச் சொல்கிறேன், தங்கம். ஆனா, நீ அதைப் பார்த்துட்டு அழுது கிழுது சங்கடம் பண்ணக் கூடாது.''

''சரி மா...'' என்று தங்கம் தலையை ஆட்டுகிறாள்.

தோட்டத்தில் சீராமனைப் பார்ப்பதற்காக அவள் காத்திருந்த கணங்கள் யுகங்களாகத் தோன்றுகின்றன.

சிராமன் வந்து விட்டான்.

ரங்கம்மையின் கையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு ஓடோடி வந்து அவள் மீது தொற்றி ஏறுகிறான். அவள் தலையை ஆசையுடன் பிடித்துக் கொள்கிறான்.

அதன் முகத்தோடு முகம் சேர்த்து அதை அணைத்துக் கொண்டு விம்முகிறாள்.

"சே! புதுப் புடவையெல்லாம் கறையாக்கிடுச்சு பாரு!"- என்கிறாள் ரங்கம்மை.

அவளை எரித்துவிடுவது போலப் பார்க்கிறாள் தங்கம்.

"தங்கம்...தங்கம்...!"

உள்ளிருந்து அழைப்பு வந்துவிட்டது.

"ரங்கம், நீ சிராமனைப் பார்த்துக்கிறயா? .." என்று கெஞ்சுகிறாள்.

"ஆகட்டும் தங்கம்."

சிராமன் அவளை விடமாட்டேன் என்கிறது. அவளிடமிருந்து பிய்த்துத் தான் அதைப் பிரிக்க வேண்டி இருக்கிறது. ரங்கம்மை அதை இழுத்துக் கொண்டு போகிறாள். அது திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே போவது பரிதாபமாக இருக்கிறது.

"தங்கம்...!"

உள்ளிருந்து கோபாலனின் குரல் கேட்கின்றது. கண்ணைத் துடைத்துக் கொண்டு உள்ளே ஓடுகிறாள் அவள்.

புதிய சூழ்நிலையில் முற்றும் புதிய மனிதர்களுக்கு இடையில் அவள் மணவாழ்வு தொடங்குகிறது.

கோபாலுக்கு இன்னும் பத்து நாட்கள் லீவு இருக்கிறதாம்—அவனுடைய அபிமானம், அவன் அவளிடம் ஆசை ஆசையாய்ப் பேசுவது...எல்லாம் இனிமையாக இருக்கின்றன.

ஆயிற்று. அடுத்த வாரம் மறுவீட்டிற்கு ஊர் திரும்பப் போகிறார்கள். அப்போது சிராமனைப் பார்க்கலாம். பார்த்துவிட்டு...? ஊர் திரும்பும் போது அவனை விட்டு விட்டுத்தான் வரவேண்டுமா..?

அவர் தான் மிகவும் பிரியமாக இருக்கிறாரே! அவரிடம் கேட்டுப் பார்த்தால் என்ன? பயமாகத் தான் இருக்கிறது. எப்படியோ துணிச்சலை வரவழைத்துக் கொள்கிறாள்.

"பத்து நாள்லே நீங்க ஆபீஸுக்குப் போயிடுவீங்க. அப்புறம் நான் தனியாத்தான் இருக்கணும்..!"— என்று ஆரம்பிக்கிறாள்.

அவன் சிரிக்கிறான்.

"வேலையை வேணா விட்டுரட்டுமா...?"

"அதுக்குச் சொல்லலீங்க... துணைக்கு..." என்று ஆரம் பித்தவள் தயங்குகிறாள்.

"சொல்லு."

"கோவிச்சுக்க மாட்டீங்களே!"

"சொல்லுன்னா..."

"சிராமனை விட்டுட்டு இருக்கவே தெரியலீங்க எனக்கு. வரும் போது அவனை அளைச்சுக்கிட்டு வந்திரலாமா?"

சிராமன் என்று அவள் யாரைக் குறிப்பிடுகிறாள் என்பது தெரிந்திருந்தும் அவன்வேண்டுமென்றேகேட்கிறான்.

"எந்தச் சிராமன்...?"

"நான் ரொம்ப ஆசையாய் வளர்த்துக்கிட்டு இருந் தேனுங்க. அனுமாரு. அதம் பேரு தான் சிராமன்."

குரங்கு என்று கூடச் சொல்லாமல் 'அனுமாரு' என்று தான் சொல்கிறாள்.

''கூட்டி வந்தா அதை எங்கே வச்சுப்பயாம் ?''

''கொல்லைப்புறக் கொட்டகையிலே வச்சுடலாங்க...!''

அவன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கிறான்.

''என்னங்க...?''

''பெரிய மனுசங்க நாய் வளர்க்கிறாங்க! நாம குரங்கு வளர்ப்போம். சரி தானே!''

''நீங்க ரொம்ப நல்லவருங்க...'' என்று சொல்லும் போதே நாத்தழுதழுக்கிறது அவளுக்கு. உள்ளம் மகிழ்ச்சியில் பூரித்துப் போகிறது.

ஊர் திரும்பும் நாளை அப்போதிருந்தே எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறாள்.

நாட்கள் ரொம்பவும் மெல்ல நகர்கின்றன.

இதோ அவனும் அவளும் ஊருக்கு வந்தாயிற்று.

வாசலில் ஆரத்தி சுற்றி வரவேற்கிறார்கள். உள்ளே போய் அப்பா அம்மாவை வணங்குகிறார்கள்,

அவன் பார்வை திண்ணையில் அலைகிறது.

திண்ணையில் சிராமன் இல்லை.

''சிராமன் எங்கேம்மா...?''

சமையற்கட்டுக்கு அம்மாவுடன் செல்கையில் மெல்லக் கேட்கிறாள்.

அம்மா அவள் தோளைப் பிடித்துக் கொண்டுநிற்கிறாள்.

''என்னம்மா...?''

''நான் என்ன செய்வேன் தங்கம்...? நீ போனதிலிருந்து எது கொடுத்தாலும் சாப்பிட முரண்டு பிடித்து சிராமன் உசிரையே விட்டிடுச்சு! கோவில் மண்டபத்திலே அதுக்குத் தேர் கட்டறாங்க...!''

''அம்மா.. !''

அவளைக் கத்தவிடாமல் கையால் பொத்தி ஆதரவாக அணைத்துக் கொண்டு உள்ளே அழைத்துச் செல்கிறாள் அம்மா.

அம்மாவின் தோளில் சாய்ந்து கொண்டு விம்முகிறாள் தங்கம்.

தூரத்தே சிராமனின் அந்திம ஊர்வலத்துக்குப் பறை கொட்டும் ஓசையும் விம்மி விம்மி ஒலிக்கிறது.

(அமுதசுரபி—1979)

# நியூஸ் முதல் ஜனகணமன வரை

அந்தத் தியேட்டருக்கு அதற்கு முன் அவள் வந்ததே யில்லை. முதன் முதலாக அந்தத் தியேட்டருக்கு வந்திருக் கிறாள். வெய்யிலில் நடந்து வந்த அலுப்புக்கு 'ஏர்கண்டிஷன்' அறைக்குள் கால் வைக்கையில் என்ன பரவசமாய் இருக்கிறது! திரையில் ஏதோ விளம்பரம் ஓடு கிறது. வெளிச்சத்திலிருந்து வந்த கண்களுக்கு முன் உள்ளே ஒரே இருட்டாக இருக்கிறது. அவன் கை ஆதரவாய் அவள் கையைப் பற்றிக் கொள்கிறது.

''மெதுவாய்ப் பார்த்து வா...''

வழிகாட்டியின் டார்ச் ஒளி சுட்டும் வழியில் அவன் அவள் கை பற்றி அழைத்துச் செல்கிறான்.

உடம்பெல்லாம் புல்லரிக்கிறது அவளுக்கு. அவனுக்கும் அப்படித் தான் இருக்குமோ...?

பரவசம் படர்ந்த அவன் முகத்தை இப்போது பார்க்க வேண்டும் போல் இருக்கிறது அவளுக்கு. இருட்டில் பக்கத்தில் அவன் இருப்பதே, அவன் கையைப் பற்றியிருப்பதால் அல்லவா தெரிகிறது!

அவர்களுக்கு முன்னதாக அவர்களுக்காக 'ரிஸர்வ்' செய்யப்பட்ட இடத்தில் ஒளி வட்டம் போய் உட்காருகிறது.

இரண்டாவது வரிசையில் மூன்று பேரை ஜாக்கிரதை யாகக் கடந்து அங்கே போய் உட்காருகிறார்கள்.

அவன் கை சுவாதீனமாக அவள் தோள்மீது புரள்கிறது. அவளுக்கு நெஞ்சு விம்முகிறது!

பயமா...? இல்லை, மகிழ்ச்சியா...?

ஏதோ திகிலாகவும் இருக்கிறது. சொல்லத் தெரியாத மகிழ்ச்சிப் பரபரப்பாகவும் இருக்கிறது.

இருட்டுக்குச் சற்றுப் பழகிவிட்ட கண்களுக்கு, உட்கார்ந் திருக்கும் உருவங்கள் மங்கலாகப் புலனாகின்றன.

திரையில் விளம்பரம் ஓய்ந்து 'நியூஸ்' தொடங்குகிறது.

''சுமீ...''

காதுக்குள் ரகசியமாகக் கிசுகிசுக்கும் அந்தக் குரல் நெஞ்சில் தேனை நிரப்புகிறது!

''ஊ...ம்...?''

''எப்படியிருக்கு ..?''

அவன் எதைக் கேட்கிறான் ..?

அந்தக் குளிர்ச்சியிலும் அவளுக்கு ஏனோ வியர்க்கிறது.

தோளில் புரண்ட அவன் கை மெதுவாய் அவள் தோளை அழுத்துகிறது. அவள் கன்னத்தை மெதுவாக ...மிக மிக மெதுவாக வருடுகிறது!

நரம்பூசி போட்டுக் கொண்டதும் உடம்பெல்லாம் உஷ்ணம் பொங்கிப் பரவுமே, அதைப்போல அவள் உடம்பெல்லாம் உணர்ச்சியின் வெம்மை பொங்குகிறது!

''சு...மீ .!''

''ஊ...ம் ..''

அவன் முகம் அவள் முகத்துடன் இணைகிறது. அவள் கடலாகப் பொங்குகிறாள்...

அந்தப் பரவசத்தில், அதன் புதுமையில்.. அலை அலை யாய், கிண்டு கிண்டாய் எழும்பிய திகில்களெல்லாம் எங்கோ அடியாழத்தில் புதைந்து போய் அவனும் தானும் மட்டும் மிஞ்சி நிற்பது போல...அந்த இனிமை மட்டுமே மிஞ்சி நிற்பதைப் போல இருக்கிறது.

பார்வையில் திரையில் ஓடும் படம் விழுந்தாலும் மனத்தில் வேறு ஒரு படம் தான் தெரிகிறது...!

'ஏ—எஸ்.. டி, எப்: ஜி.எஃப்:

:...எல்.கே.ஜே: எச் ஜே...'

அவள் டைப்ரைட்டிங் அரிச்சுவடி படிக்கிறாள்.

"அவசரப் படக்கூடாது! நிதானமா ஒரே சீரா அடிக்கணும்!"

விரல்களைக் கீ போர்டிலிருந்து எடுக்காமல் முகத்தை உயர்த்தி அவனைப் பார்க்கிறாள்.

' கேரி ஆன்.. !'

அவன் தான் எவ்வளவு அழகாகப் புன்னகை செய்கிறான்!

இது அவனைப் பற்றிய அரிச்சுவடி!

அவனுக்கு வேறு எங்கோ வேலையாம்! இன்ஸ்டிட் யூட்டில் 'பார்ட்டைம்' தான். என்றாலும்...அந்த இன்ஸ்டிட் யூட்டுக்கே அவன்தான் அரசனாகத் திரிகிறான்.

காலையில் ஆறு முதல் ஏழுவரை அவள் நேரம்!

அவள் தெருமுனை தாண்டி மெயின் ரோடில் நுழைகை யில் வேக வேகமாக நடந்து செல்லும் அவன் அவளைக் கடந்து செல்லும்போது அவள்மீது புன்னகை மலர் விழும்!

"குட்மாணிங் ஸார்...!"

"மாணிங்...!"

தலையை இலேசாகச் சாய்த்து அவளுடைய வணக்கத்தை ஏற்றுக் கொண்டு அவன் வேகமாக அவளைக் கடந்து சென்று விடுவான்.

தெரு முனையில் மாடியில் தான் இன்ஸ்டிட்யூட்.

படியேறு முன் அவன் தன்னைத்திரும்பிப் பார்க்கிறானா என்று தெரிந்து கொள்ளும் ஆவலில் அவள் பார்வை அவனைத் துரத்தும் அவள் எதிர்பார்ப்பை அவன் உணர்ந்திருப்பானோ என்னவோ...? படியேறுமுன் அவள் பக்கம் திரும்பி இன்னுமொரு புன்னகை மலரை வீசிவிட்டுத் தான் அந்த முகம் மறையும்!

அப்போது கிடைக்கிற இனிமையில், அவளுக்கு நடப்ப தாகத் தோன்றாது! 'ஜிவ்'வென்று சிறகடித்துக் கொண்டு அவன் பின்னால் பறப்பதைப் போலத்தான் இருக்கும்.

அவன் தான் இப்போது அவளுக்குப் பக்கத்தில், இந்த இருட்டில், அவள் தோள்மீது கையைப் புரள விட்டுக கொண்டு உட்கார்ந்திருக்கிறான்! அவனது புன்னகை தவழும் அழகிய முகம் அவள் முகத்துக்கு வெகு அருகிலே இதோ.. !

"சு.. மீ ..!"

"ஊ . ம்...?"

என்னென்னவோ பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தாள்.. ஒன்றுமே பேசத் தெரியவில்லையே...!

"என்ன, ஒண்ணுமே பேசமாட்டேனென்கிறாய்?"

"நீங்கதான் பேசுங்களேன்...!"—இதைச் சொல்வதற்குள் அவளுக்கு ஏன் மூச்சு இரைக்கிறது?

இன்ஸ்டிட்யூட்டில் அவனுடன் பேச்சுக் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே அவளுக்கு ஏதாவது சந்தேகங் கள் முளைத்துக் கொண்டே இருக்கும்.

''இந்த 'எல்' அப்படியே உட்கார்ந்துடுத்து...ஸார்!''

''தூங்கிப் போயிடுத்தோ என்னமோ...? நீ கொஞ்சம் சுறுசுறுப்பா இருந்தால் அதுவும் சுறுசுறுப்பா இருக்கும்...!''

அவன் வந்து சரி செய்து கொடுப்பான்.

''லைட் டச் போதும். ஒரு எழுத்தை அடிச்சிட்டு இன்னொன்றை அடிக்கறதுக்கு ஆகிற நேரம் ஒரே சீரா இருக்கணும் அம்மா, இந்த மாதிரி!''

ஒரே சீராக இயக்கிக் காண்பிக்கும் அவனது நீண்ட விரல்களைப் பார்த்தவாறே தன் கை விரல்களைச் சொடுக்கிக் கொள்கிறாள் அவள்.

''ஆ ..!'' என்று செல்லமாகச் சிணுங்குகிறாள்.

அவள் கன்னத்தை நிமிண்டிய அவன் பதறி விடுகிறான்.

''லைட் டச்...'' என்று அவள் கிசு கிசுக்கிறாள். இருளில் அவன் பற்கள் தெரியச் சிரிக்கிறான். சுமிக்குச் சூழ்நிலையே மறந்து போகிறது.

அவனுக்கும் தான்!

இவ்வளவு தூரத்துக்கு...

இவ்வளவு நெருக்கத்துக்கு...

இவ்வளவு சீக்கிரத்தில்...!

இன்ஸ்டிட்யூட்டில் இப்பொழுது தான் அவள் 'ஸ்பீட்' பழகுகிறாள். இந்த உறவு மட்டும் அதைவிட ஸ்பீடாக எப்படி வளர்ந்து விட்டது?

அவளே இதை எதிர்பார்க்கவில்லை தான்.

தினமும் காலையில் வரும் வழியில் 'குட்மார்னிங்...'

இன்ஸ்டிட்யூட்டில் சந்தேகங்கள். .. பரீட்சைக்குத் தயாராவதைப் பற்றிய சர்ச்சைகள்...,

புன்னகைகள்...

சின்னச் சின்னக் கிண்டல்கள்...

இவைதாம் அவளுக்கும் அவனுக்கும் இருந்த உறவெல்லாமே!

அவளுடன் அவன் பெர்ஸனலாக ஏதும் பேசியதே இல்லை. அவளுக்கு மட்டும் அவனைப் பற்றி என்ன தெரிந்து விட்டது?

தன்னைப் பற்றி அவன் ஏதாவது பேசமாட்டானா என்ற ஆதங்கத்தில் வேண்டுமென்றே அவன் கவனத்தைக் கவர்கிற மாதிரி உடுத்திக் கொண்டு தலையை அரை குறை யாய்ப் பின்னிக் கொண்டு வந்தாள் ஒரு நாள்!

"என்னடீ இது அலங்கோலம்?'' என்று அம்மா கேட்டாள்.

''ரொம்ப ஃபைனா இருக்குடீ இது உனக்கு!'' என்று தோழிகள் பெருமூச்சு விட்டார்கள்.

அவன் வழக்கம்போல, அவளது 'குட்மார்னிங்'கை ஏற்றுக் கொண்டு "மாணிங்...'' என்று கூறி வழக்கமான அதே புன்னகையை வீசி விட்டுப் போனான்!

அவளுக்குச் சப்பென்று போய் விட்டது.

நடுவில் ஒரு மூன்று நாட்கள் அவள் இன்ஸ்டிட்யூட்டிற்கு வரவில்லை. இருமலும் ஜுரமுமாக இருந்தது.

வீட்டில் முடங்கிக் கிடக்கும் சங்கடத்தை விட—

அவனைப் பார்க்காத சங்கடம்தான் அவளுக்குப் பெரிதாக இருந்தது.

நான்காம் நாள் காலையில் வழக்கத்தை விடச் சீக்கிர மாக எழுந்து குளித்து 'டிரஸ்' செய்து கொண்டாள் அவள்.

வழக்கமாகப் போகும் நேரத்தை விடச் சீக்கிரமாகப் போனால் அவனை வழியில் சந்திக்க முடியாதே!

"ஏண்டி பச்சைத் தண்ணியிலே குளிச்சே? நான்தான் வெந்நீர் போடறேனோல்லியோ...?" என்று அம்மா கூறிய போது அவளுக்கு ஏனோ எரிச்சலாக வந்தது.

"போம்மா; என்னை நோயாளியாப் படுக்க வெச்சுடாதே! எனக்கு இப்போ ஒண்ணுமில்லை..."

மணி ஐந்து நாற்பது.

தினம் அவள் புறப்படுகிற நேரம் இதுதான். கண்ணாடி யில் ஒருமுறை முகம் பார்த்துத் திருப்திப்பட்டுக் கொண்டு செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பினாள்.

உள்ளத்தில் காரணமில்லாத பரபரப்பும் படபடப்பும் அலை மோதுகையில், தெருத் திருப்பத்தில் அவன் நிற்பதைப் பார்த்தபோது வழக்கமாகத்தான் சொல்லும் 'குட்மார்னிங்' சொல்லக்கூட அவளுக்கு மறந்து போய் விட்டது.

"குட்மார்னிங். உடம்பு எப்படி இருக்கு ..?"—அவன் தான் கேட்டான்.

"தேவலை ஆமாம், உடம்பு சரியில்லைன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்...?"

"ரேவதி சொன்னா! இப்போ ஜுரம் இல்லையே...?"

அவள் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தான் அவன்

அவர்தான் எவ்வளவு அழகாக இருக்கிறார்! எவ்வளவு பிரியமாக இருக்கிறார்! எவ்வளவு அன்பாகப் பேசுகிறார்...

அன்று அவன் அவளைத் தாண்டி வேகமாகப் போக வில்லை. அவள் அருகிலேயே தான் நடந்து வந்தான்!

அம்மாவைத் தவிர அவளுக்கு வேறு நாதியில்லை. அவள் அறிந்திருந்ததெல்லாம் அம்மாவின் பாசம் ஒன்றைத் தான்.

இப்போது இந்தப் புதிய உறவில், அவளுக்குப் புதியதாக ஒரு கண் திறந்தாற்போல இருந்தது. எல்லாமே புதுமையாக, எல்லாமே சுவையாக அவனைப் பற்றிய நினைப்பில் கழியும் கணங்கள் பிறந்தன.

அவள் நல்ல அழகுதான். என்றாலும், கடவுள் தன்னைக் கருப்பாகப் படைத்து விட்டானே என்று அவளுக்கு ஒரு மனக்குறை உண்டு. அவன் அவளுக்கு நேர் எதிராக அத்தனை சிவப்பாக இருந்தான்.

அவன் தன்னை ரசிக்கிறானே!

இப்போதெல்லாம் காலையில் அவளைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டு அவளைத் தாண்டிப் போய் விடுவதில்லை அவன். கூடுமானவரை அவன் கூடவேதான் நடந்தான். சமயத்தில், ஏதாவது பேச்சுக் கொடுத்தான்.

ஒரு நாள். இரண்டு இலைகளுடன் கூடிய ஒற்றை ரோஜாவைத் தலையில் செருகிக்கொண்டு வந்திருந்தாள் அவள். அவள் குடியிருந்த வீட்டுத் தோட்டத்தில் பூத்த பூ அது. வீட்டுக்காரப் பாட்டி பெருந்தன்மையுடன் அவளுக்குப் பறித்துக் கொடுத்திருந்தாள்.

அவனுடன் நடக்கையில் தலையிலிருந்து பூ கீழே விழுந்து விட்டதை அவள் கவனிக்கவில்லை. ஆனால் அவன் உடனே கீழே குனிந்து அதை எடுத்து அவள் கையில் கொடுக்கத் தவறவில்லை.

''உன் வீட்டிலே பூத்ததா?''

''ஆமாம்...!''

''அதுதான் இவ்வளவு அழகா இருக்கு...!''

"அப்படீன்னா...?"

அவன் வெறுமே புன்னகை செய்தான். அவன் கூறுவதன் பொருளை அவள் நெஞ்சம் ஆசையுடன் பருகி ஜீரணிக்கை யில் அவளே ஒரு ரோஜாவாக மலர்ந்து போனாள்.

எவ்வளவு நாசூக்காக அவன் அவளை அழகியென்று சொல்லி விட்டான்! அவளுக்குச் சிரிப்பு வந்தது!

இடைவேளை விளக்குகள் பளிச்சென்று எரிந்தன. திடீரென்று அவளுக்கென்னவோ பயமாக இருந்தது. மருட்சி யுடன் சுற்றிலும் பார்வையை ஓடவிட்டாள்.

நல்லவேளை, தெரிந்த முகம் ஏதும் தென்படவில்லை.

பக்கத்து இருக்கையில் இருந்தவர்கள் எழுந்து வெளியே சென்றார்கள்.

"பயப்படாதே!—இந்தத் தியேட்டரில் இந்தக் கிளாஸுக்கு உனக்குத் தெரிஞ்சவா யாரும் வரமாட்டா . !"

"உங்களுக்குத் தெரிஞ்சவா.. ?"

"தெரிஞ்சதா காட்டிக்க மாட்டா!"

"அப்படின்னா...?"

"அப்படித்தான்!"

கர்ண கடூரமான ஏதோ ஒரு பாட்டின் இரைச்சலில் அவர்கள் சௌகரியமாகப் பேசிக் கொள்ள முடிந்தது.

அந்தத் தியேட்டரின் அழகை, இவர்கள் உட்கார்ந் திருக்கும் பால்கனியை, வந்திருந்தவர்களை.. அவள் கண்கள் மருட்சியுடன் அளக்கையில் அவன் அவள் கையில் ஒரு ஐஸ்கிரீம் கப்பைக் கொடுத்தான். விரல்களைத் தாக்கிய குளிர்ச்சியில் அவன் கை விரலின் வெம்மையும் நெருடிற்று.

இந்தத் தியேட்டர்! பக்கத்தில் ராஜாவாக ..அவளது பருவக் கனவுகளின் உருவமாக அவன்...! இனிப்பும் குளிர்ச்சியுமாய் நெஞ்சில் இறங்கும் 'ஐஸ்கிரீம்'...!

அவள் அவனை நன்றிப் பெருக்குடன் பார்த்தாள்.

ஐஸ்கிரீமை முடித்து விட்டு, ஒரு சிகரெட்டைக் கொளுத்தி யோசனையுடன் புகைத்துக் கொண்டிருந்தான் அவன்.

அவளுக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருந்தது. சிகரெட் உடம்பைக் கெடுத்து விடாதோ...?

'என்னை இப்படி ஒரு சுவர்க்கத்துக்கு அழைத்து வந்திருக்கும் இவர், தன் உடம்பைப் பற்றிக் கவலைப் படாமல் இருந்தால் ..?'

"இதோ பாருங்கள்..."

விரலிடுக்கில் கனிந்து கொண்டிருந்த சிகரெட்டின் சாம்பலைத் தட்டிக் கொண்டே அவன் திரும்பினான்.

விளக்குகள் அணைந்து, ஒற்றை விளக்கின் மங்கலொளி யில் திரையில் விளம்பரங்கள் ஓடிக் கொண்டிருந்தன. வெளியே சென்றவர்கள் திரும்பிக் கொண்டிருந்தனர். கசமுசவென்று பேச்சுக் குரல்கள் ஒலி ஓலம் எழுப்பின.

"சிகரெட்டை விட்டு விடுங்கள்."

"அது என் லைப் பார்ட்னர் சுமீ...!"

"அதுதானா?'

"பெர்மனென்ட் லைப் பார்ட்னர் அது!"

—திரையில் படம் ஆரம்பித்து விட்டது கதாநாயகன், கதாநாயகியை ஓடித் துரத்திப் பிடித்து இறுக அணைத்துக் கொள்கிறான். அவன் கை அவள் தோளை அணைக்கிறது!

''போஸ்டரில் இந்தப் போஸைத் தானே பார்த்தோம்...?''

அவன் வாயிலிருந்து வீசும் சிகரெட் நெடி அவளுக்குக் கஷ்டமாக இருக்கிறது. ஆயினும், அந்த அணைப்பும் சீண்டல்களும் விலக்க இயலாத தேவைகளாக இருக்கின்றன.

இரண்டு நாட்களுக்கு முன்பு—

காலையில் வகுப்புக்கு வரும் வழியில் சுவரில் ஒட்டியிருந்த அந்தப் படத்தின் போஸ்டரைச் சுட்டிக் காட்டி, ''இந்தப் படம் பார்த்திருக்கிறாயோ?'' என்று கேட்டான் அவன்.

அவள் உதட்டைப் பிதுக்கினாள்.

''இந்தப் படமென்ன..? சாதாரணமாக எந்தப் படமுமே பார்க்கிறதில்லை ..! என்னை யார் அழைத்துக் கொண்டு போவார்கள்!''

''நான் அழைத்துக் கொண்டு போனால் வருகிறாயா...?''

அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள். என்ன பதில் சொல்வது...?

''நிஜம்மாத் தான் கேட்கிறேன். வியாழக்கிழமை மேட்னிக்கு வர முடியுமா...?''

அவன் விளையாடுகிறானா...? அல்லது உண்மையாகவே அழைக்கிறானா...?

''சுமீ...இதிலென்ன யோசனை? ரொம்ப நல்ல படம். வியாழக்கிழமை மத்தியானம் போகலாம். சரியா...?''

அவள் யோசிக்கத்தான் விரும்பினாள். ஆயினும், அவன் அவ்வளவு சுவாதீனமாகப் பேசுவதை உணர்ந்த பரவசத்தில்,

அவனிடம் மறுத்துக் கூற இயலாத பலவீனத்தில், அவள் கூறுவதை ஒப்புக்கொள்ளும் பாவனையில் தலையாட்டி விட்டாள்.

அன்றைக்கு முழுக்க அவன் முகத்தைப் பார்க்கவே அவளுக்கு என்னவோ போலிருந்தது;

அடுத்த நாள். காலை நேரத்தில்கூட அவளுக்கு வியர்த்தது. சொல்லத் தெரியாத திகில் புகையாய் நெஞ்சைக் கவ்வியது.

"பயமாயிருக்கா...! என் கூட வரவா...?"

"சே! ஒன்றுமில்லை..." என்றுதான் அவளால் சொல்ல முடிந்தது.

அப்புறம்...

அவன் அழகிய முகத்தை நினைத்து நினைத்து, அதன் விளைவாய் எழுந்த ஆசை விளைத்த பரவச எதிர்பார்ப்பின் உரத்தில், ஒரு தைரியத்தை வளர்த்துக் கொண்டு விட்டாள் அவள், அந்த இரண்டு நாட்களில்!

ஒரு சிநேகிதியின் வீட்டுக்குப் போவதாய்ச் சொல்லி விட்டுப் புறப்பட்டு வந்தாயிற்று...!

இதோ அவனருகே இந்தத் தியேட்டரில் படம் பார்த்துக் கொண்டு...!

படம் பார்த்துக் கொண்டா...!

அவர்கள் இருவரும் படத்தை எங்கே பார்த்தார்கள்?

நாளைக்குக் கலியாணமான பிறகு... நிம்மதியாகப் படம் பார்த்துக் கொண்டால் போகிறது!—அப்போது இப்படிப் பயந்து கொண்டோ, சங்கடப்பட்டுக் கொண்டோ வரவேண்டாமே.

அவள் வீட்டிற்கு ஒரு நாலு வீடு தள்ளிக் குடியிருந்த பானுமதியின் கல்யாணம் அவளுக்கு நினைவு வந்தது: அவள் நல்ல அழகி. அவள் அழகுக்கு ஆசைப்பட்டு ஒருவன் அவர்கள் வீட்டாருக்கு எந்தச் செலவும் வைக்காமல் அவளைக் கலியாணம் செய்து கொண்டு போய் விட்டான். அவளைப் போலத் தனக்கும்... 'இப்படிப் பயந்து கொண்டு தியேட்டருக்கு வராமல்...சுதந்திரமாய் யாருக்கும் பயப்படாமல் இவருடன் வருகிற நாளை சீக்கிரமா வரப்பண்ணக் கூடாதோ இவர்...?' என்று நினைத்துக் கொண்டாள் அவள்.

''படம் முடிகிற நேரமாயிடுத்து ...சுமீ...'' என்று அவன் குரல் அவள் காதருகே கொஞ்சிக் கொண்டிருந்தது.

''இப்படியெல்லாம் பயப்படாம, தைரியமா நாம ரெண்டு பேரும் படம் பார்க்க வழி பண்ணக் கூடாதா?''

தன் மனத்தின் தாபத்தையெல்லாம் ரொம்ப சாமர்த்தியமாக வெளியிட்டுக் கொண்டதான நினைப்பில் அவள் தனக்குள் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

''இதிலிருக்கும் சுகமும் அனுபவமும் அப்போது கிடைக்காது சுமி...!''

அவன் கை அவள் இடையைச் சுற்றிக் கொண்டிருந்தது.

''நான் கேட்டது உங்களுக்குப் புரியலையா...?''

''புரியாமலென்ன சுமீ...? சின்னக் குழந்தை மாதிரி பேசறையே...!''

அவளுக்கு அவன் பேச்சுப் புரியவில்லை. ''உங்க அப்பா அம்மாவிடம் சொல்லி நம்ம கலியாணத்தை—எனக்கு வெக்கமா இருக்கு...!''

படம் முடியும் கட்டம் நெருங்கி விட்டதற்கடையாளமாகத் தியேட்டரில் சலசலப்பு எழுந்தது.

அங்கங்கே சிலர் எழுந்து வெளியேறிக் கொண்டிருந்தார்கள். இருந்த இடத்திலேயே எழுந்து நின்றவர்கள் உட்கார்ந்திருந்தவர்களுக்குப் படத்தை மறைத்தார்கள்.

''கலியாணம் வெறும் 'நியூஸென்ஸ்' சுமி! இந்த நேரமும் இந்த அனுபவமும் இப்படி இருக்கிறதாலேதான் 'ஐஸ்கிரீம்' சாப்பிடறமாதிரி இருக்கு! இதைப் போய்க் கணவன் மனைவிங்கற பைத்தியக்காரப் பந்தமாக்கிறதிலே அர்த்தமே கிடையாது. எனக்கு ஒரு நல்ல குட் ப்ரண்ட் நீ—அப்படீன்னு தான் எப்போதும் நினைச்சுப்பேன். அது போறாதா...?''

அவன் எழுந்து நின்றான்.

அப்படியானால்...

அவன் சொன்னவற்றை அவள் மனம் புரிந்து கொள்கையில் அவளுக்கு உடம்பெல்லாமே எரிகிற மாதிரி இருந்தது. ஒன்றுமே நினைத்துப் பார்க்காமல் ஏதோ ஒரு மயக்கத்தில் மகுடி முன் நாகமாக அவள் ஆடியிருக்கிறாள்...!

அவள் ஏமாந்து விட்டாள்...! ஏமாற்றம் என்று எப்படிச் சொல்ல முடியும்...? எந்த உறுதியைப் பற்றிக் கொண்டு அவள் தனியாக வந்தாள்...?

''இவ்வளவு தானா இவர்...?''

இதைத் தெரிந்து கொண்டல்லவா பழகியிருக்க வேண்டும்?

திரையில் படம் முடிந்து தேசியகீதப் பின்னணியுடன் நமது தேசக் கொடி விர் விர்ரென்று பறந்து கொண்டிருந்தது.

பளீச்சென்று எல்லா விளக்குகளும் எரிந்தன.

அவளும் எழுந்துநின்றாள். தியேட்டரில் உள்ளஅத்தனை பேரும் அவளைப் பரிதாபமாகப் பார்க்கிறார்களோ...?

'ஜனகண மன அதி நாயக ஜயஹே—!'

சுமியின் கண்முன் ஒரே இருட்டாகத் தெரிந்தது.

அவள் கனவுகள், ஆசைகள்... பரவசங்கள்...என்ற படம் முடிந்து 'ஜனகணமன' கீதம் ஒலிக்கிறதை அவள் தலை குனிந்து மௌனமாகக் கேட்டாள்.

கண்களில் நீர்த்திரை மறைத்தது.

"வா...!" என்று அவன் குரல் அவளை அழைத்தது.

"இல்லை!... நான் போய்க் கொள்கிறேன்..."— கும்பலோடு கும்பலாக எனினும், தனியாளாக அவள் நடந்தாள்.

(அமுதசுரபி-தீபாவளிமலர் 1972)

# ராமுடு

சென்னையைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆசையெல்லாம் விட்டுப் போய்விட்டது ராமுடுவுக்கு. கண்ணை மூடாமல் நான்கு நாட்களாகப் பெய்த பேய் மழையில், ஊரே நாறிப் போயிருக்கும் இந்த வேளையில் எங்கே போய் எதைப் பார்ப்பது? 'ஹெட் குக்' கிருஷ்ணையர் சென்னையில் அவனை, 'அங்கே கூட்டிக் கொண்டு போகிறேன், இங்கே கூட்டிக் கொண்டு போகிறேன்' என்று ஆசை வார்த்தைகள் கூறி அழைத்து வந்திருந்தார். கல்யாண வீட்டில் அவனைச் சக்கையாகப் பிழிந்து வேலை வாங்கிவிட்டு, "எனக்கு அவசரமாகப் போக வேண்டியிருக்குடா ராமுடு. ரெண்டு நாள் இருந்து ஊரைச் சுத்திப் பார்த்துவிட்டு வா!" என்று கணக்குத் தீர்த்துப் பணத்தைக் கொடுத்துவிட்டு, கல்யாணம் முடிந்த கையோடு திரும்பப் போய்விட்டார் அவர். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போன்ற பிரமிப்புடன் தனக்கு முற்றும் புதிய பட்டணத்துத் தெருக்களில் கைக்காசைச் செலவழித்துக் கொண்டு மழையில் நனைந்து அலைந்ததுதான் மிச்சம். உருப்படியாக ஓர் இடம் பார்க்கவில்லை.

'குறைக் காசும் தீர்ந்து போவதற்குள் ஊருக்குத் திரும்பிவிட வேண்டும்!' என்று நினைத்துக்கொண்டு சாந்தி தியேட்டருக்கு வெளியே பிளாட்பாரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

"ஹை...ராமுடு...!" என்று கத்திக் கொண்டே வந்த ஒரு நாகரிகமான இளைஞன் அவன் கையைப் பற்றிக் கொண்டபோது அவனுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

"நம்ம பாலு...!" என்று அசடு வழியச் சிரித்தான்.

"இங்கே எங்கேடா வந்தே ராமுடு? அதிசயமா இருக்கே!" என்றவன் "மறுபடியும் தூற ஆரம்பிச்சுடுத்து, வா. காரில் உட்கார்ந்து பேசலாம்" என்ற போது ராமுடு வுக்கு என்னவோபோல இருந்தது.

"நான் இன்னிக்கே ஊருக்குப் போகலாம்னு......" என்று இழுத்தான் அவன்.

"என் கல்யாணத்துக்கு வந்துவிட்டுப் போடா" என்று அவனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டுபோய், தள்ளி நிறுத்தியிருந்த கார்க் கதவைத் திறந்து அவனை உள்ளே தள்ளிவிட்டுத்தான் மூச்சு விட்டான்.

சின்ன வயதில் தன்னுடன் தெருப்புழுதியில் சடுகுடு விளையாடிய நீலகண்டன் வீட்டுப் பாலு இப்போது பட்டணத்தில் நல்ல வேலையில் இருக்கிறான் என்று கேள்விப்பட்டிருந்தான் ராமுடு. ஆனாலும், கிருஷ்ணைய ருடன் அவருடைய தூரத்து உறவினர் வீட்டுக் கல்யாண வேலைக்கு எடுபிடி ஆளாய்ச் சென்னைக்கு வந்தபோது பாலச்சந்தரைப் பற்றிய நினைப்பே அவனுக்குத் தோன்ற வில்லை. இயல்பாகவே ராமுடு கொஞ்சம் சங்கோசி. இப்போது இத்தனை பெரிய அந்தஸ்தில் இருக்கும் பாலசந்தர் இந்த ஏழை ராமுடுவை நினைவு வைத்துக் கொண்டிருப்பான் என்று எதிர்பார்க்க முடியுமா?

"கொஞ்சங்கூட நீ மாறவே இல்லைடா ராமுடு! அப்படியேதான் இருக்கே...!"

''நீங்கதான் ரொம்ப மாறிவிட்டீர்கள்'' என்றான் ராமுடு. நீ என்று சொல்வதா, நீங்கள் என்று சொல்வதா என்ற நினைப்பின் முடிவில் மரியாதையாக 'நீங்க' என்றே போட்டு வைத்தான்.

''என்னடா 'நீங்க வாங்க' எல்லாம்? ஃப்ரீயா இருடா இடியட்!'' என்று சொல்லிக் கொண்டே காரை விட்டான் பாலு.

''இப்போ நாம எங்கே போறோம்?'' என்று பரிதாப மாகக் கேட்டான் ராமுடு.

''ஒண்ணும் பயப்படாதே. இப்போ நீ என்கூட என் வீட்டுக்கு வருகிறாய். இன்னும் மூணு நாளிலே எனக்குக் கல்யாணம். இங்கே இல்லை; தஞ்சாவூர்ப் பக்கத்திலே கிராமத்திலே நடக்கிறது. நீ கூட வரப்போகிறாய். கல்யாணம் முடிந்ததும் உன்னை அனுப்பிவைக்கிறேன். முடியாது என்ற பேச்சுக்கெல்லாம் இடம் கிடையாது. நீ என்னோடு வரவேண்டும்.''

''அன்னைக்கு மாதிரியே இப்பவும் இப்படிப் பேசினா எப்படிப் பாலு?''

''ஊரிலே தலைபோகிற வேலை ஒன்றும் உனக்குக் கிடையாதுன்னு எனக்குத் தெரியும். உன்னைப் பார்த்ததிலே எனக்கு எவ்வளவு சந்தோஷம், தெரியுமா? முதலியார் தோப்பிலே நீ மரத்திலே ஏறி மாங்காய் பறிச்சுப் போட, நான் துணியிலே பொறுக்கிப் போட்டுண்டு எடுத்துவர, தோட்டக்காரனுக்கு டிமிக்கி கொடுத்துட்டு ஓடுவோமே, அந்த நாளெல்லாம் இப்போ நினைவு வறதுடா ராமுடு. அப்போ நமக்கு எவ்வளவு சுதந்தரம்! எவ்வளவு சந்தோஷம்!''

பழைய கால நினைவுகளைப் பரவசத்துடன் அவன் கூறுகையில் ராமுடுவுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது.

சினிமாப் பார்ப்பது போல அந்த நாட்களின் இனிய அநுபவங்கள் மனக்கண்முன் தெரிந்தன. அவனுக்கு ஒன்றுமே பேசத் தோன்றவில்லை.

வழியெல்லாம் அவனிடம் அந்நியோந்நியமாக என்ன என்னவோ பேசிக்கொண்டு வந்தான் பாலசந்தர். இவ்வளவு நாட்களுக்குப் பிறகு, வாழ்க்கையில் எவ்வளவோ முன்னேறி விட்ட பிறகும்கூட, அந்த நாளைய நட்பை நினைத்துக் கொண்டு பாலு இப்படிப் பழகுவதைப் பார்க்கும்போது ராமுடுவுக்கு உள்ளமெல்லாம் நெகிழ்ந்து போய்விட்டது.

ஊருக்குப் போய் அவன் சாதிக்கப் போவதுதான் என்ன? கோவில் மடைப் பள்ளியில் சங்கரஐயர் ஏவுகிற வேலையைச் செய்வது, காலையிலும் மாலையிலும் கோவிலில் உள்ள மூலஸ்தானத்தைத் தவிர மற்றச் சந்நிதிகளில் விளக்குகளுக்கு எண்ணெய் விட்டு ஏற்றிவைப்பது, கோவில் கிணற்றிலிருந்து வக்கீல் மாமா வீட்டுக்கு ஐந்தாறு நடை தண்ணீர் எடுத்துக் கொண்டு போய் விடுவது, இன்னும் யார் யார் என்ன என்ன வேலை சொன்னாலும் தட்டாமல் செய்வது, பாடசாலைச் சத்திரத்தில் படிக்கும் பிள்ளைகளுக்குப் பரிமாறிவிட்டு மிஞ்சியிருப்பதை ரெங்கையர் போம்போது சாப்பிடுவது....

இவற்றை, என்றைக்கு ஊருக்குப் போனாலும் தொடர்ந்து செய்யலாமே!

'பாலுவுடன் அவன் கல்யாணத்துக்குப் போய்விட்டு. அவன் எப்போது அனுப்புகிறானோ அப்போது ஊருக்குப் போய்க் கொண்டால் போகிறது' என்று தீர்மானித்துக் கொண்டான் ராமுடு.

அடையாற்றில் இருந்த தன் வீட்டுக்கு அவனை அழைத்துச் சென்றான் பாலு. தன் அம்மா அப்பா எல்லாரிடமும் ராமுடு வந்திருப்பதைப் பெருமையுடன்

சொல்லிக் கொண்டான். அவனைத் தவிர அந்த வீட்டில் யாருமே, ராமுடுவைப் பார்த்ததில் எந்தச் சுவாரசியமும் காட்டவில்லை.

''இவன் எங்கடா வந்தான் இங்கே?'' என்று கேட்டு விட்டு, பட்டுப் புடைவை சரசரக்க ஏதோ அவசர காரியம் இருப்பதைப்போல உள்ளே திரும்பிப் போய்விட்டாள் பாலுவின் அம்மா.

அந்த நாளில், ''சித்தே கடைக்குப் போய் முந்திரிப்பருப்பு வாங்கிண்டு வரயா ராமுடு?'' என்று நைச்சியமாகப் பேசியே வேலை வாங்கியதை யெல்லாம் மறந்துவிட்டு, இவன் எதற்கு இங்கேவந்திருக்கிறான் என்பதைப்போல அந்த மாமி நடந்து கொண்டது ராமுடுவுக்குக் கஷ்டமாக இருந்தது.

ராமுடுவைப் பார்த்து ஒரு புன்னகைகூடச் செய்யவில்லை பாலுவின் அப்பா. ''ஓ!'' என்று ஒரு முத்தை உதிர்த்துவிட்டுக் கையிலிருந்த புத்தகத்தில் ஆழ்ந்துவிட்டார் அவர்.

இவற்றையெல்லாம் ஏதும் சட்டை செய்யாமல், தரதர வென்று ராமுடுவை இழுத்துக் கொண்டுபோய் வீடு முழுக்கச் சுற்றிக் காட்டினான் பாலு.

''ராமுடு, எனக்கு வேலை இருக்கும். இங்கே அங்கே சுற்றிக்கொண் டிருப்பேன். உன்னைக் கவனிக்கலை என்று நினைத்துக்கொள்ளாதே. தாராளமாத் தங்கி இரு; என்ன?'' என்று அவன் பரிவுடனும் உண்மையான அன்புடனும் கூறிய போது அதையும் தட்ட முடியவில்லை.

சிவனே என்று அந்தப் பெரிய வீட்டின் வாசல் வராந்தாவில் வந்து உட்கார்ந்து கொண்டான் அவன்.

அன்று இப்படி விட்டேற்றியாக இருந்தவர்கள், பிரயாணத்துக்கு ஏற்பாடு செய்யும்போது மட்டும் ராமுடுவின் சேவையைப் பயன் படுத்திக் கொள்ளத் தவறவில்லை.

''நம்ம ராமுடு வந்திருக்கானே, அவன்கிட்டே இந்த வேலையை ஒப்படையுங்கோ. நறுக்குத் தறிச்சாற்போல் கட்டி எடுத்து வச்சுடுவான்'' என்று பாலுவின் அம்மா கூறியபோது அந்தப் புகழுரையில் அவன் மகிழ்ந்து போய்விடவில்லை. பிறர் இடும் வேலையைச் செய்வது அவன் உடன்பிறந்த குணமாதலால், வரிந்து கட்டிக்கொண்டு பிரயாண ஏற்பாடு களை முன்னின்று கவனிக்கத் தொடங்கினான் அவன்.

பேச்சுத் துணைக்குக்கூட ஆள் இல்லாமல் முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைவிட, இப்படி ஏதாவது வேலையில் ஈடுபடுவது அவனுக்குப் பாந்தமாக இருந்தது.

''என்னம்மா இது? ராமுடு இப்போ மாப்பிள்ளைத் தோழனாக்கும்! அவனைப் போய் வேலை வாங்கறயே?'' என்று பாதி விளையாட்டாகவும் பாதி நிஜமான ஆதுரத் துடனும் பாலு கூறியபோது முன்னைவிட அதிக உற்சாகத்துடன் அந்த வேலைகளில் ஈடுபட்டான் அவன். ஆனைப் பசிக்குச் சோளப்பொரியாய், அவனுக்கு ஓர் இரண்டு மணிநேரங்கூட ஈடுகொடுக்க முடியவில்லை இந்த வேலைகள்.

அதன் பிறகுதான் நேரத்தைக் கொல்வது பிரச்னையாக மாறிற்று அவனுக்கு.

பிரயாணத்தின்போது பாலுவைச் சுற்றி அவனை யொத்த நான்கைந்து நண்பர்கள் எப்போதும் கூடவே இருந்தார்கள். அவர்களுடைய பேச்சுக்களில் அவன் எப்படிக் கலந்து கொள்வது? ஏதாவது வேலை ஏவுகிறதாய் இருந்தாலன்றிப் பாலுவின் வீட்டார் அவனிடம் பேசுவதே இல்லை.

என்ன காரணத்தினாலோ தன்னுடைய நண்பர்களிடம் ராமுடுவைப் பாலு அறிமுகப்படுத்தவே இல்லை. ஆங்கிலத்திலும் தமிழிலும் என்ன என்னவோ 'ஜோக்'

அடித்துக்கொண்டும், கைகளைத் தட்டிப் பாடிக்கொண்டும் ரெயிலையே விலைக்கு வாங்கிவிட்ட சுதந்தரத்துடன் அவர்கள் கூத்தடித்துக் கொண்டிருந்தார்கள். ஏதோ வேடிக்கை பார்ப்பதைப்போல அவர்களைப் பார்த்தவாறு ஜன்னலோரம் உட்கார்ந்திருந்தான் அவன்.

இந்த உற்சாகம், கேளிக்கை இவற்றில் எல்லாம் இந்தப் புதிய நபர்களைவிடத் தனக்குத்தான் அதிக உரிமை இருப்பது போலவும், ஆயினும் அது தன்னிடமிருந்து பறிக்கப்பட்டுப் பாலுவின் இந்தப் புதிய நண்பர்களிடையே பரிமாறப்பட்டு விட்டதைப் போலவும் அவனுக்குத் தோன்றியது.

பாலுவை நாயகனாக வைத்து அவனைச்சுற்றி அவர்கள் கொட்டமடித்துக்கொண்டிருந்தார்கள். ராமுடுவுக்கு அங்கே இடம் இல்லை. இந்தக் கல்யாண கோஷ்டியில் இப்போது அவன் ஒருவன்தான் தனித்திருக்கிறான். குழந்தைகள் முதல் பெரியவர்வரை அவரவருக்கு ஏற்றபடி ஒரு நட்பும் சூழலும் இருந்தன. ஆனால் அவனுக்கு ..?

தஞ்சாவூர் ரெயிலடிக்குப் பெண் வீட்டார் இரண்டு கார்கள் கொண்டுவந்திருந்தார்கள். இரண்டு காரிலும் எல்லாரும் ஏறிக்கொண்டு விட்டார்கள். ராமுடுவை யாரும் கூப்பிடவில்லை. டிக்கியில் சாமான்களை எடுத்து வைப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தான் அவன். காரில் தனக்கு இடமில்லை என்பதைக் கவனித்துவிட்டு, கையைப் பிசைந்து கொண்டு வெளியே நின்றான்.

''சாமான்களையெல்லாம் ஏத்தியாச்சா?'' என்று ஒரு காருக்குள்ளிருந்து மாமியின் குரல் வெளிப்பட்டது.

''ஆச்சு மாமி!'' என்று எதிர்க்குரல் கொடுத்தான் ராமுடு.

நண்பர்களுடன் காரில் உட்கார்ந்திருந்த பாலு அவனைக் கவனித்து விட்டான்.

"டேய், ஏறி உட்காருடா. நீ பாட்டுக்கு வெளியே நின்றால் எப்படி?''

கார்க் கதவைத் திறந்து அவனை எப்படியோ உள்ளே ஏறவைத்து விட்டான் அவன். அவர்களை நெருக்கிக் கொண்டு உட்காருவது ராமுடுவுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது.

வேறு வழி?

கல்யாண வேலைக்காக எத்தனையோ இடங்களுக்குப் போயிருக்கிறான் அவன். அந்தச் சூழலும் வேலையும் அவனுக்கு உரிமையும் சலுகையும் அளித்திருந்தன. இப்படி ஓர் அந்நிய உணர்வு அவனை எப்போதும் வதைத்ததில்லை. இசைகேடாக வந்து மாட்டிக்கொண்டு விட்ட உணர்வில் அவன் தவித்தான்.

நல்ல வேளையாக, ஊரிலிருந்து சத்திரத்து ரெங்கையர் அந்தக் கல்யாணத்துக்கு வந்து சேர்ந்தாரோ, அவன் பிழைத்தானோ?

''நீ எப்படிடா இங்கே வந்து சேர்ந்தே?'' என்று விசாரித்தவரிடம் அவன் நடந்ததை எல்லாம் கூறிவைத்தான் யாரிடமும் ஒட்டி உறவாட முடியாமல் தான் தவிக்கும் அவலத்தை அவரிடம் மனம் விட்டு அவனால் கூற முடிந்தது.

அவர் சிரித்தார்,

"நீ சின்னப் பையண்டா ராமு. உனக்கு இன்னும் பக்குவம் வரல்லை. நீலகண்டனும் நானும் ஒரு முறையிலே அண்ணா தம்பியாக்கும்! அவன் என்கிட்டே எப்படி நடந்துக்கறான் பார்த்தயோ? வா என்று ஒரு சொல்லை உதிர்த்ததோடு சரி. இதையெல்லாம் மனசிலே போட்டுக்கப் படாது!''

ரெங்கையரின் பேச்சு அவனுக்கு இதமாக இருந்தது. ஆயினும், இந்தக் கல்யாணத்துக்குத் தான் வந்தது அநா வ

சியம் என்று மட்டும் அவனுக்குத் தோன்றிக் கொண்டே இருந்தது. சிற்றுண்டி காபி சாப்பிடக்கூட அவனை யாரும் அழைக்கவில்லை. பாலுவைச் சொல்லிக் குற்றம் இல்லை. அவனை அவன் நண்பர்கள் எங்கே நகர விட்டார்கள்?

'ரெங்கையர் மட்டும் வந்திராவிட்டால்?' என்று நினைத்தபோது அவனுக்கு வேதனையாக இருந்தது.

மாப்பிள்ளை அழைப்பு முடிந்து சாப்பாட்டுக் கடையெல்லாம் முடியும்போது இரவு பன்னிரண்டு மணிக்குமேல் ஆகிவிட்டது. கல்யாண வீட்டுக்கு இரண்டு வீடு தள்ளி, சம்பந்திகளுக்கு வீடு அமர்த்திக் கொடுத்திருந்தார்கள். கல்யாணப் பந்தல் அந்த வீட்டு வாசல்வரை நீண்டிருந்தது.

பந்தலின் ஒரு மூலையில் 'காஸ் லைட்டு' மூச்சு விட்டுக் கொண்டு விழித்திருந்தது. அதற்குப் பக்கத்தில் ஒரு கும்பல் சீட்டாடிக் கொண்டிருந்தது. ரெங்கையர் அந்தச் சீட்டுக் கச்சேரியில் கலந்து கொண்டு விட்டார். உள்ளே கூடத்தில் பெண்கள் கூட்டம் கால்மாடு தலைமாடாய்ப் படுத்துக் கொண்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்தது. மாடியில் பாலுவைத் தூங்கவிடாமல் கோட்டாப் பண்ணிக் கொண்டு அவன் நண்பர்கள் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ராமுடுவுக்கு எங்குமே ஒட்டவில்லை. பேசாமல், பந்தலின் கீழே கிடத்தியிருந்த ஊஞ்சல் பலகையின் மீது துண்டை விரித்துப் படுத்துக் கொண்டு விட்டான். பிரயாணக் களைப்பும் உண்ட மயக்கமுமாய் அவனுக்குக் கண்ணைச் சுழற்றிக் கொண்டு வந்தது. ஆனந்தமாகக் குறட்டை விட்டுக்கொண்டு தூங்க ஆரம்பித்தான் அவன்.

எவ்வளவு நேரம் அப்படித் தூங்கினானோ?

"ராமுடு . . ராமுடு!" என்று ரெங்கையர் அவனைத் தட்டி எழுப்பியதில் தூக்கம் கலைந்து போய் எழுந்து

உட்கார்ந்து கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டு மிரள மிரள விழித்தான். ரெங்கையரும், அவன் பக்கத்தில் பாலுவின் இரண்டு நண்பர்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

"கண்ணைத் துடைச்சுண்டு சீக்கிரம் எழுந்து வா ராமுடு!"

"என்ன மாமா?"

"கல்யாணப் பொண்ணுக்குத் தேள் கொட்டிடுத்து! இந்த ஊரிலே உள்ள ஒரே டாக்டரும் இன்று ஊரில் இல்லையாம். விடிந்தால் முகூர்த்தம்! எப்படி நடக்கப் போகிறதோ? கொஞ்சம் சீக்கிரம் வாயேன்!"

ராமுடுவுக்கு தூக்கி வாரிப் போட்டது. எழுந்து துண்டை உதறிப் போட்டுக் கொண்டான். பந்தலின் கிழக்கு மூலையில் இருந்த வாளித் தண்ணீரில் முகம், கை கால்களை அலம்பிக் கொண்டான்.

"இரண்டு கட்டை விளக்குமாற்றுக் குச்சி வேணுமே!"

"இதோ" என்று யாரோ ஓடினார்கள்.

"வழிவிடுங்கள்!" என்று உரத்த குரலில், உள்ளே கும்பல் கும்பலாக நின்று பேசிக் கொண்டிருந்தவர்களை விலக்கிக் கொண்டு, ராமுடுவை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார் ரெங்கையர்.

"கொஞ்சம் விலகிக்கறேளா?"

கல்யாணப் பெண் விசும்பிக் கொண்டு வயதான அம்மாள் ஒருத்தியின் மீது சாய்ந்து கொண்டிருந்தாள்.

"எங்கேயம்மா கொட்டித்து?" என்று கேட்டான் ராமுடு, அவள் எதிரில் உட்கார்ந்து கொண்டு,

அந்தப் பெண் தனது வலது கால் கட்டை விரலைத் தொட்டுக் காட்டினாள்.

''இப்படிக் காலை நீட்டிக் கொண்டு உட்காருங்கோ!''

யாரோ கொணர்ந்து கொடுத்த விளக்கு மாற்றுக் குச்சி களைக் கையில் பிடித்துக் கொண்டு, வாய் மந்திர உச்சாடனம் செய்ய, அவன் விஷக்கடியை இறக்கும்போது அவனைச் சுற்றிப் பேச்சரவம் அடங்கி ஒரு மௌனம் கன மாய்க் கவிந்தது.

பத்து நிமிஷங்கூட ஆகி இருக்காது.

விஷத்தை இறக்கிவிட்ட பாவனையாய் அவன் கை யிலிருந்த குச்சிகளை அந்தப் பெண்ணின் கட்டை விரலில் நீவித் தரையில் உதறினான். குச்சிகளைத் தூற எறிந்து விட்டுக் கையைச் சொடுக்கிக் கொண்டான்.

''இப்போ எப்படி இருக்கு?''

அந்தப் பெண் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். முகத்தில் அரும்பியிருந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டே, ''இங்கே மட்டும் இன்னும் லேசாக வலி இருக்கு!'' என்று தேள் கொட்டிய இடத்தைத் தொட்டுக் காண்பித்தாள் அவள்.

''அதுவும் கொஞ்சம் கொஞ்சமாப் போயிடும்! கவலைப் படாதேங்கோ, விஷம் இறங்கியாச்சு.''

கையை மறுபடியும் சொடுக்கிக் கொண்டு அவன் கம்பீர மாக எழுந்து நின்றான்.

"நீங்க வந்திரா விட்டால் என்ன ஆகியிருக்குமோ? உங்களை எப்படிப் பாராட்டறதுன்னே தெரியலை. பாலு வுக்கு நீங்க சிநேகிதராமே?'' என்று கூறிக்கொண்டே அவனை இறுக அணைத்துக் கொண்டான் பாலுவின் ஹிப்பி நண்பன் ஒருவன்.

''தெய்வம் போல வந்திருக்கிறீர்கள். சின்ன வயசா இருக்கு. இல்லைன்னா காலிலே விழுந்து நமஸ்காரம்

பண்ணியிருப்பேன்!'' என்று நாத் தழுதழுக்க, அவன் கையைப் பற்றிக் கொண்டார் பெண்ணைப் பெற்றவர்.

''இந்தக் கல்யாணத்துக்கு நீ எப்படி வந்து சேர்ந்தே பார்த்தாயா?'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார் ரெங்கையர். ராமுடுவுக்கு விஷக்கடி இறக்கும் மந்திரம் தெரியும் என்பதை அவர் தாமே அறிவார்?

தன்னைச் சுற்றி எழுந்த பாராட்டொலிகளை ராமுடுவால் தாங்க முடியவில்லை.

''பாலு எங்கே?'' என்று கேட்டான் அவன்.

''இதோ!'' என்று நண்பன் சுட்டிக் காட்டிய இடத்தில் பேசத் திறனின்றிக் கண்களில் நன்றியொளி பனிச்சிடப் பாலு நின்றுகொண்டிருந்தான்.

''ஒண்ணும் பயப்படாதே. விஷம் இறங்கிடுத்து!'' என்று உற்சாகமாக அவன் கையைப் பற்றிக் கொண்டான் ராமுடு.

(கலைமகள்-ஜூலை 1976)

# பூர்வாசிரமம்

மணி ஐந்தரை ஆகிவிட்டது. இன்னும் அவர் வந்த பாடாயில்லை. வாசலுக்கும் உள்ளுக்கும் அலைந்து அலைந்து வசந்திக்குக் கால்களும் மனமும் களைத்துப் போய் விட்டன.

ஒரு மணி நேர அனுமதிக்கு எழுதிக் கொடுத்து விட்டு, சீக்கிரமே வந்து விடுவதாகச் சொல்லி விட்டுப்போயிருந்தான் சுதாகர். எதிர்பாராதவிதமாய் அவசர வேலை ஏதாவது வந்து சேர்ந்திருந்தால்...?

'ஊகும்! அதெல்லாம் கூடாது. அவர் இன்று சீக்கிரம் வந்து தானாக வேண்டும். வந்து விடுவார்!'—வாழ்வில் அவர்கள் இணைந்தபிறகு முதன் முதலாக இன்றுதான் உல்லாசமாக வெளிக் கிளம்ப நினைத்திருந்தார்கள். அது ஏமாற்றமாக முடிவதை அவள் விரும்பவில்லை.

'எப்படியும் அவர் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவார்...' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டே அவள் மறுபடியும் வாசலுக்கே வந்தபோது அவசரம் அவசர மாகச் சுதாகர் தெருக்கோடியில் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. தன் எண்ணத்தின் வலிமைதான் அவரை அழைத்து வந்து விட்டதாக ஒரு நினைப்பு அவளுக்கு. அந்தப் பெருமையில், நிலைகொள்ளாத மகிழ்ச்சியில், வாசல் என்பதையும் மறந்து வாய் விட்டுச் சிரித்து விட்டாள் அவள்.

"புறப்படலாமா...?" என்று கேட்டுக் கொண்டேதான் வந்தான் அவன், முகத்தில் வழியும் வியர்வையைக் கைக்குட்டையினால் துடைத்தவாறே.

"ஊம்!..." என்று அழகாகத் தலையசைத்தாள் அவள்.

"நீ நாலு மணிக்கே 'மேக்கப்' எல்லாம் முடிச்சுட்டு உட்கார்ந்திருக்கே! நான் அப்படி ஆபீஸிலிருந்து வரமுடியுமா? முகத்தைக் கழுவிண்டு வரலாமா, இல்லை. இப்படியே கிளம்பணுமா...?" என்றான் அவன் சிரித்துக் கொண்டே.

"நான் ஒண்ணும் அப்படியெல்லாம் சொல்லலை" என்றாள் அவள் பொய்க் கோபத்துடன், "சரி. சரி, உள்ளே வாங்கோ."

முகம் கோபமாக நடித்தாலும் நடையின் துள்ளல் உள்ளத்து மகிழ்ச்சியைக் காட்டிக் கொடுத்து விட்டது.

"காப்பி கிடைக்குமா?" என்று கேட்டான் அவன் காலணியைக் கழற்றிக் கொண்டே.

"எல்லாம் கிடைக்கும். சீக்கிரம் போய் முகத்தைக் கழுவிக்கொண்டு வாங்கோ...!"

"உத்தரவு தேவீ......!"

பொய்க்கோபம் போய் விட்டது. அவள் சிரித்துவிட்டாள்.

கேலியும் கிண்டலுமாக அவர்கள் வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளிக் கிளம்பும் போது மணி ஆறாகிவிட்டது.

"மணி ஆறாயிடுத்து!" என்று முகத்தைச் சுளித்தாள் அவள்.

"டிக்கெட் ரிசர்வ் பண்ணியாச்சு! படம் ஆறரைக்குத் தான் ஆரம்பம் ஆகும்! இன்னும் அரை மணி நேரம் இருக் கிறது. சாவகாசமாகப் போகலாம்."

"ஆனாலும் நீங்க ரொம்ப 'ஸ்லோ'..."

"இப்போது தேவலையே. முன்னெல்லாம் நாங்க படத்துக்குக் கிளம்பற போதே ஆறரையாகிவிடும்."—அவன் சிரித்தான்.

அவள் மனத்தில் அவன் பேச்சு ஒரு கொக்கியாக மாட்டிக் கொண்டு நின்றது. அவர் 'நாங்கள்' என்று கூறும் போது தன்னுடன் அவளையும் சேர்த்துத்தான் குறிப்பிடு கிறார். அந்த 'அவள்' வசந்தியில்லை. வசந்திக்கு முன் அவள் ஸ்தானத்தில் அவருடன் இணைந்திருந்த அவள் வேறொருத்தி!—அவர் நினைப்பில் அவள் இன்னும் நிறைந்து தான் இருக்கிறாள்.

வசந்திக்கு என்னவோ போல் இருந்தது.

இன்று அவளுடன் பேசிச் சிரித்துக் கொண்டு நடப்பதைப் போலவே, முன்னால் வேறொருத்தியுடன் எத்தனையோ முறை அவர் நடந்து போயிருக்கிறார் என்ற உண்மையை நினைக்கும்போது, அது அவளுக்கு ஏற்கனவே தெரிந்த விஷயமாக இருந்தும், ஏனோ வேதனையாகத்தான் இருந்தது. அவருடைய இதயத்தில் தனக்கு ஒரு பாகம்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறதோ...? தன்னுடன் நடத்தும் வாழ்க்கை யில் சென்றுபோன நாட்களின் சாயையைக் காணும் இன்பத் தில்தான் அவர் மிதக்கிறாரோ...?

தன் கேள்விக்கு விடை தேடுவதைப் போல் அவள் திரும்பி அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். சலனமில்லாத அமைதியுடன் நிறைந்த மகிழ்வொளியில் அந்த முகம் அவளைக் கனிவோடு பார்த்தது.

"என்ன யோசனை திடீரென்று...?"

"ஒண்ணுமில்லையே...!"

"என்ன பெண்களோ..... ? அவர்களும் அவர்களுடைய மனசும்...!"

"உங்களுக்கு அநேகம் பெண்களுடைய மனசைப் பற்றித் தெரியும்...!" என்று நொடித்தாள் அவள்.

"அதிகமில்லாத போனாலும் இரண்டு பேரைப் பற்றித் தெரியுமே...!"

இதற்கு அவள் ஒன்றும் சொல்லவில்லை. இரண்டு பேர்! ஒன்று அவள். மற்றொன்று அந்த முன்னவள்! சாரதா!

ஒரு நாளா, இரண்டு நாட்களா? இரண்டு ஆண்டுகள் சாரதாவுடன் வாழ்ந்திருக்கிறார் அவர். ஊரே அதிசயிக்கும் படி அத்தனை இலட்சிய தம்பதியாக அவர்கள் வாழ்ந்தார் களாம். சாமண்ணா அப்பாவுடன் இதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததை வசந்தியே கேட்டிருக்கிறாள். அப்படிப் பட்ட வாழ்க்கையையோ அல்லது அதில் அவரோடு இணைந்து நின்ற சாரதாவையோ அவரால் எப்படி மறக்க முடியும் .... ?—எத்தனை நாட்கள் ஆனால்தான் என்ன? அவர் அதை மறக்க வேண்டும் என்று நினைப்பதில்தான் என்ன நியாயம் இருக்கிறது?

எல்லாம் தெரியத்தான் செய்கிறது வசந்தியின் மனத் துக்கு. என்றாலும் சில சமயங்களில் இந்த உறுத்தல் ஏன்...?

திடீரென்று அவளுக்கு ஒரு சந்தேகம். அவளிடம் கொண்டிருந்த அளவு அன்பு இவருக்கு என்னிடம் இருக்குமா? இதை எப்படி அளந்து கணிப்பது......? 'அவளிடம் அவருக்கு இருந்த அன்பைவிட என்னிடம் அதிக மாகத்தான் இருக்க வேண்டும்; இருந்தாக வேண்டும் ..!"— இது அவள் மனம் தனக்குத் தானே கூறிக் கொண்ட முடிவு. அவரிடமே கேட்டு விட்டால் என்ன என்று ஒரு கணம் தோன்றியது அப்புறம் என்னவோ அது உசிதமாகப்பட வில்லை.

"புறப்படும்போது இருந்த குஷியைக் காணோமே!" என்று அவளது மௌனத்தைக் குலைத்தான் அவன்.

"பேசிண்டேவந்தால்தான் குஷீன்னு அர்த்தமாக்கும்...?"

"இல்லை. மௌனமாக வந்தால் மனசு சரியில்லைன்னு அர்த்தம்!"

வசந்தியை மனைவியாக ஏற்றுக்கொண்ட பின்பு இரண்டு பேரும் தனியாக எங்கே நடந்து போயிருக்கிறார்கள்? பின்னே அவருடைய இந்தக் கணிப்பு எந்த அனுபவத்தின் அடிப்படையில் எழுந்தது? சாரதா மௌனமாக வந்தால் அவளுக்கு மனசு சரியில்லை என்று அவர் அனுபவத்தால் உணர்ந்திருக்கிறார். அந்த அனுபவம்தான் இப்போது பேசுகிறது.

முந்திய வாழ்வின் அடிப்படைதான் அவரது இன்றைய எண்ணங்களுக்கு ஆதாரம். வசந்திகூட அவரைப் பொறுத்த வரை சாரதாவின் சாயைதானோ?

தியேட்டர் வந்து விட்டது. அவள் எண்ணங்கள் மேலே தொடராமல் நின்றன.

"படம் இன்னும் ஆரம்பிக்கவில்லை, பார்த்தாயா? என்னமோ பறந்து தவித்தாயே."

அவள் கை மணிக்கட்டைப் பார்த்தாள். மணி சரியாக ஆறரை.

படம் வந்து மூன்று நான்கு வாரங்கள் ஆகி விட்டிருந்த படியால் முதல் வகுப்பில் அவ்வளவாகக் கூட்டம் இல்லை. வசதியாக உட்கார இடம் கிடைத்தது.

எத்தனையோ முறை பார்த்துப் பார்த்து அலுத்துப் போன விளம்பரப் படங்கள் திரையில் ஓடிக்கொண்டிருந்தன.

''இந்த மாதிரி ஒரு நிலை உனக்கு ஏற்படும் என்று இரண்டு வருஷங்களுக்கு முன்னால் நீ நினைத்திருப்பாயா...?'' என்று கேட்டான் அவன், அவளது கையை மெல்ல அழுத்திக் கொண்டே.

அவள் பெருமூச்செறிந்தாள்.

அவர் இன்னும் இரண்டாண்டுகளுக்கு முன்னால்தான இருக்கிறார் என்றாலும் இப்போது அவர் கேட்பது அவளைப் பற்றியல்லவா...? அந்தவரைக்கும் அவளுக்குச் சற்று நிம்மதியாக இருந்தது.

''இல்லை .....!'' என்று முனகினாள்.

''சாமண்ணா வந்து அப்பாவிடம் என்னைப் பற்றிச் சொன்னபோது நீ என்ன நினைத்தாய்...?''

இந்தக் கேள்வியை அவளிடம் கேட்க வேண்டும் என்று சுதாகர் எத்தனையோ முறை நினைத்திருக்கிறான். இப்போதுதான் கேட்க முடிந்திருக்கிறது.

அவள் அவனுக்கு உடனே பதில் சொல்லவில்லை. அவனது கைவிரல்களை நெருடிக் கொண்டு பெருமூச்செறிந்த வண்ணம் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

''என்ன வசந்தி?''

''ஒன்றுமில்லை......!''

''ஒன்றுமில்லையென்றால்...? ஒன்றுமே நினைக்கவில்லையா......?''

அவள் திரும்பி அவன் முகத்தைப் பார்த்தாள். தியேட்டரினுள் பரவியிருந்த அரை இருட்டில் அவன் கண்கள் ஆவலுடன் ஒளிர்வதை அவள் கண்டாள்.

''நான் அதைச் சொல்லவில்லை.''

''பரவாயில்லை. இப்போ அதைச்சொல்லு!''

இருளில் அவள் மெல்ல நகைத்தாள். அவன் கை, அவள் உட்கார்ந்திருந்த நாற்காலியின் பின்னால் நெளிந்து அவள் கேசத்தை வருடிக் கொண்டிருந்தது. அந்த ஸ்பரிச இதத்தில் அவள் ஒரு கணம் கண்ணை மூடிக் கொண்டாள்.

"என்வாழ்க்கை மலருமென்று நான் நினைத்ததேயில்லை. இந்த நாட்டில், நம்முடைய சமூகச் சூழ்நிலையில் எனக்கு அப்படி ஒரு நம்பிக்கை ஏற்பட வழியே இல்லை. அப்பா மட்டும் அடிக்கடி சொல்லிக் கொண்டேயிருப்பார். 'உனக்கு ஒரு விடிவு இல்லாமல் எனக்கு ஒரு முடிவு இல்லை' என்று. அவருடைய நம்பிக்கை பொய்க்காமல் இருக்க நீங்கள் வந்து உதவினீர்கள். சர்மண்ணா வந்து உங்களைப் பற்றிச் சொன்னபோது, லட்சியப் பிடிப்புள்ள ஓர் ஆண் மகனாக உங்களை நினைத்துப் பார்த்தேன். அப்பாவின் நம்பிக்கையின் பலம் உங்களை என்னிடம் அழைத்து வந்தது என்றும் நினைத்துக் கொண்டேன். வேடிக்கை போல் பிரமிக்கத்தக்க ஒரு மாறுதல் எவ்வளவு எளிதாக என்னுடைய வாழ்வில் ஏற்பட்டு விட்டது!"

அவன் அவள் காதருகே குனிந்து மிகவும் மெல்லிய குரலில் கிசுகிசுத்தான்: "உனக்குத் திருப்திதானே . ?"

தன் விரல்களை நெருடிக் கொண்டிருந்த அவன் கையை அழுத்திப் பற்றிக் கொண்டாள் அவள்.

"வெறும் வார்த்தையால் அந்தத் திருப்தியின் அளவைச் சொல்லிவிட முடியுமா ?"

பரவசத்தில் அவள் உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்ததை அவன் கவனித்தான். அவளுடைய இந்தப் பரவசநிலை அவனுக்கு மிகவும் இதமாக இருந்தது.

"உணர்ச்சி வசப்பட்டால் உனக்கு உடம்பு நடுங்குகிறதே!"

இணைத்துப் பேசாமல் அவரால் இருக்க முடிய வில்லையோ? எதற்காக இந்த 'உனக்கும்'...? சாரதாவுக்கும் உணர்ச்சி வசப்பட்டால் உடம்பு நடுங்கும் என்பதைத்தான் அவருடைய இந்த 'உனக்கும்' உணர்த்துகிறது என்று அவளுக்குப் புரியவைக்கவா? இல்லை; சாரதாவைப் போலவே நீயும் இருக்கிறாயே என்று மகிழ்கிறாரா...?''

பக்கத்தில் அமர்ந்திருப்பவர்கள் சூள் கொட்டினார்கள்.

படம் ஆரம்பமாகி விட்டது. இனிப் பேசினால் மற்றவர் களுக்கு இடைஞ்சலாக இருக்கும். அவன் திரையைப் பார்க்கத் தொடங்கினான். அவளும்தான்! ஆயினும்...மனத்தில் தெரியும் திரையில் வேறு காட்சிகளல்லவா தெரிகின்றன!

அவள் வாழ்வின் திருப்புமுனைக்குக் காரண கர்த்தரான சாமண்ணாவின் நெடிய உருவம் அவள் மனத் திரையில் தெரிகிறது.

முறத்தில் அரிசியைக் கொட்டி, கல் பொறுக்கிக் கொண்டு அவள் வீட்டுத் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருக் கிறாள். உள்ளே கூடத்தில் ஊஞ்சல் ஆடும் முனகல் ஒலியோடு சாமண்ணாவும் அப்பாவும் பேசிக்கொண்டிருப்பது அவளுக்குத் தெளிவாகக் கேட்கிறது.

கை முறத்தில் அளைந்து கொண்டிருந்தாலும் மனம் அவர்கள் பேச்சில் லயிக்கிறது.

''மதராஸில் எங்கள் தலைமைக் காரியாலயத்தில் பையன் சூப்பரின்டெண்டென்ட். தங்கமான குணம். நாலைந்து வருஷங்களாக எனக்கு நல்ல பழக்கம். மூணு வருஷமாச்சு அவன் மனைவி இறந்து போய். கல்யாணத் தைப் பற்றின சிந்தனையே இல்லாமல் எதிலேயும் பற்றில்லாத நிலையில் வாழ்ந்திண்டிருக்கான். நான்தான் வசந்திலையைப்பற்றி அவனிடம் சொன்னேன். உங்களுடைய

எண்ணத்தையும் சொன்னேன். பையன் லட்சியப் பிடிப் புள்ளவன். எப்படியும் மசிந்து விடுவான் என்ற என் நம்பிக்கை வீண் போகவில்லை. நாளைக்குப் பையனை அழைத்து வருகிறேன். வசந்திக்கு நல்ல காலம் ஆரம்பித்து விட்டது என்று வைத்துக் கொள்ளுங்களேன்.''

சாமண்ணா கட்டியம் கூறின அந்த நல்ல காலம் வரத் தான் செய்தது. சுதாகர் அவளைப் பார்த்ததும், திருமணம் நடந்ததும் கனவில் நடந்தவை போல் அத்தனை வேகமாக நடந்து விட்டன. சாமண்ணாதான் எல்லோரையும் இயக்கித் துரிதமாகக் காரியங்களை நடத்தி வைத்தார்.

இந்த வாழ்க்கையை எனக்குத் தந்தவர் சாமண்ணா தான் என்று சுதாகர் அடிக்கடி அவளிடம் சொல்வதுண்டு. இரண்டாம் திருமணமே வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்த அவனை, தம் சமத்காரமான பேச்சினால் அவர் எப்படி மசிய வைத்தார் என்று அவன் சொல்லக் கேட்டிருக்கிறாள் அவள்.

''இந்த உலகத்திலே நல்லவனாக உயர்வதற்கு இருக்கிற வசதிகளையும் வாய்ப்பையும் விட, கெட்டவனாக ஆவதற்குத்தான் வசதிகளும் வாய்ப்பும் நிறைய இருக் கின்றன. உன்னை மாதிரி அழகும் இளமையும் உள்ள வாலிபர்கள் ஒரு பெண் துணையில்லாமல் இருப்பது உன் போன்றவர்களுக்கும் சமூகத்துக்குமே, சந்தர்ப்பக் கோளாறால் ஆபத்தாக முடியும்!'' என்று அவர் சொன்னதைச் சிந்தித்துச் சிந்தித்துத்தான் திருமணம் செய்து கொள்ள அவன் சம்மதம் தெரிவித்ததாகச் சுதாகர் சொல்லியிருக்கிறான்.

'ஆயினும், என்னைக் கலியாணம் செய்துகொள்ள அவர் சம்மதித்தது அவருடைய இலட்சிய உள்ளத்தினால் தானே...!'' என்று நினைத்தபோது அவளுக்குப் பெருமை யாக இருந்தது.

அவளும் அவரும் அப்பாவிடம், சென்னைக்குப் புறப்படு முன், விடைபெற வந்திருந்தபோது, கண்களில் பொங்கும் நீருடன் அவர் கூறிய வார்த்தைகள் அவள் நினைவுக்கு வந்தன.

''சுதாகர் உனக்குக் கணவராகக் கிடைத்திருப்பதற்கு நீ எவ்வளவோ புண்ணியம் செய்திருக்க வேண்டும், வசந்தி! என் காலம் முடிவதற்குள் உன்னைக் கைப்பிடிக்க ஒருவன் வருவானா என்றுநான் மனத்தினுள் மறுகிக் கொண்டுதான் இருந்தேன். நான் கற்பனை செய்யாத அளவுக்கு ஓர் உயர்ந்த மனிதர் உனக்குக் கிடைத்திருக்கிறார். அவர் மனம் போல நடந்து உன் வாழ்க்கையையும் அவர் வாழ்க்கையை யும் மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள வேண்டியது உன் பொறுப்பு. சுதாகர், உங்களுக்கு நான் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. நீங்கள் தீர்க்காயுசோடு இருக்க வேணும் அவ்வளவுதான்!''

சொல்லி விட்டுக் குழந்தை போல் அவர் தேம்பியழுத காட்சி அவள் மனத்திரையில் இன்னும் ஆடுகிறது.

திரையில் எதிரே ஓடிக் கொண்டிருந்த படக் காட்சியை இத்தனை நேரமாக அவள் கண்கள் தான் வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தனவே தவிர, அவள் மனம் பழைய நிகழ்ச்சிகளில்தான் மூழ்கிக் கிடந்தது.

ஆனால் அவள் மனத்தையும் ஈர்த்து இழுக்கும் காட்சி யாகத் திரையிலே ஒரு முகம் தெரிந்த போது அவளுக்கு மெய் சிலிர்த்தது. கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு பார்த்தாள்.

கையில் மணமாலையுடன் மகிழ்ச்சி பொங்கும் முகத் துடன் வரும் அந்த நடிகனின் முகம்...! அந்தக் காட்சி...!

சிறுவனும் சிறுமியுமாய் விளையாடிக் கொண்டிருந்த காட்சியின் தொடர்ச்சியாய், அவர்கள் பெரியவர்களாயும் இணைந்து விளையாடுவதைச் சித்திரிக்கும் காட்சி அது.

அவள் மனத்திரையில் மறுபடியும் சலனம்.

அவளுக்கு அப்போது பதினைந்து வயதிருக்கலாம். உலகத்தில் நிகழ்பவற்றுக்கெல்லாம் முழுப் பொருளும் தெரியாது போனாலும் அரைகுறையாக எல்லாவற்றிலும் ஒரு ரசனையும் பிரமிப்பும் பிறக்கிற வயசு அது.

அப்போதுதான் அது நிகழ்ந்தது.

திரையிலே தோன்றிய இதே காட்சி வாழ்வில் ஒரு முறை நிகழ்ந்திருக்கிறது. அப்போது அவள் அம்மா உயிருடன் இருந்தாள். சின்ன மலர் போலச் சிரித்துக்கொண்டு அவள் மணமேடையில் உட்கார்ந்திருக்கிறாள். அவளுக் கருகிலே இந்தப் புதிய நடிகனைப் போன்ற சாயலுடன் அமர்ந்திருந்த விஜயன், அன்று அவள் கழுத்திலே மாலை யிட்டான். கெட்டி மேளம் முழங்கியது. கனவு போல் இன்று தெரிந்தாலும் அந்தக் காட்சி பொய்யல்லவே!

அந்த முகத்தை அவள் சரியாகக்கூடப் பார்க்கவில்லை.

என்றாலும் . ...

கலியாணம் நடந்து விட்டது!

கலியாணமாகி இரண்டு நாட்களுக்கெல்லாம் அவன் புறப்பட்டுப் போய் விட்டான் பெங்களூருக்கு. இரண்டு மாதங்கள் கழித்து நாள் பார்த்துப் பெண்ணை வீட்டுக்கு அழைப்பதாகப் பையனின் பெற்றோர் சொல்லிச் சென்றார் கள். ஆனால் அவர்கள் அவளை அழைக்கும் சந்தர்ப்பம் வரவில்லை!

ஒரு வாரத்திலேயே எங்கோ கார் விபத்தில் விஜயன் இறந்து போன செய்தி அவளைத் தேடிக்கொண்டு வந்து விட்டது.

அது எத்தகைய பயங்கரமான செய்தி என்று அப்போது வசந்திக்குத் தெரியவில்லை. எல்லோரும் வருந்தும்படியான துயரம் நேர்ந்து விட்டது என்ற அளவுக்குத்தான் அது அவள் நெஞ்சில் அப்போது உறுத்தியது. ஆனால் அந்த அதிர்ச்சி யைத் தாங்கும் வலு அவளைப் பெற்றவளுக்கு இல்லை. தன் மகளின் கழுத்தில் ஏறிய தாலிக் கயிறு, அதன் பொருளை அவள் சரியாக உணருமுன்பே, ஒரு வார காலத் திலேயே பறிக்கப்பட்டுவிட்ட இந்தக் கோரத்தை அவளால் சகிக்க முடியவில்லை. செய்தி கேட்டு மயக்கமுற்றுக் கீழே விழுந்தவள் படுத்த படுக்கையாக இரண்டு மாதங்கள் இருந் தாள். அப்புறம் கண்ணை மூடிக் கொண்டாள்!

வசந்தியைக் காப்பாற்றும் முழுப்பொறுப்பும் அவள் தந்தையின் தலையில் விழுந்தது.

அவள் கழுத்தில் தாலியைக் கட்டி விட்டுப் போய் மண்டையைப் போட்டுவிட்டவனுக்காக, வசந்தி வாழ் விழந்து நிற்பது அவருக்கு அர்த்தமற்றதாகப் பட்டது.

பால் வடியும் மகள் முகத்தைப் பார்த்து மறுகினார் அவர். அந்த ஊரில் அவருக்கு நெருங்கிய நண்பர் சாமண்ணா தான். இதயம் திறந்து அவர் அவரிடம்தான் பேசுவார்.

"மண வாழ்க்கை என்றால் என்ன என்று தெரியாத இந்தக் குழந்தையை விதவை என்று எப்படியப்பா கூப்பிடுவது ...? சந்தர்ப்பவசத்தால் ஏற்பட்ட ஒரு விபத்து, இவள் வாழ்வில் நடந்த அந்தக் கலியாணம். அதற்காக இவளை வாழ விடாமல் அடிப்பது எந்த நியாயத்தில் சேர்ந்தது?" என்று அவர் சாமண்ணாவிடம் குமுறுவார்.

மகளுக்குத் தெரியாமல்தான் அவர் பேசியதாக நினைத்துக் கொண்டிருந்தார். ஆனால் வசந்தி தூங்குவது போலக் கண்களை மூடிக் கொண்டு படுத்திருப்பாளே தவிர திண்ணையில் அப்பா பேசுவதைக் காதைத் தீட்டிக் கொண்டு கேட்டுக் கொண்டிருப்பாள். இப்படிக் காலப் போக்கில்தான் வாழ்வின் பயங்கரத்தை அவள் உணர்ந்து கொண்டாள்.

''நீ சொல்வதெல்லாம் சரிதான். ஆனால் உன் பெண்ணைத் துணிந்து மறுமணம் செய்து கொள்ள யார் முன்வருவார்கள்?'' என்று தான் சாமண்ணா எப்போதும் சொல்லுவார்.

அப்படிப்பட்டவர் ஒருநாள் ''வசந்திக்கு நல்ல காலம் வருகிறது!'' என்று சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்தார்.

''கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்பார்கள் அதைப் போல, ஒரு வழியாகச் சுதாகரை மாற்றிவிட்டேன். அவனும் ''அப்படிக் கல்யாணம் செய்து கொள்வதாயிருந் தால் ஓர் இளம் விதவையைத்தான் மணந்து கொள்வதாக இருக்கிறேன்!'' என்று சொன்னான். வசந்தியின் கதையை நான் சொன்ன போது உருகிப் போய்விட்டான். போங்கள்!'' என்று சாமண்ணா அன்று கூறியவை இன்று போலக் காதில் ஒலிக்கின்றன.

அவளுக்காக அப்படி உருகிய சுதாகரைத் திரும்பிப் பார்த்தாள் வசந்தி. பரவியிருந்த மங்கிய ஒளியில் அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருப்பது தெரிந்தது.

''என்ன இது...?'' என்று பதறினாள் அவள்.

''ஒன்றுமில்லை...!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டான்.

''ஏன் அழுகிறீர்கள்...?''—அவன் முகத்தோடு நெருங்கி மெதுவாகக் கேட்டாள்.

''பாவம். கார் விபத்தினால் அவளுடைய அழகிய முகம் விகாரமாகப் போய்விட்டது! அவனே அவள் முகத்தைப் பார்க்கப் பயப்படுகிறானே!''

''என்ன சொல்கிறீர்கள் . ?''

''நீ படத்தைப் பார்க்கவில்லையா . ?''

அப்பொழுதுதான் அவளுக்குப் புரிந்தது. சில கணங்களாக அவள் சுற்றுப்புறங்களையே மறந்து விட்டிருக்கிறாள். படத்தில் கவனம் நிலைக்கவில்லை. கனவு போல் அவள் மன வெளியில் தோன்றிய பூர்வாசிரம நினைவு அவளை அப்படி ஆக்கிவிட்டது. திரையிலே தோன்றிய காட்சி ஒன்றின் விளைவாய்க் கிளர்ந்த நினைவில்.அவள் வாழாத வாழ்வின் தலைவனாய் ஒரு நாள் வந்துநின்று திடீரென்று அவளைச் சுற்றிலும் இருளைப் பரப்பிவிட்டு என்றோ மறைந்து போனவனின் முகம் ஏன் தெரியவேண்டும்?

வாழாத வாழ்க்கையே இப்படி என்றால், வாழ்ந்த வாழ்க்கையின் நினைவு மறக்கக் கூடியதா?

''எங்கே நினைவு அப்படி...?'' என்று கேட்டான் அவன்.

''என்னவோ யோசனை?''

''பெண்களே இப்படித்தானோ அல்லது எனக்கு வாய்ப்பதுதான் இப்படியோ...?'' என்றான் அவன்.

இப்போது அவன் பேச்சு அவளுக்கு வித்தியாசமாகப் படவில்லை. 'பூர்வாசிரம நினைவிலிருந்து துறவிகளே தப்ப முடியாதபோது எல்லாவித ஆசாபாசங்களும் நிறைந்த நம்மால் சென்ற கால வாழ்வை அடியோடு மறப்பது சாத்திய மாகுமா?'' என்று தனக்குத் தானே மனதுக்குள் சமாதானம் கூறிக் கொண்டாள் அவள்.

(கல்கி 13—9—64)

# அன்பின் பரிசு

எதிர் வீட்டு வாசலில் வந்து நின்று பால் வாங்கிக் கொண்டிருந்த பெண்ணைப் பார்த்ததும் கிழவரின் கண்கள் வியப்பினால் அகல விரிந்தன. 'அதே உருவ அமைப்பு; அதே உயரம்; அதே போலக் கண்கள் —இது எப்படிச் சாத்திய மாயிற்று?' —தன் அநுமானம் சரிதானா என்பதைத் தனக்குத்தானே நிரூபித்துக் கொள்வதற்காக உள்ளே வந்து அந்த ஓவியத்தைப் பார்த்தார். வாசலில் அவர் சற்றுமுன் பார்த்த பெண் அந்த ஓவியத்தில் சிரித்துக் கொண்டிருந்தாள்.

வியப்பினிடையே அவர் இதயத்தில் வேதனையும் படர்ந்தது.

''உமா...!'' என்று நெட்டுயிர்த்தார் அந்தக் கிழவர்.

அவளை மறுபடியும் பார்க்கும் எண்ணத்துடன் அவர் வாசலுக்கே வந்தபோது அங்கே அந்தப் பெண்ணைக் காணோம். பால்காரன் நான்கு வீடுகளுக்கு அப்பால் போய்க் கொண்டிருந்தான். 'பால் வாங்கிக்கொண்டு உள்ளே போய் விட்டாள் போல் இருக்கிறது, என்று நினைத்துக் கொண்டார் அவர்.

அவருடைய ஓவியத்தைப் பார்த்தவர்கள் ' வேறு யாராவது அவரிடம், 'இதே போல் ஒரு பெண்ணை நான் பார்த்திருக்கிறேன்!'' என்று சொல்லியிருந்தால், 'நிச்சயமாக

இருக்க முடியாது!' என்று அந்த மனிதரிடம் மறுத்துக் கூறி யிருப்பார் அவர். தாமே நேரில் இந்த அதிசயத்தைப் பார்க்கும்போது நம்பித்தானே ஆக வேண்டியிருக்கிறது.

கூலகத்தில் ஒரே மாதிரிச் சாயல் உள்ளவர்கள் இருக்க லாம். அவருடைய கற்பனையில் பிறந்த ஓவியப் பெண்ணைப் போலவே உருவ அமைப்புடன் உடலும் சதையும் உயிரும் உணர்வும் கொண்ட மானிடப் பெண் இருக்கிறாளே! 'இது எப்படிச் சாத்தியமாயிற்று...?'

தம் சந்தேகத்தில் இருந்த பலவீனத்தை உணர்ந்த போது அவருக்குச் சிரிப்பு வந்தது.

உமா என்ற ஓவியம் குழந்தையாய் அவர் வீட்டில் தத்தித் தத்தி நடந்து, தன் பூப்பிஞ்சுப் பாதம் பதியும் இட மெல்லாம் பொலிவுறச் செய்து கொண்டிருந்தபோது, அந்தக் குழந்தையின் பிற்கால வளர்ச்சியின் அநுமானத்தில் விளைந்த கற்பனைதானே அந்த ஓவியமே!

உமா இப்போது இருந்தால்...? அவளுக்குப் பதினாறு வயது ஆகியிருக்கும்.

'அவளுடைய உருவத்தின் ஒளியை மட்டும் தானே கற்பனை செய்து ஓவியமாகத் தீட்ட முடிந்தது! 'அவள் எப்படிப் பேசுவாள், நடப்பாள், சிரிப்பாள், பாடுவாள்' என் றெல்லாம் தெரிந்து கொள்ளத்தான் இந்த எதிர் வீட்டுப் பெண்ணை நான் இப்போது காண்கிறேனோ?'

அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு அவள் பேசுவதைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் அவர் மனத்தில் தீவிரமாக எழுந்தது.

உமா மறைந்து போய்ப் பதினைந்து ஆண்டுகள் ஆன பின்பு இப்படி ஒரு நிகழ்ச்சி அவளைப் பற்றிய சிந்தனைகளை

நெய்யுண்ட பெரு நெருப்பாய்ப் பொங்கியெழச் செய்வா னேன்! காலப் போக்கில் அவர் அவளைப் பற்றிய எண்ணத்தை மறந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருந் தாலும் அந்த ஓவியம் அந்த நினைப்பை அவர் மனத்தின் அடித்தளத்தில் வளர்த்துக் கொண்டுதான் இருந்திருக்கிறது. பையன் காமேசன் 'இவன் தந்தை எந்நோற்றான் கொல்!' என்று மற்றவர் கூறும்படி புகழிலும் நிலையிலும் உயர்ந்து விளங்குகிற போதிலும், தமக்கே புரியாத ஒரு தனிமைக் குமைப்பில் அவர் பல நாட்கள் தவித்திருக்கிறார்.

பம்பாயில் காமேசன் புகழ்பெற்ற வழக்கறிஞனாக இருந்தான். அப்பாவிடம் அவனுக்கு உள்ள பக்தியின் ஆழத்தைக் கண்டு உறவினர்கள் எல்லாருமே வியப்பார்கள். அவன் மட்டும்தான் அப்படி என்றில்லை. அவனுக்கு வாய்த் திருந்த மனைவி கனகாவும் தங்கமான பெண். சொந்த மகளைப் போல் அவரிடம் அன்பும் பாசமும் கொண்டிருந் தாள் அவள். அவருக்கு மனக் குறை ஏற்படக் காரணமே கிடையாது. பங்களாவும், காரும், ஏனென்று கேட்க ஏவலர் களும், அன்பைச் சொரிய மகனும் மருமகளும் ..எல்லாம் இருந்தும் அவருக்கு மட்டும் சொல்லத் தெரியாததொரு சோகம் நெஞ்சில் சுழன்று கொண்டுதான் இருந்தது.

சென்னையில் மயிலாப்பூரில் அவர்களுக்குச் சொந்தமான வீடு ஒன்று இருந்தது. அதை வாடகைக்கு விட்டிருந்தார்கள். குடியிருந்தவர்கள் அந்த வருடம் ஏப்ரலில் வீட்டைக்காலி செய்து கொண்டு எங்கோ மாற்றிப் போய்விட்டார்கள். வாடகைக்கு வர ஆட்கள் 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு வந்த போது கிழவர் வீட்டை வாடகைக்கு விடவேண்டாம் என்று திடீரென்று உத்தரவு போட்டு விட்டார். அவர் கூறிவிட்டால் அப்புறம் அதுதான் அந்த வீட்டில் வேதம். கோடை விடுமுறை ஆரம்பித்தது. சென்னைக்குப் போக வேண்டும் என்ற தம் ஆவலைத்

தெரிவித்தார் கிழவர். காமேசன் தயங்கவில்லை. உடனே புறப்பட்டு விட்டான். ஒரு மாதம் மயிலாப்பூரில் குடித்தனம் நடந்தது. அதற்கு மேல் அவன் அங்கே தங்க முடியாது. கிழவர் என்னவோ சென்னையை விட்டுப் புறப்பட்டு வருவ தாக இல்லை.

"சரி நீங்கள் வரும்போது வாருங்கள். துணைக்குக் கனகா இங்கேயே இருக்கட்டும்!" என்று அவன் கூறினான். கிழவர் அதற்கும் ஒத்துக் கொள்ளவில்லை.

"நீங்கள் புறப்பட்டுப் போங்கள், சமையற்காரச் சங்கரன் இருக்கட்டும். இன்னும் ஒரு மாதம் இருந்து விட்டு நான் வருகிறேன்" என்று அவர் கூறிவிட்டார்.

வேறு வழியில்லாமல் அவர் சொன்ன படியே சங்கரனை அவருக்குத் துணையாய் விட்டுவிட்டு அவர்கள் போய்ச் சேர்ந்தார்கள்.

தினசரி கற்பகாம்பிகையின் தரிசனம். நினைத்தால் திருவல்லிக்கேணிக்குச் சென்று பார்த்தசாரதியைத் தரிசனம் பண்ணிவிட்டு வருவார். வீட்டு வாசலில் காம்பவுண்டுக் குள்ளிருந்த தோட்டத்தில் மலர்ச் செடிகள் நட்டு விட்டுப் போயிருந்தாள் மருமகள். சாயங்கால வேளையில் அவற்றுக்குத் தண்ணீர் ஊற்றுவது அவருக்கு ஒரு பொழுது போக்கு. இந்தத் தனி வாழ்விலும் ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்தது. மாற்றமில்லாத வாழ்வு எத்தனை சுகபோக வாழ்வானாலும் அதில் கவர்ச்சியிருப்பதில்லை என்று நினைத்துக் கொண்டார் அவர்.

அவர் வீட்டு மாடியில் உட்கார்ந்து கொண்டால் கபாலி கோயிலும் தெப்பக்குளத்தின் ஒரு பகுதியும் அழகாகத் தெரியும். அவர் ஓவியம் வரைவதை விட்டு எவ்வளவோ காலம் ஆகிவிட்டிருந்த போதிலும் இந்தக் காட்சியை வரைய வேண்டும் என்று இப்போது அவருக்குத் தோன்றியது.

அதை வரைகிறசிருஷ்டி இன்பத்தில் சில நாட்கள் கழிந்தன.

'மிகுதியுள்ள நாட்களுக்கு உமாவை நினைப்பூட்ட இந்தப் பெண் என் பார்வையில் பட்டிருக்கிறாள்!' என்று எண்ணினார் அவர். புதிதாகத்தான் அவர்கள் அங்கு குடி வந்திருக்க வேண்டும். இல்லையென்றால் இதுவரை அவர் கண்ணில் படாமல் இருக்க முடியாதல்லவா?

வெய்யில் மங்கிப் பொழுது சாய்ந்து கொண்டிருந்தது. அப்பொழுதுதான் தோட்டத்துக்குத் தண்ணீர் தெளித் திருந்ததால் வீசிய காற்றில் மண் வாசனையும் நீருண்ட காய்ந்த நிலத்திலிருந்து கிளம்பிய வெப்பமும் கலந்திருந்தன.

வராந்தாவில் வாசலுக்கு நேராகச் சாய்வு நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு சாய்ந்தார் கிழவர்.

கிட்டத்தட்ட அறுபதை நெருங்கிக்கொண்டிருந்தார் அவர். இந்த அறுபதாண்டு வாழ்க்கையில் முற்பகுதி மிகவும் சிரமமான நிலையில்தான் நகர்ந்தது. பாணை பிடித்தவள் பாக்கியம்தானோ என்னவோ, பாக்கியம் அவர் மனைவியாய் வாய்த்த பிறகுதான் அவரது ஓவியங்களுக்குத் தமிழகத்தில் மதிப்பு ஏற்பட்டது. படக் கடைகளில் எல்லாம் பெரும் பாலும் அவர் வரைந்த ஓவியங்கள்தாம் காட்சியளிக்கும். அந்த இளம் வயதிலேயே அவருக்கென்னவோ இறைவனின் திருக் கோலங்களை வரைவதில் ஓர் ஈடுபாடு. திருத்தலங்களில் கோவில் கொண்டுள்ள வடிவங்கள் ஓவியமாய் அவர் கைவண்ணம் பெற்று எத்தனையோ பக்தர்களின் இல்லங் களில் பூசை அறையை அலங்கரித்தன.

காமேசன் பிறக்கும்போது அவருக்கு முப்பது வயது. மயிலாப்பூரில் இப்போதிருக்கும் இந்த வீட்டை அவர் வாங்கிப் புதுப்பித்தது அப்போதுதான்.

'கலையும் புகழொளியும் கவின் மிக்க இல்வாழ்வும் விலையில்லாத் தேன் மழலை மென் சுவையும்' கூடிக் களி பெருக்கிய காவிய நாட்கள் அவை.

அந் நாட்களின் இனிமைக்கு அழகு சேர்க்க வந்து அவதரித்தவள் உமா.

செந்தாழை நிறம்; பூவிதழின் மென்மை; தொட்டுத் தொட்டுக் கை தேர்ந்த சிற்பி செதுக்கினாற் போன்ற அவயவங்கள். தெய்வக் குஞ்சு மலர்ந்தது போன்ற குழந்தை வடிவம் அது!

ஜகதீசன்—அதுதான் அவர் பெயர்—கலையின் உயிர் வடிவாய் உமா தவழுகையில் மெய்மறந்து போய் அந்தக் காட்சியின்பத்தில் லயித்து விடுவார்.

"உங்கள் கண்ணே பட்டுவிடும் போலிருக்கிறதே!" என்று அவரைக் கேலி செய்வாள் பாக்கியம்.

"என் கண் கலைக் கண்! அது பட்ட இடம் துலங்கும்!" என்று அவளுக்குப் பதில் சொல்லுவார் அவர்.

"ஐயே! பெருமையைப் பாரு...!" இதைச் சொல்லும் போது பாக்கியத்தின் முகத்தில் ஒளிவிடும் பெருமை எழிலை அவர் ரசிப்பார்.

'பாக்கியம் அழகுதான் என்றாலும் அது வெறும் மனத்தைக் கவருகிற மானிட அழகு. உமா இந்தக் குழந்தையுருவிலே தரும் அழகு மெய் சிலிர்க்க வைக்கும் தெய்வ அழகு!' என்று எண்ணமிடுவார் அவர்.

உமா நடக்கத் தொடங்கினாள்.

வயது வந்த பெண் நளினமாக நடக்கிறதை அன்ன நடை என்று கூறிப் புகழ்கிறார்களே; குழந்தை நடக்கத்

தொடங்கிய பருவத்தில் தன் பூப்பிஞ்சுக் கால்களைப் பெயர்த்து அடிபதித்து, தத்தித் தந்தி நடக்கும் இந்த அழகுக்கு எதை உவமை சொல்வது?

"கொஞ்சம் இங்கே வந்து பாருங்களேன்!"

பூவேலை செய்து கொண்டிருந்த துணியும் கையுமாய் ஜகதீசனின் அறைக்குள் வந்து சொற்களை மகிழ்ச்சிப் பூக்களாய்ப் பாக்கியம் கொட்டியபோது அவர் எழுந்திருக்க மனமில்லாமல்தான் எழுந்து வந்தார்.

ஆடிவரும் தேனாய், நடக்கத் தெரிந்து விட்ட பெருமையில் பூ முகமே புன்னகையாய் மலர, மேசை மீதிருக்கும் 'ஸெலுாலாயிட்' பொம்மையை நோக்கிக் கை நீட்டியவாறு உமா தத்தித் தத்தி நடந்து வந்தாள்.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தக் குழந்தை எழில், குமரியழகாய், ஒயிலாய்த் தன்னைச் சுற்றிலும் சௌந்தரிய ஒளி பரப்பி நடக்கும் காட்சி ஜகதீசனின் கண் முன் விரிந்தது.

"வயசிலே உமா ரொம்ப அழகாயிருக்கும் இல்லே?"

என்று அவர் மனத்தின் நினைப்பை ஒட்டினாற்போல ஒரு கேள்வி பிறந்தது பாக்கியத்தினிடமிருந்து.

"அதைத்தான் நானும் நினைத்துக்கொண்டிருந்தேன்!" என்றார் அவர்.

"வயசானப்புறம் உமா எப்படியிருக்குமின்னு கற்பனை பண்ணி...உம்..." என்று நிறுத்தினாள் அவள்.

"என்னாலே வரைய முடியுமான்னு கேட்கிறாய் இல்லே?......"

''உம்...!'' என்று சொல்லி அழகாகத் தலையை ஆட்டினாள் பாக்கியம். ஸெலுலாயிட் பொம்மையைக் கையில் எடுத்துக் கொண்டு மேஜை அருகில் நின்றவாறு ''அப்பா— பாப்பா... பாரு...!'' என்று மிழற்றிக் கொண்டிருந்த உமாவைத்தான் அவர் பார்த்தார்.

மார்போடு புத்தகங்களை அணைத்துக் கொண்டு பருவ எழில் குலுங்கும் பூங்கொடியாய் உமாவை அவர் மனம் கற்பனையில் பார்த்தது.

''பாக்கியம்.. இன்னும் இரண்டே நாட்களில் பாரேன்...!'' என்று சொல்லிவிட்டுத் தம் அறையை நோக்கி நடந்தார் அவர்.

இரண்டு நாட்களில் அற்புதமான ஓவியம் ஒன்று தயாராகி விட்டது. உமாவைப் பதினெட்டு வயது மங்கையாகக் கற்பனை செய்து அந்தக் கற்பனைக்கு ஒளியும் வண்ணமும் ஊட்டியிருந்தார் அவர். மார்போடு அணைத்த புத்தகங்களுடன் இளமை அழகும் புன்னகை மலர்ந்த பூ முகமுமாய் ஓவியத்தில் உமா நின்றிருந்தாள்.

குழந்தை நடக்கத் தொடங்கியதைப் பார்ப்பதற்கு அவரைப் பாக்கியம் கூப்பிட்டதைப் போலவே அதே இனிமைக் குரலில் அவர் படத்தை எழுதி முடித்ததும் அவளை அழைத்தார்.

''கொஞ்சம் இங்கே வந்து பாரேன்.''

உமாவை எடுத்துக் கொண்டு ''என்னவாம்...?'' என்று கொஞ்சலாகக் கேட்டுக் கொண்டே வந்த பாக்கியம் ஓவியத்தைப் பார்த்துப பிரமித்துப்போய் நின்று விட்டாள்.

குழந்தைதான் ''பாப்பா, பாப்பா...!'' என்று சொல்லிப் படத்தைப் பார்த்துவிட்டுச் சிரித்தது.

''பாப்பா இல்லேடி கண்ணு! உமாக்குட்டி யாக்கும் ..!'' என்றாள் பாக்கியம் பெருமை பிடிபடாமல்.

அவள் பேச்சு குழந்தைக்குப் புரியவில்லை. அது வெறுமே 'பாப்பா' என்று மிழற்றிக் கொண்டிருந்தது.

ஜகதீசன் அந்த ஓவியத்துக்குக் கண்ணாடி போட்டுத் தம் அறையில் வாசலுக் கெதிரே மாட்டி வைத்தார்.

அவரைப் பார்க்க வருகிறவர்கள் அந்தப் படத்தைப் பார்க்காமல் திரும்ப முடியாது. அதைப் பார்த்தவர்கள் அதன் அழகில் சிந்தை பறிகொடுக்காமல் இருக்க முடியாது.

"இது யார் ஸார்...?" என்று யாராவது கேட்டால் "என் பெண் பதினெட்டு வயதில் இப்படித்தான் இருப்பாள்" என்று சொல்லிவிட்டுச் சிரிப்பார் அவர்.

'அவள் இருந்திருந்தால் பதினெட்டு வயதில் இப்படித் தான் இருந்திருப்பாளோ' என்ற அனுமானத்தை மட்டும் தான் காலம் அவரிடம் விட்டு வைத்தது.

அந்த ஓவியம் வரைந்த வேளைக் கோளாறோ என்னவோ, ஒரு மாதத்துக்குள்ளேயே உமா என்ற உயிர் ஓவியத்தை 'டிப்தீரியா' என்ற காரணத்தைக் காட்டிக் காலன் அவரிடமிருந்து பறித்துப் போய் விட்டான். மிஞ்சியது இந்த ஓவியம்தான்.

சிந்தனைகள் சித்த வெளியில் துயரப் புழுதியைக் கிளப்பி விட்டிருந்த வேளையில் "தாத்தா...!" என்னும் தேன் குரல் அமிர்த தாரையாய் வந்து விழுந்தது.

எதிர் வீட்டுப் பெண் எதிரே நின்று கொண்டிருந்தாள்.

வியப்பினால் அகல விரிந்த கண்களுடன் அவளைப் பார்த்தார் கிழவர். அதே நிறம், அதே உயரம். குறுகுறுக் கும் நீள் விழிகள் கூரிய மூக்கு; உமாவைப் போலவேதான்.

"என்னம்மா வேணும் உமா...?" பரிவுக் குரலில் அவர் இப்படிக் கேட்டபோது அந்தப் பெண் அழகாகச் சிரித்தாள்.

"என் பேர் உமா இல்லை. லலிதா!"

"ஓ!..." தன் தவற்றை அப்போதுதான் அவர் உணர்ந் தார். "என்னம்மா...?"

"இன்னிக்குத் தினப் பத்திரிகை இருக்கா தாத்தா? ஒரு விளம்பரம் பார்க்கணும்?"

"இருக்கே, உளளே போய் நீயே பார்த்து எடுத்துக் கோம்மா!"

அவள் கொடியாய் நடந்து உள்ளே போனாள். சற்றைக் கெல்லாம் கையில் பத்திரிகையுடன் வெளியே வந்தவள், ',அந்தப் படத்திலே இருக்கிற பெண் யாரு தாத்தா?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"என் பெண்தான்...உமா!"

"ஓ! அதுதான் என்னையும் உமான்னு கூப்பிட்டேளா?"

"நீ எனக்கு உமா மாதிரிதானம்மா!"

"ஆமாம் தாத்தா. உங்க உமா கூட என்னை மாதிரித் தான் இருக்கா. பார்த்துவிட்டுக் கொண்டு வரேன். ரொம்ப தாங்ஸ்!"

'உமா... லலிதா...!' பெயர்தான் வேறு என்று அவள் நடந்து செல்கையில் அவர் முனகிக் கொண்டார்.

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின் மறைந்து போய் விட்ட அவர் பெண்ணையே திரும்பவும் காலம் கொடுத்த வளர்ச்சியுடன் எதிரே கண்டுவிட்டாற் போல், அவர் மனத் தில் அந்தப் பெண்ணிடம் ஒரு பாசப் பரிவு கிளர்ந் தெழுந்தது. அன்றையத் தினப் பத்திரிகை வாங்க வந்து அவருக்கு அறிமுகமான அந்தப் பெண்ணும் அவருடன் பாசத்துடன் பழகத் தொடங்கினாள்,

உமாவின் கதையையும் ஓவியம் பிறந்த கதையையும் அவர் அவளிடம் கூறியபோது அந்தப் பெண் நெகிழ்ந்து போனாள்.

"என்னையே உங்க உமான்னு நினைச்சுக்குங்கோ தாத்தா!...உம்?" என்றாள் அவள்.

"லலிதா! நீ நல்ல பெண்!" என்று நிஜமான பொருளுணர்வுடன் மனத்துக்குள் சொல்லிக் கொண்டார் அவர்.

காமேசன் அவரை விட்டுப்போய் ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. ஒரு மாதத்தில் புறப்பட்டு வருவதாய் அவர்களிடம் சொல்லியிருந்த கிழவருக்கு இப்போது சென்னையை விட்டுப் போக மனமில்லை.

இழந்த பொருளைத் திரும்பப் பெற்று விட்ட மகிழ்ச்சியுடன், இல்லை, இழந்த உயிரையே திரும்பப் பெற்று விட்ட பரவசத்துடன் அவருக்கு இப்போது நாட்கள் ஓடின.

லலிதாவின் தந்தை வர்த்தகக் கம்பெனி 'யொன்றில் வேலை பார்த்து வந்தார். அவள் தான் அவருக்கு மூத்த பெண். அவளுக்குப் பிறகு நான்கு பெண்கள்; ஒரு பையன். பள்ளி இறுதிப் பரீட்சை தேர்வு பெற்றுவிட்டு எங்காவது உத்தியோகம் பார்க்கலாமென்ற நிலையிலிருந்தாள் லலிதா, வேலைதான் அவளுக்குக் கிடைக்கவில்லை.

கிழவர் வரைந்த பழைய சித்திரங்களைப் பார்ப்பது, அவருக்கு ஏதாவது புத்தகம் படித்துக் காட்டுவது, ஓவியம் வரைதல் பற்றி அவரை ஏதாவது பேச வைத்துக் கேட்பது என்று இப்படி அந்தப் பெண் ஒரு நாளில் பெரும் பகுதியைக் கிழவர் வீட்டில் தான் கழித்தாள். அவர்கள் வீட்டில் சமையல் வேலை யெல்லாம் காலை பத்துப் பதினோரு மணிக்கெல்லாம் முடிந்துவிடும். அதுவரையுமாவது தன் தாயாருக்

குக் கூடமாட ஏதாவது உதவி செய்து கொண்டு பொழுது கழிந்துவிடும். அதன் பின் மாலை நாலு மணிவரை வீட்டில் வேலை இருக்காது.

லலிதா என்ற அந்தப் பெண்ணிடம் உமாவையே கண்டு விட்ட கிழவர் பம்பாய்க்கு எழுதிய கடிதத்தில் தாம் இன்னும் ஒரு மாதம் சென்னையில் தங்கப் போவதாகவும், தன்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும் எழுதி விட்டார்.

இப்போது ஏனோ அந்தப் பெண்ணைப் பிரிவது இயலாத காரியம் போலத் தோன்றியது அவருக்கு. ஆயினும் எப்படியும் பிரிந்துதானே ஆக வேண்டும்! இன்னும் ஒரு மாதம் இந்தக் குழந்தையுடன் இருந்து விட்டுத்தான் போக லாமே! இப்படி ஒரு நப்பாசை.

கபாலி கோயிலுக்குப் போய்விட்டு வீடு திரும்பும் வழியில் கிழவர் தம் மனத்தின் விசித்திரப் போக்கைப் பற்றிய சிந்தனையில் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார்.

அவர் எழுதிய கடிதம் காமேசனுக்கு அன்று கிடைத் திருக்கும். கடிதத்தைப் படித்து விட்டு அவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்? 'அப்பா மனம் நோகும்படி நாம் ஏதாவது தவறுதலாய் நடந்து கொண்டு விட்டோமோ?' என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு காமேசனும், கனகா வும், கவலைப்படப் போகிறார்கள். அவன் ஒரு வேளை புறப் பட்டு வந்து விட்டால் கூட ஆச்சரியமில்லை.

நினைப்புகள் சுற்றி வளைத்துச் சுழன்று கொண்டிருந் தாலும் நெஞ்சம் என்னவோ இன்னும் கொஞ்ச நாட்கள் சென்னையில் இருக்கத்தான் விரும்பியது:

வீட்டை நெருங்கியபோது காம்பவுண்டுக் கதவு திறந்து கிடப்பதைக் கண்டார் அவர்.

'இந்தச் சங்கரனுக்கு எவ்வளவு சொன்னாலும் மூளை கிடையாது. நான் வெளியே போய் விட்டால் கதவைச்

சாத்தி உள்பக்கம் தாழ் போட்டுக்கொள் என்று ஒவ்வொரு தடவை சொன்னாலும் அவன் கேட்டால்தானே?, என்று சமையல்காரனை மனத்துக்குள் வைது கொண்டே நுழைந்தார்.

மிதியடியைக் கழற்றிவிட்டுக் கூடத்து விளக்கைப் போடப் போனவர் உள்ளிருந்து வந்த பேச்சைக் கேட்டு ஸ்தம்பித்து நின்றார்.

''ஐயா இப்போதைக்கு இங்கிருந்து போகிறாப்பலே இல்லை. நீ ஒண்ணும் கவலைப் படாதே. இன்னும் கொறைஞ்சது ஒரு மாசமாவது உனக்கு வேலை ஓடும்.''— சமையற்காரச் சங்கரனின் குரல் இது.

''அது தானே கேட்டேன்? உங்க ஐயாவுக்கு வயசுதான் ஆயிடுச்சே தவிர, அந்த எதிர்த்த வீட்டுப் பொண்ணோட சிரிக்கிறதும், களிக்கிறதும் .! அவரு போகமாட்டாருன்னு எனக்குத் தெரியும்!''— வேலைக்காரியின் பேச்சு இது.

கிழவருக்கு அங்கமெல்லாம் பற்றி எரிந்தது. இந்த மனிதர்கள் எவ்வளவு எளிதாக இப்படி அபிப்பிராயம் கூறி விடுகிறார்கள்! என் உமாவுடன், என் குழந்தையுடன் நான் பழகுவதைக் கூடவா விகல்பமாகப் பேசுவது? தூய்மை அன்புக்குக் கிடைக்கும் பரிசா இது?

'சங்கரா...!' என்று அழைக்க வாயைத் திறந்தவர் எதற்கோ கட்டுப்பட்டவர் போல் அடக்கிக் கொண்டார்.

அவதூறு சொல்லும் அந்த அவலத்தின் கன்னத்தில் நாலு அறை கொடுக்க வேண்டும் போல ஆத்திரம் வந்தது அவருக்கு. ஆயினும் அதன் விளைவாக இந்த அவச் சொற்களுக்கு விளம்பரம் கொடுப்பதாகத்தான் ஆகும் என்று அவருக்குத் தோன்றியது.

கனக்கின்ற நெஞ்சுடன் திரும்பி வாசல் நோக்கி நடந்து காம்பவுண்டுக் கதவை ஓசை எழும்படி அறைந்து சாத்தினார். சத்தம் கேட்டு சங்கரன் எழுந்து வந்தான்.

"வந்துட்டேளா தாத்தா...!"

"உ...ம்..."

அவனைப் பார்க்காமலே உள்ளே போய் மேசையைத் திறந்து ஒரு தந்தி பாரத்தை எடுத்து அதில் எழுதினார்.

"நாளை புறப்படுகிறேன்—ஜகதீசன்."

"சங்கரா நீ இதை எடுத்துக்கொண்டு போய்த் தந்தி கொடுத்து விட்டு அப்படியே ஸென்ட்ரலுக்குப் போய் நாளை ரயிலுக்கு 'ரிசர்வேஷன்' கிடைக்குமானால் ரிசர்வ் பண்ணிட்டுவா. நாளைக்கு நாம் கிளம்பறோம்!"

தந்தி பாரத்தைக் கையில் வாங்கிக் கொண்ட சங்கரனுக்கு ஆச்சரியமாக இருந்தது அவருடைய முடிவு.

தயங்கியவாறே நின்ற அவனை "உம்... கிளம்பு!" என்று துரிதப்படுத்தினார் அவர்!

முந்தானையால் ஈரக் கையைத் துடைத்துக்கொண்டே பரம சாதுவாய் வாசற்புறம் சென்ற வேலைக்காரிக்கும் கிழவர் ஊருக்குப் புறப்பட்டுவிட்ட செய்தி வேதனையாகத் தான்இருந்தது.

சங்கரன் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பி விட்டான்.

கேட்டின் கதவை அவன் திறந்து மூடிய போது கதவு சோகமாய்க் கிறீச்சிட்டது.

கிழவர் உமாவின் ஓவியத்தைப் பார்த்தார்.

வீடு வெறிச் சென்றிருந்த அவ்வேளையில் அவர் கண்களிலிருந்து பொல பொலவென்று நீர் உதிர்ந்தது.

படத்தைப் பார்த்தவாறு பச்சைக் குழந்தை போல் வெகு நேரம் தேம்பித் தேம்பி அந்தப் பெரிய வீட்டின் கூடத்தில் தன்னந்தனியாய் அந்தக் கிழவர் அழுது கொண்டிருந்தார்.

**(கல்கி- 31-3-1963)**

# ஜோடிப் பறவைகள்

டாக்டரின் பார்வை வெளியே நின்ற வேப்பமரத்தின் மீது நிலைத்து நின்றது. வேப்பமரத்தின் தாழ்ந்த கிளை யொன்றில் இரு காக்கைகள் வெகு சுவாரஸ்யமாகக் கொஞ்சிக் கொண்டிருந்தன.

'பறவைகள் மனிதர்களைவிடப் பாக்கியசாலிகள்!' என்று நினைத்துக் கொண்டார் அவர்.

காற்றிலே வேப்பமரம் ஆடியது. மேலும்கீழுமாய் ஆடிய அந்தத் தாழ்ந்த கிளையின்மேல் உட்கார்ந்திருந்த காக்கைகள் இன்னும் ரகசியம் பேசிக்கொண்டு தான் இருந்தன. அவற்றையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த டாக்டரின் கண்களுக்கு அந்தக் காக்கைகள் மறைந்து அங்கே இரண்டு மனித உருவங்கள் தெரிந்தன. மரக்கிளை பூ ஊஞ்சலாக மாறியது. செண்பகமும் தண்ட பாணியும் உலகத்தையே மறந்த உல்லாசத்துடன் அந்தப் பூ ஊஞ்சலில்......

டாக்டர் கண்களைத் துடைத்துக் கொண்டார். காக்கைகள் மரக்கிளைமீதிருந்து 'ஜிவ்' வென்று கிளம்பி வானிலே மறைந்துவிட்டன. வெற்றுக்கிளைதான் முறிந்து விழுந்து விடும் போல வேகமாக ஆடிக்கொண்டிருந்தது.

டாக்டர் மனசு குழம்பியது...தண்டபாணி செண்பகம்... மணமான நிலை அவர் உள்ளத்தை உருக்கியது. அவன் கேட்ட கேள்வி...

"நீங்கள் தாம் எனக்கு எல்லாம் டாக்டர். செண்பகத்தைக் காப்பாற்றி என்னிடம் சேர்த்து விடுவீர்கள் அல்லவா?''

வாய்விட்டுக் கதறி அழவேண்டும்போலிருந்தது டாக்டருக்கு. 'மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட நிலை நேர்ந்துவிட்டபோது. யார்தான் என்ன செய்ய முடியும்?'' என்று தன்னைத்தானே சமாதானம் செய்துகொள்ள முயன்றார். ஆயினும்...?

தண்டபாணி தன்னைக் காப்பாற்றிய நாள் நினைவுக்கு வந்தது.

தினமும் மாலையில், குளத்தங்கரை வழியாக ஊருக்கு மேற்கே கொஞ்சதூரம் நடந்துவிட்டு வருவது அவர் வழக்கம். அப்படித் தான் ஒரு நாள் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார். ஏதோ யோசனையில் அன்று குளத்தையெல்லாம்தாண்டி வெகுதூரம் போய்விட்டிருந்தாராதலால், திரும்பும் போது நன்றாக இருட்டி விட்டது. பர்லாங்குக்கு ஒன்றாக நின்ற முனிசிபல் விளக்குகள் இருளைத்தான் மிகைப்படுத்திக் கொண்டிருந்தன. 'இனிமேல் கையில்' டார்ச்' சுடன் தான் புறப்பட வேண்டும்' என்று அவர் நினைத்துக் கொண்டிருக்கையிலேயே காலின் கீழ் ஏதோ வழுக்கியது திடுக்கிட்டு உதறிய காலின் பின் புறம்...கணுக்காலுக்குமேல்.

"அ ப்...ப்...பா!'' டாக்டர் அலறிவிட்டார்.

அவர் காலைப் பதம் பார்த்து விட்டுச் 'சரசர' வென்று ஊர்ந்து போய்விட்டது பாம்பொன்று.

அவருக்குத் தலை சுற்றுவது போல் இருந்தது. உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. கணுக்காலுக்கு மேல் 'விண்விண்' ணென்று .....இதோ முட்டி வலிக்கிறது! இன்னும் சில விநாடிகளில் விஷம் மேலே ஏறி...அப்புறம்... அப்புறம்...

பாதையில் யாரையும் காண வில்லை. முன்னும் பின்னும் நெடுந் தொலைவுக்குச் சற்றுமுன் அவரைக் கடித்துவிட்டு ஓடிய அந்தக் காலனைப் போலப் பாதை துவண்டு கிடந்தது.

'அப்...பா' என்று இரைந்து கொண்டே நடுச்சாலையில் உட்கார்ந்துவிட்டார் அவர்.

பீதியில் கிறங்கிய நினைவில், சுற்றுப்புறம் அவர் கண்முன். சுழன்று கொண்டிருந்த அந்த அவவேளையில். பக்கத்திலே ஒலித்த சைக்கிள் மணி அவருக்குக் கேட்கவில்லை.

"ஸார் . டாக்டர், ஸார்¡"

கிறக்கத்திலே மூடியிருந்த இமைகள் விரிந்தன.

' என்ன டாக்டர் இது?"

"கணுக்காலிலே ஐயோ -அப்பா.. பாம்பு!" மூச்சு இரைக்க டாக்டர் வார்த்தைகளைத் துண்டு துண்டாக வீசினார்.

"ஹா..ங்!"—சரேலென்று இடுப்பில் செருகியிருந்த சாவிக் கொத்தை உருவி, அதிலிருந்த பேனாக் கத்தியை விரித்துக் கொண்டு ' எங்கே ஸார்?" என்று படபடத்தான் அவன்.

கணுக்காலுக்கு மேலே கடிவாயைத் தொட்டுக் காட்டினார் டாக்டர். மேல் துண்டினால் முட்டுக்குக்கீழே இறுக்கிக் கட்டுப் போட்டு விட்டு, இமைக்கும் நேரத்தில் கடிவாயைக் கிறிவிட்டு, அதை நோக்கிக் குனிந்தான் வந்தவன்.

எத்தனையோ ரண சிகிச்சைகளை வெற்றிகரமாகச் செய்து முடித்த டாக்டர். இப்போது பிரமித்துப் போய் வேதனையைக்கூட மறந்து விட்டார்.

கால் நரம்புகள் சுண்டி வலித்தன. அவன், கடிவாயில் வாய்வைத்து இரத்தத்தை உறிஞ்சி உறிஞ்சித் துப்பிக் கொண்டிருந்தான்.

டாக்டருக்கு பயங்கரமாக இருந்தது. அப்படியே கிறங்கிப் போனவர்தான். கண்விழித்தபோது, தன் வீட்டுக் கட்டிலின் மேல் மெத்தையில் படுத்திருப்பதை உணர்ந்தார் அவர்.

பக்கத்தில் மனைவி உட்கார்ந் திருந்தாள். கட்டிலுக்கு அருகே அந்த இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

இரு கைகளையும் கூப்பி அந்த இளைஞனை வணங்கினார் டாக்டர். அவன்தான் தண்டபாணி.

''ஸார்! போஸ்ட்!'' தபால்காரனின் குரல் டாக்டரின் நினைவுக் கயிற்றை அறுத்தது.

அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த பையன் வந்திருந்த தபால்களை மேசை மீது வைத்துவிட்டுப் போனான்.

அவற்றைப் பிரித்துப் பார்க்க வேண்டுமென்றுகூட அவருக்குத் தோன்றவில்லை. வந்திருந்த தபால்களில் ஏதோ கல்யாண அழைப்பிதழும் இருந்தது. அந்த மஞ்சள் நிறக் கடிதம் அவர் நினைவை மறுபடியும் சுழல வைத்தது.

முழங்கைகளை மேசை மீது ஊன்றிக் கொண்டு, அப்படியே அவர் வெகு நேரம் உட்கார்ந்திருந்தார்.

டாக்டருக்குக் குழந்தை குட்டியில்லை. ஆகவே, கலகல வென்று பழகும் தன்மையும் எப்போதும் புன்னகை தவழும் முகமுமாய்க்காட்சி தந்த தண்டபாணியை அவர் மானசீக புத்திரனாகவே வரித்திருந்தார்.

சிறு வயதிலிருந்தே தண்டபாணி தன் ஒன்றுவிட்ட மாமன் மகள் செண்பகத்தைத் தன் வாழ்க்கைத் துணைவியாக மனத்திலே வரித்து வைத்திருந்தான். மாமா ஒரு ஏழைப் பள்ளி ஆசிரியர். சிரம ஜீவனம் செய்து கொண்டிருந்தார், செண்பகத்திடம், அவள் சின்னஞ்சிறு

பூ மொட்டாய் இருக்கும்போதே பாசத்துடன் பழகத் தொடங்கிய தண்டபாணி, அவள் பருவமங்கையாய் மலர்ந்து சிரித்தபோது உள்ளங் கனிந்த காதலுடன் பழகத் தொடங்கினான். அவனுக்காகப் பிறந்திருப்பதாக எண்ணிக்கொண்டு தான் அவளும் வளர்ந்தாள்.

தண்டபாணியின் பெற்றோருக்கு செண்பகத்தைத் தங்கள் மருமகளாக ஏற்றுக்கொள்வதில் விருப்பமில்லை.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார் அவன் மாமாவும் தன் பெண்ணை மணக்க வருவார்கள் என்று. தண்டபாணியின் பெற்றோர்கள் வரவில்லை. பொறுமை யிழந்து விட்டாரென்ற விஷயத்தை விம்மலுக்கும் விசும்பலுக்குமிடையே செண்பகம் ஒரு நாள் அவனிடம் தெரிவித்தாள்.

மாமா அப்போது வீட்டில் இல்லை. எங்கோ வெளியே போயிருந்தார். மாமி சமையல் அறையில் காரியமாக இருந்தாள்,

வாசல் நடையை யடுத்த கூடத்தின் முன்னறையில் சுவரோடு சாய்ந்தவாறு முட்டைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த செண்பகம் தண்டபாணியைக் கண்டதும் கனவு கலைந்து திடுக்கிட்டு எழுந்திருந்தாள்.

அறையில் கவிந்திருந்த மங்கலொளியில் அவள் முகம் சோகம் படிந்து பொலி விழந்திருப்பதைக் கண்டான்.

''என்ன நடந்தது செண்பகம்?''

''நீங்கள் வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தால்?... அப்பா இன்றைக்கு வேறு வரன் தேடக் கிளம்பி விட்டார்! கோழையைப் போலக் கையை விரித்து விட மாட்டீர்களே, அத்தான்?'' என்று கேட்டாள் அவள்.

''கவலைப்படாதே செண்பகம். அம்மா சம்மதித் தாலும் சரி சம்மதிக்கா விட்டாலும் சரி, நீ என்னுடையவள். இன்றைக்கே இதை என் அப்பா-அம்மாவிடமும் மாமா விடமும் சொல்லி விடுகிறேன். அடுத்த முகூர்த்தத்தில் நீ ஊரறிய என் மனைவி; சரிதானே!''

உணர்ச்சி வேகத்தில் அவன் கூறிய வார்த்தைகள் அவள் இதயத்தில் அமிர்த தாரையாக விழுந்தன.

''இதெல்லாம் கனவில்லையே, அத்தான்! நிஜம் தானே?'' என்று கூறிக்கொண்டே மகிழ்ச்சி வெறியுடன் அவன் கைகள் இரண்டையும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் செண்பகம்.

செண்பகத்திடம் ரொம்பவும் உறுதியாகச் சொல்லி விட்டானே தவிர, அதைச் செயல்படுத்துவது அத்தனை எளிதாக இருக்குமென்று தோன்றவில்லை. வீட்டிலே இவ்வளவு உறுதியுடன் தன் கருத்தை எப்படித் தெரிவிப்பது? ஆயினும் ஒரு வழியாகத் தன் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு விஷயத்தை எப்படியோ கூறிவிட்டான்.

அவன் பெற்றோர் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டனர், பிள்ளையின் தீர்மானமான பேச்சைக் கேட்டு.

''உனக்கு எங்கள் அபிப்பிராயம் ஒரு பொருட்டாகவே தெரியவில்லை இல்லையா? ''என்று கேட்டார் தகப்பனார்.

''நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை யானால், செண்பகம் உயிரை விட்டு விடுவாள், அப்பா. அநியாயமாய் ஒரு பெண் பாவத்துக்கு என்னை ஆளாக்கா தீர்கள்'' என்று அவன் கூறிய போது அவர் பதில் ஏதும் சொல்லவில்லை. மௌனம் பாதி சம்மதம் என்று திருப்தி பட்டுக்கொண்டான் அவன். அம்மாதான் வாய் ஓயாமல் அரற்றிக் கொண்டிருந்தாள்.

கடைசியில் அவன் பிரயோகித்த அஸ்திரம் வெற்றி கண்டு விட்டது.

"இந்தக் கல்யாணம் நடக்கவில்லையானால், செண்பகத்துக்கு உயிரே போய் விடும். எனக்குப் பைத்தியம் பிடித்து விடும். இது விளையாட்டில்லை, அம்மா. நூற்றுக்கு நூறு உண்மை!'' என்று அவன் கதறியதைப் பார்த்ததும் அம்மா தன் வாயை அடைத்துக் கொண்டு விட்டாள்.

மறுநாள் பொழுது விடிந்ததும் குளித்து விட்டு உமாவைப் பார்க்கக் கிளம்பினான் அவன்.

செண்பகம் அவன் வரவை எதிர் பார்த்துக் கொண்டு வாசலில் நின்றிருந்தாள்.

"அப்பா-அம்மா சம்மதித்த மாதிரிதான். இனிமேல் நான் யார் தெரியுமா?"

"என் ராஜா!'' என்று அவன் காதுக்கு மட்டும் கேட்கும்படி மெதுவாகக் கூறி விட்டுக் குதித்துக் கொண்டு உள்ளே ஓடினாள் செண்பகம்.

"வா தண்டு!'' என்று அன்பொழுக வரவேற்றார் மாமா.

வந்த விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்குள் தண்டபாணி திணறிப் போய் விட்டான்.

"நிஜமாகவா...?'' என்றார் அவர், அகல விரிந்த கண்களுடன்.

"ஆமாம் சமீபத்தில் இருக்கும் முகூர்த்தத்தில்."

சொல்வதற்கு நாணமாகத்தான் இருந்தது அவனுக்கு. பெற்றோர் இருந்தும் கூட, தன் கல்யாணத்துக்கு இப்படித் தானே சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்து விட்டதே என்று வருந்தினான்.

ஒரு நிமிஷத்தில் அவன் மாமா ஒரு சுற்றுப் பருத்துப் போய் விட்டார்.

பஞ்சாங்கத்தை எடுத்து வைத்துக் கொண்டார்.

"இன்றைக்குத் திங்கட்கிழமையா...? அடுத்த திங்கட் கிழமை முகூர்த்த நாள்தான். ஜோசியரைக் கலந்து கொண்டு உன் அப்பாவை வந்து பார்க்கிறேன்..."

தண்டபாணி உள்ளே பார்த்தான்.

முற்றத்திலே இரண்டு சுடர் விழிகள் அவனுக்கு நன்றி கூறிக் கொண்டிருந்தன.

* * *

அப்பாவும் அம்மாவும் எங்கே மனசு மாறிவிடுவார்களோ என்று உள்ளூறத் தண்டபாணிக்குப் பயம்தான். ஆனால், அவர்கள் 'இதுதான் பிராப்தம் என்று நினைத்து விட்டார்களோ, என்னவோ; அவன் மாமா பூர்வாங்க நிச்சயதார்த்தம் செய்ய வந்தபோது, அமைதியுடன் அவரை வரவேற்றார்கள்.

அதிசயிக்கும் வண்ணம் அடுத்த திங்கட்கிழமை முகூர்த்தமே அமைந்தும் விட்டது.

இறக்கை முளைத்து வானிலே பறந்தான் தண்டபாணி.

இந்தச் சந்தோஷச் செய்தியை டாக்டருக்குச் சொல்ல ஓடினான்.

டாக்டர் ஊரில் இல்லை. எங்கோ வெளியூர் சென்றிருந்தார்.

'சை! இந்த டாக்டருக்குச் சமய சந்தர்ப்பமே தெரிவது கிடையாது. இந்தச் சந்தோஷ சமாசாரத்தைக் கேட்டு விட்டு ஊருக்குப் போகக் கூடாதோ!' என்று நினைத்துக் கொண்டான்.

ஆனால், டாக்டர் ஊரிலிருந்து திரும்பியதும் அவரைச் சந்திக்க ஓடிய தண்டபாணி, இந்தச் சமாசாரத்தைத் தெரிவிப்பதற்காக ஓடவில்லை.

ஆறாகப் பெருகும் கண்ணீர் கன்னத்தில் வழிந்தோட, கைகளைப் பிசைந்துகொண்டு பரிதாபத்தின் உயிரோவியமாக டாக்டரின் முன் அவனை நிற்க வைத்து விட்டது விதி.

"மூந்தா நாளிலிருந்து செண்பகத்துக்கு ஜுரம், டாக்டர். கண் விழிக்காமல் கிடக்கிறாள். நீங்கள்தான் எனக்கு எல்லாம் டாக்டர். செண்பகத்தைக் காப்பாற்றி...!"

"பதறாதே, தண்டு! நான் வந்து பார்க்கிறேன்!" என்றார் டாக்டர்.

செண்பகத்தின் உடல் நிலை உண்மையில் ரொம்பவும் மோசமாக இருந்தது.

அனலாக உடம்பு கொதித்துக் கொண்டிருந்தது.
கண்ணைத் திறக்காமலே. "திங்கட்கிழமை என் கழுத்தில் மூணு முடிச்சுப் போட்டு விடுவீர்களில்லையா, அத்தான்!" என்று பிதற்றிக் கொண்டிருந்தாள் அவள்.

டாக்டரே ஒரு கணம் கலங்கி விட்டார்.

இன்ஜெக்ஷன் போட்டுவிட்டு டாக்டர் வெளியே வந்தார்.

"எவ்வளவோ பாடுபட்டு எல்லாரையும் சம்மதிக்க வைத்து, திங்கட்கிழமை முகூர்த்தமும் வைத்தாகி விட்டது டாக்டர். இப்போ விதி விளையாடறது? டாக்டர், செண்பகம் பிழைத்து எழுந்து விடுவாளா?" என்று குழந்தை போலக் கேட்டான் தண்டபாணி.

'கவலைப்படாதே, தண்டு! நான் இங்கேயே இருந்து கவனித்துக் கொள்கிறேன். உன் கல்யாணத்துக்கு ஒரு விக்கினமும் ஏற்படாது!" என்று தைரியம் கூறினார் டாக்டர்

வியாழன் கழிந்து, வெள்ளி மறைந்து, சனியும் முடிந்து விட்டது. ஜுரம் இறங்கியபாடில்லை.

இரவும் பகலும் கண் விழித்து தண்டபாணி, பார்க்க சகிக்காத உருவத்துடன் கட்டிலின் அருகே உட்கார்ந்திருந் தான். டாக்டரும் அவனுக்குத் துணையாக அந்த வீட்டிலேயேதான் இந்த மூன்று நாட்களும் குடியிருந்தார். தண்டபாணியின் பெற்றோர்கூட தினம் இரண்டு முறை வந்து போய்க்கொண்டிருந்தனர்.

செண்பகத்தின் ஜுரம்தான் இறங்கவில்லை.

ஒரே ஒரு மாறுதல். அவள் இப்போது கண் விழித்து நன்றாகப் பார்த்தாள். நினைவுடன் சில கணம் பேசினாள். சில சமயங்களில்தான் கனவு மயக்கத்தில் பிதற்றினாள்.

இரவு பத்து மணியிருக்கும்.

"அப்பா.. அப்பா....." என்று முனகினாள் அவள்.

அவள் அப்பா அருகே வந்து நின்றார்.

"கல்யாணத்தைத் தள்ளிப்போட்டு விடாதீர்கள். ஜுரம் இறங்கினாலும் இறங்காவிட்டாலும் திங்கிட்கிழமை கட்டாயம் கல்யாணம் நடக்கணும்!"

அவள் பேசுகிறாளா அல்லது பிதற்றுகிறாளா என்ற சிந்தனையுடன் அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் அவள் அப்பா.

"விளையாட்டில்லை, அப்பா! கட்டாயம் நடத்திவிடுங் கள். நான் எப்படியும் எழுந்து வந்து மனையில் உட்கார்ந்து விடுவேன்" என்றாள், துயரம் நிறைந்த குரலில்.

தண்டபாணியைத் திரும்பிப் பார்த்தாள். அவன் அவளருகே குனிந்து அவள் முகத்தை உற்றுப்பார்த்தான்.

''திங்கட்கிழமை கட்டாயம் என்கழுத்திலே மூனு முடிச்சுப் போட்டு விடுவீர்களில்லையா...?'

''கட்டாயம்!'' என்றான் தண்டபாணி.

''அப்பா...!'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே அவன் கையை எடுத்துத் தன் கையில் வைத்துக்கொண்டாள் செண்பகம்.

சிரிப்பதா அழுவதா என்ற திகைப்பில் இந்தக் காட்சியை ரசித்துக் கொண்டிருந்தார் டாக்டர்.

* * *

தண்டபாணி சொல்லித் தெரிந்து கொண்ட நிகழ்ச்சிகளும் அவரே பார்த்துத் தெரிந்துகொண்ட சம்பவங்களும் சலனப்படம்போல அவர் நினைவில் சுழன்றோடியபோது டாக்டருக்குப் புல்லரித்தது.

எதிரே மேசை மீது கிடந்த திருமண அழைப்பிதழில் அந்தக் காட்சிகள் திரைப்படம் போலத் தெரிந்தன.

முகூர்த்த நாளான திங்கட்கிழமை பொழுது புலர்கையில் செண்பகத்தின் வீட்டிலிருந்து மேளச்சப்தத்திற்குப் பதில் அழுகுரல்தான் எழுந்தது.

டாக்டர்கூட முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு அழுதார்.

செண்பகத்தின் மலர்ந்த முகத்துடன் அவள் முகத்தையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்த தண்டபாணி திடீரென வீடே கிடுகிடுக்கும்படி அலறினான், "இங்கேயாரும் அழக் கூடாது. இது கல்யாண வீடு. இன்றைக்குச் செண்பகத்துக்கும் எனக்கும் கல்யாணம்!''

அழுகையொலி 'கப்பெ'ன அடங்கிற்று. பதறிப்போய் ஓடி வந்த டாக்டர் அவன் கையைப் பற்றிக் கொண்டார்.

தண்டபாணி சிரித்தான். வெறுப்பைச் சிரிப்பாக்கி வேதனையை ஒலியாக்கி...அந்தச் சிரிப்புத்தான் எத்தனை கோரமாக வெளிப்பட்டது!

“எனக்கு அதெல்லாம் தெரியாது. அவள் கழுத்தில் இன்று நான் தாலி கட்டித்தான் ஆகவேண்டும்!”

அவன் சுவாதீனத்துடன்தான் இருந்தான். அமானுஷ்ய மான ஒரு வெறியில் பேசிக் கொண்டிருந்தான்.

அவனைத் தனியே அழைத்துப்போய் எவ்வளவோ சமாதானம் கூறிப் பார்த்தார் டாக்டர். அவன் மசியவில்லை.

முடிவில்......

டாக்டரின் கண் முன் இப்போதுகூட அந்தக் காட்சி தெரிந்தது.

உயிர் பிரிந்த செண்பகத்தின் உடலுக்குப் புத்தாடை அணிவித்து நாற்காலியில் உட்கார வைத்துச் சம்பிரதாயப் படி தண்டபாணி தாலி கட்டினான். அவனது வெறிபிடித்த முகத்துக்குப் பயந்து கொண்டு, சூழ நின்றவர்கள் பொங்கி வந்த அழுகையை அடக்கிக்கொண்டார்கள்.

மாலையும் கழுத்துமாய் உயிரற்ற சண்பகத்தின் உடலின் அருகே உட்கார்ந்து கொண்டு, “போட்டோ எடுக்கச் சொல்லுங்கள் டாக்டர்!” என்று கத்தினான் தண்டபாணி

டாக்டருக்கு அவன் மன நிலை தெரிந்தது. இப்போது அவன் இஷ்டத்திற்கு விரோதமாக எது செய்தாலும் அதனால் அவன் உயிருக்கே ஆபத்து விளையும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். ஆகவே, உடனே புகைப்படம் எடுக்கவும் ஏற்பாடு செய்தார்.

எல்லாம் விளையாட்டுப் போல எப்படி நடந்து விட்டன! எப்படி அமைதியான முகத்துடன் செண்பகத்தின் உடலுக்குத்

தாலி கட்டினானோ, அதே அமைதியான முகத்துடன் அன்று மாலை அவளுக்குக் கொள்ளியும் வைத்தான் தண்டபாணி.

இரவு அவனைத் தன்னுடன் அழைத்துவந்து, தன் வீட்டிலேயே படுக்க வைத்தார் டாக்டர்.

அவன் யாரிடமும் எதுவும் பேசவில்லை, யாருடைய பேச்சையும் காதில் வாங்கிக் கொள்ளவும் இல்லை.

தன் இதயத்திலே அமர்ந்து விட்ட செண்பகத்துடன் தனிமையில் ஏதோ பேசிக்கொண்டிருப்பதைப் போல இருந்தது அவன் நிலை.

'இன்று இப்படித்தான் இருக்கும் போகப் போகத்தான் மன அதிர்ச்சி நீங்க வேண்டும்!' என்று நினைத்துக் கொண்டார் டாக்டர்.

ஆனால்......

பொழுது புலர்ந்து கண் விழித்தபோது அவருக்குத்தான் அதிர்ச்சி காத்திருந்தது. அருகே படுக்கையில் தண்டபாணியைக் காணோம்.

'எங்கே போய்விட்டான்?'

படுக்கையில் கிடந்த வெள்ளைக் காகிதம் டாக்டரின் மனசு எழுப்பிய கேள்விக்குப் பதில் கூறிற்று.

'நான் எங்கே போகிறேன் என்று எனக்கே தெரியாது. எங்கோ போகிறேன். இனி இந்த ஊருக்குத் திரும்பும் உத்தேச மில்லை. தயவு செய்து என்னைத் தேடாதீர்கள்.

—தண்டபாணி.

டாக்டர் உடனேயே தண்டபாணியின் வீட்டுக்குச் சொல்லி அனுப்பினார். அவன் பெற்றோர் அலறிப்புடைத்துக் கொண்டு ஓடிவந்தார்கள்,

மூலைக்கொருவராய் அவனைத்தேடி ஆட்கள் புறப்பட்டனர்.

பொழுது ஓடிவிட்டது. போனவர்கள்தான் திரும்பினார் கள். தண்டபாணி என்ன ஆனானோ?

* * *

வெளியே கதவு தட்டப்பட்டது. டாக்டர் எழுந்து போய்த் திறந்தார்.

போட்டோ ஸ்டுடியோவிலிருந்து வந்திருந்த ஓர் ஆள் ஒரு கவரை நீட்டினான்.

அதை வாங்கி உறையைத் திறந்தார் டாக்டர்.

உள்ளே இருந்த புகைப் படத்தில் ஜோடிப் பறவை களைப்போல் தண்டபாணியும் செண்பகமும் மாலையும் கழுத்துமாய்...

தன்னை மீறிய இன்பப் போதையில் கிறங்கியதைப் போலத்தான் செண்பகம் அதில் காட்சி தந்தாள்.

டாக்டரின் பார்வையை நீர்த்திரை மறைத்தது. கண்ணைத் துடைத்துக் கொண்டு வெளியே பார்த்தார். வெளியில் இருள் பரவிக்கொண்டிருந்தது.

**(தினமணி கதிர் 27-7-1958)**



திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த நான்குனேரி யில் 20-5-1930இல் பிறந்த பீஷ்மன் 1-1-1948 முதல் பத்திரிகைகளில் புனைபெயரில் கதைகளும் இயற்பெயரில் கவிதைகளும் எழுதி வருகிறார். இவருடைய இயற்பெயர் நா. சீ. வரதராஜன். 1950இல் அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு கல்கி தேர்ந்தெடுத்தனுப்பிய நான்கு தமிழ்ச் சிறுகதைகளில் இவர் எழுதிய 'மனக்குரங்கு' என்ற கதையும் ஒன்றாகும். அமுதசுரபி தீபாவளி மலர்ச் சிறுகதைப் போட்டி களில் இவர் கதைகள் பரிசு பெற்றுள்ளன. இவர் எழுதிய 'ஆத்மாவின் மன்னிப்பு', 'தூவானம்' என்ற இரண்டு சிறுகதைத் தொகுப்புகள் ஏற்கனவே வெளியாகியுள்ளன. 'அஞ்சலிப் பூக்கள்' 'கானூர் கந்தன் திருப்புகழ்' என்னும் இரண்டு கவிதை நூல்களும் வெளியாகியுள்ளன. சைதை பாரதி கலைக் கழகத்தால் 'கவிமாமணி' விருதளித்துப் பாராட்டுப் பெற்றார்.

இவருடைய சில கதைகள் இந்தி, ஆங்கிலம், மலையாளம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

200க்கு மேற்பட்ட சிறுகதைகளும் 3 குறுநாவல்களும் ஏராளமான கவிதைகளும் எழுதியுள்ளார்.